ITHIHASA MANJARI SERIES.

உ

வேலுமயிலுந்துணை.

# கந்தபுராணவசனம்.

யுத்தகாண்டம், தேவகாண்டம், தட்சகாண்டம்,

உபதேசகாண்டம்.



இவை

திருமயிலை-வித்வான்,

சண்முகம்பிள்ளையவர்களால்

பரிசோதிக்கப்பட்டு,

ப-மு. செல்வராஜமுதலியாரவர்களால்

தமது

சென்னை அமரிக்கன் அச்சுக்கூடத்தில்

பதிப்பித்துப்பிரசுரிக்கப்பட்டன.

1891

# அட்டவணை

## கந்தபுராணத்தில்

## யுத்தகாண்டம், தேவகாண்டம், தட்சகாண்டம், உபதேசகாண்டம்

ஆகிய நான்குகாண்டங்களும் அடங்கியிருக்கின்றன.

---



---

முருகன் றுணை.

# யுத்தகாண்டம்.

## ஏமகூடப்படலம்.

நாரண னென்னுந் தேவு நான்முகத் தவனு முக்கட்
பூரணன் றானு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி
ஆரண முடிவுந் தேறா வாதியா யுயிர்கட் கெல்லாங்
காரண னாய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம்.

வலியுள்ளாராகிய அரக்கரை வெற்றிகொள்ள வேற்படையேந்திய குமர நாயகனேசெல்லுகின்றான், தேவர்களோ அப்பெருமானைப்புடைசூழ்ந்துசெல் கின்றனரோ, துண்ணென்று யானும் போகாதொழிவது சூழ்ச்சியன்றென்றெ ண்ணித் தோன்றுவான்போலச் சூரியனும்வந்துதயமானான். இவ்வாறுசூரியன் உதயமலையினிடத்தே தோன்றியபோது சிங்காசனத்தில் எழுந்தருளியிருக் கும் சண்முகங்கொண்ட சதுரப்பெருமான் பிரமன் மாலிந்திரன் முதலிய தேவர்கள் பிறரும் கேட்க வீரவாகு தேவனைநோக்கிப் பாவமே செய்துழலு கின்ற சூரபதுமன் முதலிய அவுணர்கள் முடிவாராக; தேவர்க ளிடுக்க ணீங்க நாம் மகேந்திரநகரத்துக் கிப்போதே போகவேண்டும், அதற்காகவிரைந் து நீ தேரைக்கொண்டுவரக் கட்டளையிடவேண்டுமென்றான். அதைக்கேட்ட பிரமன் மாலிந்திரன்முதலிய தேவர்கள் ஆனந்தக்கடலி லழுந்தி எங்கள் துயர மின்றோடே தீர்ந்தது தீர்ந்ததென்றே சொல்லி யாடிப்பாடி அக்குகப் பெருமானது பாத தாமரையைத் தமது முடிமேற் சூடிக்கொண்டனர். அப்போது கயிலையைக் காவல்செய்யும் நந்தியம்பெருமானது கணத்தலை மைபூண்ட வீரவாகுதேவரும் மகாபாக்கியமென்றே நமது சரவணப்பெருமா னுடைய தேர்ச்சாரதியாகிய வாயு பகவானை யழைத்துத் தேரைக்கொண்டு வரக் கட்டளையிட்டார். அவனும் அக்கட்டளையைச்சிர மேற்கொண்டு அத் தேரைக் கொண்டுவந்து சண்முகங்கொண்ட தயாநிதியாகிய இறைவனது சந்நிதானத்தின் முன்னே நிறுத்தினான். அதைக் கருணையால்நோக்கிய கட வுட்பெருமான் வேதங்கள் துதிக்கச் சிங்காசனத்தினின்று மிழிந்து மேரு மலையிற் பன்னிரு சூரியரும் ஒருங்கே பிரகாசித்தாற்போல அத்தேரில் எழுந்தருளிச்சூரபதுமனைச் சங்கரிக்கவெழுந்தருளுகின்றோம்,நீங்களும் வெகு சிக்கிரமாக உங்கள் வாகனங்களி லேறி நம்முடன் வாருங்கோளென்று கட் டளையிட்டனன். அதைக்கேட்ட பிரமன்அன்னமும், திருமால் கருடனுமேறி யும், இந்திரன் விமானத்தும், மற்றதேவர்கள் தத்தம் வாகனங்களிலு மேறிப்

பின்றொடர்ந்தனர். அதன் பின்னே வீரவாகுதேவரோ முதலிய இலக்கத்தொ ன்பதின்மரும் தத்தம்தேர்களிலேறிப் பின்றொடர்ந்தனர்.

பின்னே சுப்பிரன், மேகமாலி, சுவேதசிரிடன், கபாலி, அப்பிரசித்து, சித்திராங்கன், சுவாலதாலு, வச்சிரன், வீமன், உக்கிரன், உக்கிரோசன், பிப்பிலன், நந்திசேனன், பிரமசன், பிரமசேனன், பதுமன், கராளன், தண்டன், பத்திரன், பரிகநேமி, உதங்கன், புட்பதந்தன், உருத்திராகாரன், வீரன், மதிசயன், சேதுமாலி, வக்கிரன், பிரமகேசி; அதிபதி, கலிங்கன், கோரன், அச்சுதன், அசலன், சாந்தன், சித்திரசேனன், பூரி, சுசீலன், மாசயன், சிங்கன், உத்தாசிங்கன், உபதிட்டன், சயன், ஈசன், மத்தகன், மதங்கன், சண்டி, மகாபலன், சுவேதன், நீலபத்திரன், சுவாகு, வண்டாபரணன், காகபாதன், பிங்கலன், சமானன், மாயன், நிகும்பன், கும்பன், சங்கபாலன், விசாகன், சதநாதன், அயக்கிரீவன், சகத்திரவாகு, அயுதத்தன், அனந்தன், வாமன், மங்கலகேசன், சோமன், வச்சிரமாலி, கண்டன், அசமுகன், சரபன், குந்தன், ஆடகன், கவந்தன், மேகன், விசயன், வித்துருமன், தண்டி, வியாக்கிரமன், காலபாசன், தசமுகன், குமுதன், பானு, தனஞ்செயன், இடபரூபன், சிசுமுகன், அனலசேகன், சுபத்திரன், கேது, மோகன், மத்தன், உன்மத்தன், நந்தி, மனோபவன், வாயுவேகன், சகத்திரபாதன், பானுகம்பன், பதங்கன், சுத்தன், அனிகன், சிதன், அனுதன், ஏகமாலி, மாலி, அத்திரி, அசுராந்தகன், அரிகேசன், சுவாலகேசன் என்று சொல்லப்பட்ட இந்நூற்றெட்டுப்பேரும் பூதவெள்ளத்தின் தலைவரென்று சொல்லப்படுவர். அவரோ மிக்க கோபம்படைத்துடையவர், உலகமுழுதும் வெல்லக்கட்டளையிட்டால் ஒருநொடிப்போதிலே வெற்றிகொள்ள வல்லவர், வெற்றித்திருவுடையவர், பெருவலிபடைத்துடையவர், இவர்களும் பிள்ளையாரைச் சூழ்ந்தே சென்றனர். இவ்வாறு இவர்கள் சூழ்ந்து செல்லவே, இதைக்கண்ட பூதவீரரோ இரண்டாயிர வெள்ளங்தொகையினையுடையாராய் உலகமு மலைகளு நடுநடுங்க ஆரவாரித்துச்சென்றனர். தேவர்களோஇறைவன் போர்க்கோலங்கொள்ளப் படையெடுத்தது கண்டு பூமழை பொழிந்தனர், பூத வெள்ளத்தின் ஆரவாரமோ மண்ணும்விண்ணும் திசையுஞ் செவிடுபட்டன, சமுத்திரமுங் கொந்தளித்தது, மேகம் வருந்தியது, அண்டமும் நெக்குப்பட்டுடைந்தது. பேரி, கரடிகை, துடி, எக்காளம், சல்லரி, திமிலை, தக்கை, மத்தளம், கடகம், சங்கு, உடுக்கை, ஊதுகொம்பு, குடமுழா முதலிய வாத்தியங்களையும் பல பூதங்களு முழக்கிச்சென்றன.

இவ்வாறு தேன்பெருக்கெடுத்தோடுகின்ற மலர்மாலையணிந்த தோளையுடைய பூதப்படை வெள்ளம் அங்கே செல்வதனல் விரிந்த புழுதியின் தொகுதிசுடர்களைமாற்றி அகிலமுந்தானேயாய்க் கடலினைத் திடராக்கிவிட்டது, இங்ஙனஞ் சென்ற பூதவெள்ளம் வேற்படையேந்திய வித்தகன் சேவடியைத் துதித்துக்கொண்டுசூழ்ந்து மலைகள்போகுந்தன்மைபோற்சென்றுதத்தந்தலைவருடன் கடற்கரையையேயடைந்தன. சிங்கம்போன்ற தோளாற்றலையுடைய பூதவெள்ளமோ, வீரகண்டைகாலிற்சத்தித்தலால் அலைகள்கொந்தளிக்கக்கட

லேவழியாக நடந்தன, இவ்வகையாகத் தமதுபூதவீரர் கடல்வழியே சாரவும் தமது தம்பியருடன் பிரமனும் மாலும் இந்திரனும் தேவர்களும் சூழ்ந்துவரவும்ஆறுமுகங்கொண்ட பெருமான் தாம் தேரிலே யெழுந்தருளி ஆகாயமே வழியாகக் கொண்டெழுந்தருளினன். தம்மொடு மாறுபட்டவர் மேன் மிக்க வெற்றியையுடைய பூதவீரர்செல்லவே கடலோ அலமந்து தெளிவகன்று சேறுபட்டதன்றி நீறுபட்டெழுந்து எவ்வுலகமு நிமிர்ந்துசென்றுசூழ்ந்தது. இவ்வாறுகுமாரநாயகனே இரண்டாயிரவெள்ளம் பூதவீரர்தம்மைப்புடைசூழ்ந்துவரக் கடன்முகமாகச் சென்று முன்னே தூதாகச் சூரபதுமனிடமனுப்பிய வீரவாகுதேவரால் வருந்திக்கிடந்த இலங்கையையும் கடந்து மகேந்திரநகரையுமடைந்தான்.

அவ்வாறு குகப்பெருமான் எழுந்தருளவே, அயலிற்சென்று கைகூப்பிப் பிரமனு மாலு மிந்திரனும் அன்பொடு செல்வாராயினர். இதுவோ சூரபதுமனுடைய மகேந்திரநகரமாகும், இதுவோ கொடிய மாபாவிகள் வசித்தற் கிடமாயிருப்பது, அதனால் இந்நகரத்திற் பொருந்தியிருப்பது முறையேயன்று, இதற்கடுத்த வெல்லையாகிய இவ்விடத்தில் பாசறை சமைத்து வசிப்பதே தகுதியென்றும், வேண்டியவற்றை விரையநாடிச் செய்துகொள்ளலாமென்றும் வேண்டிக்கொள்ள, அதைத்தாம்திருச்செவிசாத்தியதன்றிநன்றென்றே தன்னருட்கட்கடைசாத்தியருளித் தெய்வத்தச்சனையழைத்துப் பாசறை சமைத்துத்தரவேண்டுமென்று கட்டளையிட, அதைக்கேட்டு மகாபாக்கியமென்று தலைமேற்கொண்டு அத்தெய்வத்தச்சனும் இளைய பிள்ளையாரைப் பணிந்து இதோ ஒரு நொடிப்போதிற் சமைக்கின்றேனென்று விடைபெற்றுக்கொண்டு மாடங்களும் கூடங்களும் மண்டபங்களும் சோலைகளும் வாவிகளும் கோபுரங்களும் வீதிகளும் கோடிகோடியாகச் சமைத்தான்; இவ்வாறு அவனே நகரமொன்றுண்டாக்கி அதற்கேமகூடமென்று பெயருமிட்டு இறைவனிடத்திற் சமைத்துமுடிந்ததென்றும்விண்ணப்பித்தான். கந்தப்பெருமானே தன்மனத்தால்வெகு சித்திரமாகத் தெய்வத்தச்சன் செய்துமுடித்த அப்பாசறையைக்கண்டு மனமகிழ்ந்து அதிலெழுந்தருளினன், தேவர்கள்யாவரும் மூவிருமுகத்து அம்முதல்வனைப் பலவகையாகத் துதித்துநின்றனர். பின்பு இறைவன் தனேறிருந்த் தேரினின்றுமிழிந்து தமக்காகச் சமைத்திருக்கும் மந்திரத்தையடைந்தருளவெண்ணி அளவில்லாத பூதசேனைகளுக்கு அவரவர் தரத்துக்கேற்ற ஆவணத்திலிருத்திப் பின்புபிரமன்மால்முதலிய தேவர்கள் தன்னை வழிபடவெழுந்தருளியிருந்தான்.

ஏமகூடப்படலம்

முற்றிற்று.

---



## வரவுகேள்விப்படலம்.

ஏக நாயகனாகிய இறைவன் இவ்விடத்தி லெழுந்தருளி யிருக்கையில் தேவர்பாலன்புவைத்துள்ள நாரதமுனிவரோ அவற்றையாராய்ந்து ஆகாயமளாவிய கோபுரஞ்சூழ்ந்த மகேந்திரநகரத்திற் சென்று சூரபதுமனைக்கண்டு மூங்கிலேபோல இத்தியவனாகிய சூரபதுமன் இறக்கநினைத்து தம்வாயால் தக்க ஆசிகள்கூறிநின்றார். அதைக்கண்ட சூரபதுமன் நாரதமுனிவரைப்பார்த்து நீர் எங்கிருப்பது,இங்கேவந்தகாரணமென்ன? நீர்யாரென்றுசொல்ல, அதற்கு நாரதமுனிவரும் நான் மங்கையோர்பாகத்துப் பரமசிவன் அன்பாய் எழுந்தருளியிருக்கும் கயிலையில் வசிப்பவன், உங்குலம் தலைமையேயடைய எப்போதும் தவஞ்செய்கின்றவன், வஞ்சமோ பேசியறியேன், காமமுதலிய அறுவகைப்பகைகளையு நீங்கி மெய்த்தவஞ் செய்துவருவேன், தேவர்களுக்கே துன்பத்தினைச்சூழ்வேன், குற்றமற்ற சுக்கிராசாரியாரோடு பெருநண்புடையேன், உன்னிடத்தே யடைந்தே யொன்றுசொல்லவந்தேன், நானே நாரதனென்னும் பெயருள்ளேன், நின்னைச்சிந்தும்படி மதிமுடிபுனைந்த கண்ணுதலேயடுதல் செய்ய முருகனைத் தன் நெற்றிமேலொற்றை நாட்டத்தினின்றும் தோன்றுந் தீப்பொறிகளால் அளிக்க அவ்வாறுவந்த அம்முருகனிடத்தே உன்பணிசெய்துவரும் தேவர்களெல்லாரும் சென்று குற்றேவல்செய்துவருகின்றனர். தன்னை அப்படி சேவித்துழலும் தேவர்கள் நீ செய்த கொடுந்துயரமெல்லாம் எடுத்துச்சொல்லிவிண்ணப்பித்தனர் அதைத்திருச்செவிசாத்தியருளியமுருகப்பெருமானே நீங்கள் அஞ்சவே வேண்டாமென்று சிவனருள் மேற்கொண்டு பூதவெள்ளத்துடன்தானெழுந்தருளி உன் தம்பியாகிய தாரகனைக் கிரவுஞ்சமலையொடும் மாயாபுரியிற் கொன்றுகளைந்தான். அப்படிசெய்த பின்பு அம்மாயாபுரியைக் கடந்து செந்திலென்றும் சீரலைவாயென்றும் கந்தாசலமென்றும் சொல்லப்படும் திருப்படை வீட்டையடைந்து உன் பால் வீரவாகு தேவனென்னும் தூதனைவிடுத்தான். அவன்வந்து மீண்டபின் அழிவானுடிக் கடலையுங்கடந்து தன்பாலெருங்கிய சேனையுடனே புறப்பட்டு இந்நகர்க்கு வடபாலில்சேனையை இறுத்தெழுந்தருளியிருக்கின்றான். அப்படியெழுந்தருளிய குமரநாயகனே தனக்குப் பாடிவீடொன்று சமைத்துக்கொண்டமையால் சேனைகளெல்லாம் அவனைச்சூழவிருக்கின்றன, இதுதான் நடந்தவண்ணமென்று நாரதமுனிவரெடுத்துச்சொல்ல அதைக்கேட்ட சூரபதுமன் நெருப்பேபோன்றுசீறிநகைத்திவற்றைச் சொல்லலாயினன்.

முனிவர்பெருமானே! என் மகேந்திரநகரை இந்திரனுடைய அமராவதி போலவும், திருமாலினது வைகுந்தநகரம்போலவும், பிரமனுடைய மனோவதி நகரம்போலவும் எண்ணிவிட்டானே! ஆயிரகோடி யண்டங்களையும் அரசாண்டுவருகின்ற என் இராசதானிமேல் ஒருசிறுபாலகன் போர்செய்யப்புறப்பட்டுவந்திருக்கின்றானே! குகையிலிருக்கும் சிங்கத்தைவெல்ல நினைந்து யானைக்கன்று, மான், கலைமுதலிய மிருகங்கள் போர்செய்ய வந்தனபோலிருக்கின்றதன்றோ! அக்குழந்தையாகிய முருகனும் தன்சேனையுடன் இங்கே

வந்தமுறைமை! அவனே சமுத்திரமுங்கடந்து என்னுணையுமிகழ்ந்து பூத சேனையுடன் கவர்வானும்! நானே அவன்பாலனென்றேவிடமாட்டேன், அவனுடன் போர்செய்வதனுற் பழிவருமென்பதும் பாரோன்; முன்னே யொருதந்திரத்தால் என் தங்கையாகிய அசமுகியினுடையகையைச்சிதைத்த அப்பகைவர்களாகிய தேவர்களெல்லாரும்பிழைத்துவிட்டார்களோ! இக்குமரனேஎன் தம்பியாகிய தாரகனைக் கிரவுஞ்சமலையுடன் வென்றதை யெண்ணியே தன்னுயிர்போவதறியாமல் இம்மகேந்திர நகரினும்வந்து சேனையையிறுத்தான். என்பெயரை யெடுத்துச்சொன்னாலும் மாலே யயனே இந்திரனேமுதலிய தேவர்களெல்லாரும்அஞ்சிமறைவார்களே! அப்படியிருக்கபூழிமலரைமுடித்த சடாமகுடத்தையுடைய சிவகுமாரனே பகைத்து என்னேடும் போர்செய்ய வல்லவன். அந்தச் சூரியனைத் தொட்டிலில் விளையாட்டிக் கொண்டிருந்த காலத்தே பாய்ந்து சிறைப்படுத்திய என்மகனுகிய பானுகோபனைக்கொண்டு பூதவீரரையும் இலக்கத்தொன்பதின்மரையும்முடிப்பித்து அவனையும்வெற்றிக் கொள்வேன், இன்று நீயே பார்க்கப்போகிருய்! என்று சூரபதுமன்சொல்ல, நாரதமுனிவர் அதைக்கேட்டு இது நன்ருயிருக்கின்றது! நன்ருயிருக்கின்றது! நீ தாமதிக்கவேண்டாம், இந்நகரத்தைச் சூழ்ந்துகொண்ட குமரநாயகனுடன் போர்செய்ய விரைவாக உன்சேனையையேவுதலே தகுதி நானும் உங்களுக்கே வெற்றியுண்டாவதாகத் தவஞ்செய்யச் செல்கின்றேனென்று ஆகாயமார்க்மாகவே போனுன்.

நாரதமுனிவனே இவ்வாறு சொல்லிவிட்டு. ஆகாயமார்க்கமாகப் போய் விடவே,சூரபதுமன் விரைந்து தன்னயலிலேநின்ற கோரன்உற்கோரனென்று சொல்லப்படும் தூதுவரை நோக்கி வருணனைக் கொண்டுவாருங்களென்று கட்டளையிட்டான்.அதைக்கேட்ட தூதுவரிருவருமோடி அவ்வருணனிடத்தே சென்று அவனை யழைத்துக்கொண்டுவந்து அவனெதிரே நிறுத்தினர். வருணனும் மனநடுங்கி கைகூப்பிக்கொண்டு பயந்து நின்ருன். அவ்வாறுவந்த வருணனை நெருப்பெழ நோக்கிப் பிரமன் மால் என்னுமிருவராலு மறிவரிய நம்பெருமான் மகனுகிய முருகனையும் அவனைத்தொடர்ந்துசெல்லும் பூதவீரரையும் நமக்குமாருக எவ்விதம் நமது நகரத்திற்கேபுக விட்டனையென்று சொல்ல, அதைக்கேட்ட வருணனே இறைவ! அக்குமரநாயகன் பிரமன் மா லிந்திரன் இலக்கத்தொன்பதின்மராகிய வீரர்கள் தேவர்கள் என்னுமிவர்கள் தன்னைப்புடைசூழ ஆகாயமார்க்கமாகவே எழுந்தருளினன். இவ்வாறு குமரநாயகனைப் புடைசூழ்ந்து வீரர்களும் தேவர்களும் ஆகாயமார்க்கமாகப் போகக்கண்டு பூதவீரர்கள்என்பால்நடந்தேசென்றனர். நான் அவர்களுடைய காற்பரட்டளவாகவே யிருந்தேனென்ருல் என்னல் அவர்களைத்தடைசெய்ய வல்லமையுண்டோ! ஊழிகாலத்துமழியாதபூதவீரர் விரைந்துசெல்ல அவர்கள் பாதத்திலெழும் தூசியால் சேறுபட்டு இடையருமல் புலம்பாநிற்கின்றேன். நானே ஆழமுடைமையால் ஆழியென்று சொல்லப்பட்ட பேருமிழந்தேன், வசையும்பெற்றேன்; அவர்கள் அகத்தியர் கையால்வாரி யுள்ளுறக்கொண்டது போல் என்னை விரைந்துண்பார்கள்போலாம்,அக்குமரநாயகனேடும் கூட்டமா

கச்சென்ற பூதவீரர்களில் ஒவ்வொருவரோ யொருகுடங்கையா லள்ளிக்குடிக் கச்சகியேன் ; ஆகையால் நான் பிழைத்தேனல்லது வேறல்லேன் ; உலகத் தில் இடியை நாகமும் விலக்கவல்லதோ! சிங்கத்தை யானையும் வெல்ல வல்லதோ! விதியை மதியும் கடக்கவல்லதோ! நானும் அப்பூதவீரனைத் தடுக்கவல்லேனேவென்றுநடுங்கியெடுத்துச்சொல்லிக்கொண்டிருக்கையில் சில தூதுவரோடிவந்து நமது நகரத்திற்கு வடபால் பிரமன் மா லிந்திரன் தேவர் கள் இலக்கத்தொன்பதின்மர் பூதவீரர் இரண்டாயிரம்வெள்ளம் தன்னைப் புடைசூழ முருகனே வந்துவிட்டு தனக்குத்தெய்வக்கம்மியன் பாசறைசெய்து கொடுக்கப்பெற்று அப்பாசறை நடுவிலே ஏமகூடமென்னும் பெயருள்ள நகர மொன்றுண்டாக்கிக்கொண்டு அதில் வசித்துக்கொண்டிருக்கின்றான், நாங் கள் அதைக்கண்ணாரக்கண்டு உமது சந்நிதானத்தில் தெரிவித்துவிட்டோம், இனி நீர் செய்யத்தக்க முயற்சிகளைச் செய்யவேண்டுமென்று சொல்லினர். அதைக்கேட்ட சூரபதுமன் அண்டமும் புவனங்களும் அலமரும்படித் தீப் போற்கொதித்துப்புண்விளங்கினாற்போன்றகண்ணுடையானாகிஇவற்றைச்சொ ல்லத் தொடங்கினன்.

வரவுகேள்விப்படலம்.

முற்றிற்று.

---

## முதனாள்பானுகோபன்யுத்தப்படலம்.

தூதர்களே! நீங்கள் விரைந்து சென்று என்மகனாகிய பானுகோபனை யழையுங்கோள் யான்முருகன்பேராற்றலும், பூதராற்றலும் தூதுசொல்லவந்த வனுடைய ஆற்றலும் மற்றவீரர்களாற்றலும் தொலைப்பேன்! என்று சொல்ல, அதைக்கேட்டதூதர்கள்பானுகோபனுடையமாளிகையையடைந்து அவனைக் கண்டு அவன் தந்தையிட்ட பணியைத் தெரிவித்தார்கள். பானுகோபனே அதைக்கேட்டுச் சிங்காசனத்தினின்றுமிழிந்து தன் தந்தை நகரத்திற்குப்போ கும்படி துணிய, அதையறிந்த மந்திரத்தலைவரும்சுற்றத்தாரும் சேனைத்தலை வரும்பார்த்து அவனைப் புடைசூழ்ந்து சென்றனர். இடியோசைபோலும் பல வகையான வாத்தியங்களும்ஆரவாரித்தன. பதாதிசூழ்ந்தன. அத்தருணத்தில் பானுகோபன் ஓரழகிய தேரிலெழுந்தருளி ஆயிரகோடி வீதிகளையும் கடந்து தன்னைக் கண்டவீரர்களிற் பலரும் வணங்கச்சென்று தன் பிதாவாகிய சூர பதுமனுடைய நகரமடைந்து தன்தேரை விட்டிழிந்து தன் பிதாவினது திரு மாளிகையினுட்புகுந்து அவனை எட்டுறுப் புநிலமுறப்பணிந்து தேவரீர் அடி யேனையழைத்த காரிய மென்னவென்று கேட்டான் ; அதற்குச் சூரபதும னும் சொல்லத்தொடங்கினன். என்மகனாகிய பானுகோபனே! உன் சிறிய தந்தையாகிய தாரகனையும் கிரவுஞ்சமலையுடன் வெற்றிகொண்ட கந்தனே செந்திற்பதியையகன்று சமுத்திரத்தையுங்கடந்து நந்திதேவருடைய கணத் தலைவரும் பூதகணங்களும்புடைசூழ இந்நகரத்தின்வடபால் வந்திருக்கின் றானாம், அவனைச் சூழ்ந்து பிரமன்மாலிந்திரன் முதலிய தேவர்களுமிருக்கின்

ரூர்களாம், ஏழைகளாகிய அத்தேவர்களும்சிவகுமாரனும் நந்திகணத்தவரும் பூதவீரரும் விரைந்து வந்தடைவதற்கு எளிதாகவாய்விட்ட தல்லவோ நமது நகரம்; இது நன்றாயிருக்கின்றது; என்தம்பியையும் கிரவுஞ்சத்தையும் வச்சிரவாகுவையு முடித்த பகைவரைக் கொன்று களைவதென் கடனாயிருக்க அப்படியே யான் செய்யாதிருந்தது மன்னவர் மன்னவனாகிய முறைமை பற்றியென்றே துணியவேண்டும். இந்திரன் வேண்டுவதற்கிரங்கிப்பரமசிவனே தன் குமரனைக்கொண்டு பூதவீரரையுந் துணைகூட்டி என்னுடன் போர்செய்ய விடுத்தான்; ஆகையால் நானும் என் மகனாகிய உன்னைக்கொண்டே அவர்களைக்கொன்றுகளைந்துவெற்றிபெறுவதுவழக்காகும்; இனி உன் படையுடன் சென்று போர்க்களமடைந்து நந்திகணத்தவரையும் பூதவீரர் இரண்டாயிர வெள்ளத்தையும் முருகனுடன் வெற்றிகொண்டு என்முன் வரவேண்டுகின்றேன், நீ விரைந்துபோவென்று கட்டளையிட்டான்.

இப்படிசொல்லிய சூரபதுமன் கட்டளையை யறிந்த பானுகோபன் தன் தோள்மலையினும் வீங்கவுடல் புளகமரும்ப நின்று தன் தந்தையை வணங்கி நான் சிவகுமாரனை அவனுடன்வந்த பூதவீரர்களுடன்கொன்றுகளைந்துவருவதோ எனக்கொருபொருளன்று, இதைக்கருதியே இப்படிசொல்லவேண்டும், நான் அப்படிவெற்றிகொண்டு பிரமன் மாலிந்திரன்முதலிய தேவர்களையும் இமையோரையிற் பற்றிகொண்டுவந்து உமது சந்நிதானத்தில் விடுகின்றேன்; நீரோ தகுதியானவற்றைச் செய்யலாமென்றுசொல்லி வணங்கினான், சூரபதுமனும் நன்று நன்றென்று அம்மகனுக்கு விடைகொடுக்க, அதனையேற்றுத் தன்தேரின்மேலேறித் தன்னைப் பரிசனம்புடைசூழ அநேகம் துணைவரும் நெருங்கப் பலவாத்தியமுமுழங்கத் தன்மாளிகையையடைந்து தேரினின்றுமிழிந்து தன்மருங்கிருந்த தூதனையழைத்து நமதுசேனைமுழுவதும் இங்கே கொண்டுவாருமென்று கட்டளையிட்டுத் தன்னாயுதசாலையிற்சென்று பூசனை செய்து கச்சணிந்துவயிரவாளைமருங்கிற்சேர்த்துப் பொன்னுடையைத்தரித்து வீரக்கழலையணிந்து மார்பிற்கவசம்பூண்டு விற்கோதையைக்கையிற்சுற்றி யம்புப்புட்டிலைக்கட்டிக்கொண்டு நெற்றியில் வீரபட்டிகையைச்சேர்த்திப் பலவாபரணங்களையும் புனைந்துபோர்க்கெழுமாலையாகிய தும்பைமாலையை முடியிலே சூடி எனக்குவெற்றியுண்டாகவேண்டுமென்று வில்லைக்கையிலேந்தி யாவரையும்வெல்லுவதாகிய மோகனாஸ்த்திரத்தையுமெடுத்துக்கொண்டு புறப்பட்டான், அவுணவீரரிடம்தூதுவர்களோடிச் சென்றழைத்தவுடனே அவர்களும் போர்க்குரிய ஆயுதமுதலியவற்றையெல்லாமெடுத்துக்கொண்டு அந்நகரவாசலின்முன் வந்துநின்றார்கள். அவனைச்சூழ்ந்தவீரர்களோவிசயன், நேமியன், மாயன், முசலி, கண்டகன், முரன், கரன், மூர்க்கன், தசமுகன், கனலி, சண்டன், விசண்டன், அசமுகன், மகிடன், அக்கிரவாகு, விசயசேனன், விடசேனன், விமோகன், சோமகன், மது, சசிசித்து, சுகிமுகன், அசனி, சூனியகேது, அசுரசேனன் முதலானவர்கள், பலதெய்வப்படைக்கலங்களையேந்திக்கொண்டுசூழ்ந்தார்கள். அப்போது பதினாயிரவெள்ளம் தானவப்படைகள் கடலுநாணமடைய வாரவாரித்துக்கொண்டு சிலை, கதை, தோமரம், சூலம், சக்கரம், வேல், வாள்,

வில்முதலிய படைகளையேந்திக்கொண்டு நடந்து சென்றனர். தேர், குதிரை, யானை, வீரர்களில் பதினாயிரம்வெள்ளம் சென்றன. இப்படி இருபதினாயிர வெள்ளஞ்சேனை புடைசூழ்ந்து மனோவேகமும் பின்னடையச்சென்றன. இவ்வாறுசென்ற படைவிரைந்துசென்று பானுகோபனை வணங்கப் பானுகோப னும் தன்னேவலனொருவனை நோக்கிப் தேரைவிரைந்துகொண்டுவாக்கட்டளை யிட்டான். அக்கட்டளையைச்சிரமேற்கொண்ட அந்தவேவலாளனும்அவ்வாறே தேரைக் கடிதிற்கொண்டுவர அத்தேரிலேறினன். அதைக்கண்ட தானவர் சேனை யாரவாரித்தன, சிலர் சாமரையிரட்டினர், சிலர் குடைகள்கவித்தனர், சிலர் அடப்பை, கோடிகம், வாள், பீலி, களாசி முதலியவற்றை யேந்திக் கொண்டுவந்தனர். இவ்வாறுவரக்கண்ட பானுகோபன் தன்மருங்கேயிருந்த ஒற்றரைக்கூவியழைத்து சேமத்தேர் ஒருகோடி கொணருங்கோளென்று சொல்ல, அவ்வாறே கொண்டுவந்து நின்றனர். பின்பு பானுகோபன் தன் சாரதியைப்பார்த்து நமது தேரை முருகனிருக்கையைநோக்கிச் செலுத்த வேண்டுமென்று கட்டளையிட்டான். அக்கட்டளையை மேற்கொண்ட சாரதி யோ முப்பதினாயிரம் பரிகள்பூண்ட அத்தேரை விரைவாகச்செலுத்தினன். சேனையும் ஆரவாரித்தன. பேரிகை, சங்கம், காகளம், ஊதுகொம்பு, சல் லரி, தடாரி, மத்தளம், தக்கைமுதலிய வாத்தியங்களும் முழங்கப்பட்டன; தேர், குதிரை, யானை, சேனை, துவசம், சண்டை, அணிகள் இவைகளுமார வாரித்தன. அந்நகரமுமாரவாரித்தது ; அப்போது பூமியுமதிர்ந்தது ; நாகங் களுமலைந்தன, தாரகைகளுமுதிர்ந்தன, தேவர்களு முலைந்தனர், மேகங்களும் பிதிர்ந்தன, மேருமலைவிண்டுபிளந்தது, சத்தகுலவரைகளும் பிதிர்ந்தன, இவ் வாறு பானுகோபன் தன்சேனையொடும்வரக்கண்ட சூரியனோபயந்து ஆகாய முழுதும் புழுதிமூடத்தான் அதின் மறைந்துபோயினன். நாரதமுனிவரோ பானுகோபன் சேனையுடன்வரக்கண்டு அகன்றுஆகாயமே வழியாகக்கொண்டு பூதர்விரும்பிச்சூழ்ந்திருக்கின்றபாசறையாகியஏமகூடத்தையடைந்து தேவர் சேனாதிபதியாகிய சண்முகத்தெந்தயாகிதியையடைந்து தரிசித்து அவருக்கு விண்ணப்பிக்கலாயினர். இறைவனே! தேவரீர் பூதவெள்ளத்துடன் விரைந் தெழுந்தருளியிருக்கின்றதன்மையை தூதரால் சூரபதுமன்கேட்டறிந்துவெகு ண்டு பானுகோபனை உம்மேல் போர்செய்ய விடுத்திருக்கின்றான். அவனோ அக்கட்டளையை மேற்கொண்டு போர்க்கோலங்கொண்டு தன்னோடு கடற் பெரும்படைசூழ்ந்துவரப் புறப்பட்டான். இவனோடு போர்செய்யவல்லவர் தேவரிரும் முக்கண்படைத்த முதல்வருமேயல்லது வேறியாவர்? அவ னோடும் போர்செய்துலகமுண்ட பெருவாயனாகிய கள்ளமாயப்பிரமனும் புறந்தந்துபோனானென்றால் வெல்வதரிதாகும். கணக்காண்பரிய போர்க ளைச்செய்து மிக்ககீர்த்தியை மேற்கொண்டவன், எண்ணப்படாத பலமா யைகளும் வல்லவன், நாகராசனினு மிக்க வலிபடைத்தவன், பிரமனாலளிக்க ப்பட்டபெரும்படைகள் பெற்றவன்,இவனே திருமால்கரத்திலிருக்கின்ற செஞ் சுடராழியைப் பறித்தேயிருப்பான்; அதைத்தன் சிறியதாதையாகிய தாரக ன்பறித் தணிந்துகொண்டமையாலே தான் அவன்கவராதிருந்தான்போலும் ;

ஆகையால் அவனை யாள்கொண்டுவிளைந்து வெற்றிமாலை சூடிக்கொள்வதோ துர்லபம், தேவரீரோ பூதசேனையுடன் போர்செய்ய எழுந்தருளுவது தகுந்த செய்கையென்றுசொல்ல, அதைக்கேட்ட முருகப்பெருமானே புன்முறுவல்செய்து தன் தம்பியாகிய வீரவாகுதேவனை யழைத்தருளி நாம் பூதவீரர்களுடன் இங்கே எழுந்தருளிய தன்மையையறிந்த சூரபதுமன் தன்மகனாகிய சேனையுடன் பானுகோபனை நம்முடன்போர்செய்ய அனுப்பியிருக்கிறான், நீயோ இலக்கத்தெண்மருடன் ஆயிரவெள்ளம்புடைசூழ்ந்துவரச்சென்று பானுகோபனை அவன்சேனையுடன்வென்றுவரவேண்டுமென்று அருளிச்செய்து நாரதமுனிவனைநோக்கி சிம்புட்கூட்டத்தைச் சிங்கங்கள் வெல்லவல்லவோ! அவைமாய்ந்துபோமேயல்லது வேறன்றே, நாமுடிவுகாட்டுவோம் நீயே முடிவு காண்பாயென்றனன். வீரவாகுதேவரோ குமரப்பெருமானிடத்திலே விடைபெற்று மேருமலைபோன்ற வில்லொன்றைக்கையிலேந்திக்கொண்டுதேரிலேறிப் புறப்பட்டு இலக்கத்தெண்மர் தன்னைப்புடைசூழ்ந்துவர இங்கரத்திற்செல்லப் புயங்குலுங்ககைத்துப் பானுகோபனை யெதிர்ந்தார். பின்பு இளையபிள்ளையாரோ தாம் ஏமகூடத்திலேயே இனிதெழுந்தருளியிருந்தார். வீரவாகுதேவரவ்வாறுசென்று அப்பானுகோபனையெதிர்ந்து நீ சேனையுடன்போர்க்குவருவதையறிந்தே குமரநாயகன் உன்னுடன்போர்செய்ய அனுப்பினன், இனிமேற் போர்செய்யலாமென்றுசொல்லிவிட்டுநிற்க, பானுகோபனே தன்பகைவராகிய பூதர்சேனையும் தூதனும் குமரனும் என்னுடன்போர்செய்தே தொலைந்துபோனாலும்நான்கொண்டகோபந் தணியவல்லேனே! நான் அவர்களைவிடவேமாட்டேன். அவர்கள் எங்கேபோயொளித்துக்கொண்டாலும் தொடர்ந்தே கொல்வேனென்று சொல்லிக்கொண்டிருக்கையில் பூதவீரரும் அவுணருடன் போர்செய்துவந்தனர். அவுணரும் சூலம் வேல் முசுண்டி தோமரம் மழு தண்டு கொண்டுபோர்செய்தனர். அவர்களைவிடாமற் பூதரும் அவுணர்விடுமெத்திறப் படையு நாசமாக்கினதல்லது அவரையும் நாசமாக்கினர். இதற்குள் குமரநாயகனும் அனுப்பிய படைவந்துநெருங்கிற்று, காற்றுநெருப்புங் கலந்தாலொத்த தன்மையையுடைய பானுகோபன்கண்டு தன்வில்லைவளைத்து மழையினுமும்மடங்கு பாணங்களைத்தொடுத்துவிட அவை அப்பூதவீரர்தோளிற் புற்றினிடத்தேபுகுகின்ற பாம்பேபோலப்போ யூடுருவின; பின்னும் அப்பானுகோபனும் தன் வில்லினின்றும் ஆக்கினேயாஸ்திரத்தைவிட அதைக்கண்ட சிங்கனென்னும்பேர்கொண்ட பூதவீரன் நீ யெங்கே பிழைத்தோடிப்போகவிருக்கின்றாய்! என்று மிக்க கோபங்கொண்டு தன்கையில் தண்டேந்தி அவனைச்சாடினன். பானுகோபனுடைய சாரதியால் செலுத்தப்பட்ட முப்பதினாயிரம் குதிரை பூண்ட அத்தேரானது ஓடாமல் அப்படியே நின்றுவிட்டது; இதுநிற்க, குதிரைகள் அடைந்த நிலைமைகண்ட அக்கினியென்னும் பெயரோன் கோபமேற்கொண்டு தன்கையில்வில்லைவாங்கி அதிற்பாணங்களைத்தொடுத்து இதுசொல்லத்தொடங்கினன், பிறராலும் தடுப்பதரிதாகிய இப்பாணத்தைப்பிரயோகஞ்செய்து உன்னுருயிரைவாங்கித் தென்றிசை நமனுக்குவிருந்திடாவிட்டால் என்கையில் இனிமேற்போர்க்களத்தில் வில்லெடுத்துச் சண்டைசெய்யாதவனே

யாவேனென்று சபதஞ்செய்துகொண்டு அவன்மேனிமுழுதும் பாணவருஷம் பொழிந்து மறைத்துவிட்டான். இப்படிமழைபோலும்விட்ட பாணங்களால் உடன்முழுதும் மறைவதுகண்டு இனியேனும் நெஞ்சம்கலங்காமலும் துன்பத் தழுந்தாமலும் பொறுமையுடனே விரைந்துசென்று பூமியிலிருந்த சேமத்தே ரொன்றிலேறிக்கொண்டு நீரைமுகந்துண்டகார்மேகம்போல வில்லைக்கையிலே வாங்கிக்கொண்டு பூமியின்மேற்பதைப்புறவீச அதைக்கண்டு வலதுகையினால் தண்டொன்றுதாங்கித் தன்வில்லைக் கையினின்றும் வாங்கிக்கொண்ட சிங்கன் தலைமேன்மோதவே தானவர்கள் ஆரவாரித்தனர். தேவர்களோ அதைக்கண்டு ஆரவாரித்தனர். இவ்வாறடித்த தண்டுடன் அனலியின்கையைப் பற்றிக் கொண்டு மற்றொருகையால் அவனது மார்புபிளந்துபோக மும்மடங்கு வருத் தினன். அப்படியெற்றிய அனலியென்பவன் அளவிடப்படாத துன்பமடை யச்செற்றமிக்க சிங்கனும் தன் செங்கையிற்பற்றிய தண்டத்துடன் அப் பாதகனைச்சுற்றி வானந்துணுக்கமுற வாரவாரித்தான். மாறுபடாத அவுண னைத் தன்வன்மையாகிய கையாற் சூறைக்காற்றேபோல் அச்சிங்கன் சுழற்ற லும் கட்குடியனேபோலத் தெளிவற்ற சிந்தையுடையனுயிருந்தான். அது கண்டு சிங்கன் தேரைவிட்டுக்குதித்துப் பூமியிலேமோதப் பதைபதைத் திறந்துபட்டான். அவன் இறந்துபட்டதுகண்டு மனக்கவலை மேற்கொண்டு தீயைப்போலும் சுழலுகின்ற கண்களையுடைய சண்டனென்பவன் யாவரா லும்தடுப்பதற்கரிய படைகளைத் தன்கையிற்கொண்டு இவனுயிரை இப்போதே வாங்குகின்றேனென்று அவன்மேற்போர்க்குச்சென்றான், இவன் வரவுகண்ட அனலியென்பவன் தன்கையிலிருந்த தண்டையேந்தித் தீயெனவிழித்துப்பார் த்து நமனுமஞ்ச அவன்தேரின்மேற்பாய்ந்து அவன் தோள்மேலேமோதினன். அப்படி மோதவே பெருமூச்செறிந்து தேரிலேவிழுகின்ற சண்டனும் தன் செங்கையிலெடுத்த தண்டினால் எதிரேபுகுகின்ற சிங்கனது மார்பிலடித்தான். அப்படி போர்செய்கையில் அவுணரில் மாயனென்போன் குப்புறுந்தேரோடும் குறுகிப்பூதரில் தனக்கொப்பிலலாத நீலன்மேல் கதையேந்திமோதினன், அது முப்புரம் பொடிபடுத்த முன்னவன் பாணமேபோல் விளங்கிற்று. இவ்வண்ண மெறிந்த தண்டமாயனென்பவன் மார்பிலேபட மாய்ந்தானென்று சொல் லிக்கொள்வதுபோல நின்று வருத்தப்பட்டுத் தன்கையிலேந்தியிருந்த சூல மொன்றை மார்பேயிலக்காக வீசியெறிந்தான். அப்படியெறியவே அம்மார்பி லிருந்தும் உதிரம் பெருக்கெடுத்தோடியது, நீலனுமயர்ந்து பின்புதேறித் தன் கடகமணிந்த கையான்மோத அதனால் மாயனுந்துன்பமடைந்தான்; நீலனே நாகம்போற்சீறி அவன்வருந்துமாறு செய்யவெண்ணி மந்தரமலையைச்சுற்றிய வாசுகிபோல மாயனென்பவனது தோளைத் தன்னிரண்டுகையாலும் பிடித்துக் கொண்டு தன்பல்லாற்கவ்வி அவனது வீராவேசத்தால் செந்நீரைக்குடித்தான். அதனால் நீலனும் கோபந்தணிந்து நின்றான், எமன் மாயன் உயிர்கொண்டு சென்றமையால் அவனிறந்துபட்டான், சண்டனும் சிங்கனும் போரில்வருந் தியவருத்தநீங்கிப் பின்னும் போர்செய்யலாயினர், தேரைக்கிட்டினர், கிடந்த தண்டினையேந்திக் கீழேசென்று நெருங்கினர், ஒருவர்மேல் ஒருவர்பகைத்து

முட்டினர், இருபக்கங்களிலும் முறைமுறையே பெயர்ந்து, வட்டணைவருவர், இவ்வாறு பலவகையாக யுத்தஞ்செய்கையிற் பூதவீரன் அவுணவீரன் கையிலுள்ள கதையைப் பொடிப்பொடியாகப்போகச் செய்துவிட்டான். தண்டினால் சிங்கன்மோத அவுணர்களெல்லாம் பெருமூச்செறிந்தனர், இது வென்னைகொலென்று நினைத்தனர், இடியேறுபோலக் கோபித்தனர், இப்படி நிகழ்கையில் சண்டனென்னும் பெயருள்ள போர்வீரன் சொல்லலாயினான். என்கையில் தண்டொன்று பொடிப்பொடியாகப் போய்விட்டதென்று நீகர்விக்கவேண்டாம், என்னுடைய தோளாக்கங்கொண்டது மதுவேயல்லவோ! முன்னாளில் எமபுரத்தையும் பழயவண்டங்களையும் வருத்திய நானோ உனக்கஞ்சுவேன்! என்னோடுபோர்செய் பார்ப்போமென்று தன்பலம்பொருந்திய கைகளைக்கொண்டேற்றான். இவ்வாறு போர்செய்கையில் சிங்கன் நீ யாற்றலையுடையாயென் றெண்ணவேண்டாம்! இதோ நான் ஓச்சுகின்ற தண்டத்தைப் பொறுத்துக்கொள்ளென்று அவன்மேற்செலுத்தி எமனும் அஞ்சும்படி தோள் கொட்டி யாரவாரித்தான். அப்படி யாரவாரித்துக்கொண்டு நின்று சிங்கன் விரைந்து அவன் புயமொடியும்படிபுடைக்கத் தோள்முரிந்ததுமல்லால் அந்தத் தண்டும் பலதுண்டுகளாகச் சிதறிப்போயின. இப்படி தன் தோள்முரிந்ததை யொருபொருளாகக்கருதாமல் அபராமலே மற்றொருகையால் தண்டேந்திப் போர்செய்தான். தேவர்களும்பயந்து பார்த்துக்கொண்டிருந்தனர். தன்கையில்விளங்குகின்ற தண்டினால் சண்டன் சிங்கனது மார்பின்மோத அச்சிங்கன் கைக்கொண்டேற்றானென்று தன்பாதங்கொண்டே அவனது மார்பாகிய தடவரையைச்சாய்த்தான். சண்டன்சாயவே கையெடுத்து தேவர்களெல்லாரும் நீயல்லது சண்டனையுதைப்பார்யார்? இவனுவியைக் கைக்கொள்வதே தகுதியென்று குறையிரந்தனர். அதைக்கேட்ட சண்டனே சிங்கனைத் தீப்போற் கோபித்துக் கையாற் கதுப்புடையும்படி மோதலினால் அவன் ஒலிக்கின்ற மேகம்போல் வீழ்ந்தான்.

இவ்வாறு சண்டனிறந்தமையால் யமதூதர்கள் அவனைநெருங்குவதற்கே பயப்படுவதுகண்டு சிங்கனென்னும் பூதவீரன் அவர்களைப்பார்த்து இவனுயிரைக்கொண்டுபோகலாம், அஞ்சவேவேண்டுதில்லையென்றுசொல்ல; அவனுயிரைக் கைக்கொண்டுபோயினர். இச்செயலைக்கண்ட அசமுகனென்னும் அவுணவீரன் சிங்கனெதிர்வந்து உன்னுயிரை இதோவாங்குகிறேன், மற்றவர்களைப் போலஎன்னைநீ நினைக்கவேவேண்டாமென்று தன்தேரைச்செலுத்திநின்றான். இப்படி அசமுகனணையும்பொழுது மதுவென்போன் எங்கே நீ யோடிப்போகிறாய்! நீயிறந்தேபோவாயென்று கோபத்தோடும் விரைவா யிடையிற்புகுந்தான். அசமுகனென்பவன் இப்படி முற்பட மதுவென்போன் எதிர்கொள்ளும் அந்தகனோடு காலனும் போர்செய்ய முன்னேவந்து எதிரிலெதிர்கின்ற தன்மையை யொத்திருக்கும். இருவருமணுகி அசமுகன் அப்போது தன்வில்லைக் குணத்தொனிபண்ணிப் பாணவருஷம் பொழிந்தான். அதுகண்ட பூதவீரன் தன்கையிற்பழுமரம்பற்றிப் பாணங்களைச்சொரிந்து பகைவனதுதேரில் கருமுகில்போல ஆரவாரித்தான். அதைக்கேட்ட அசமுகன் அயர்வடைந்து

தேரிலும் நிலத்திலும் சிலையொடு பாணங்களைச்சொரிந்து வேர்த்துவருந்தினன். அதைக்கண்ட மதுவென்பவன் நீ வீரனுமல்ல, கெடாதபோர்செய்து வல்லமைபெறச் சூரனுமல்ல, சூரனிலையைக்காணு மீசனுமல்ல, நீ போர் செய்கின்றாய் நின்னுருயிர் கொண்டுசெல்லென்று பூமியிற்சென்றான்.

இப்படி பூதவீரன் நிலத்திலேநிற்க அசமுகனென்னுமவுணவீரன் வெட்கமடைந்து பெருமிதமகன்று போரில் பயந்தேனென்று ஒருகுற்றமேயடைந்திருக்கின்றேன், யாரிடத்தேதாவது தீர்த்துக்கொள்வேனென்று மனங்கலங்கி அவுணன் போர்செய்யாமற் போயினன், ஐயோ பொன்றுதலினிதென்று காயத்தின் மானக்கனல்சுடவும் மனம்நோகவும் தீயெனக்கோபித்துப்போரின் முயற்சியைப்பெற்று விரைந்தவன்சென்று கொல்லுவன் இனி யெங்கேயடைந்தாலுமகலாமல்வில் லுநில்லென்றுமேகம்போலும்தன்பகுவாயால்திசைசெவிடுபடவாரவாரித்தான். மதுவென்போன் அசமுகன்சொல்லைக்கேட்டு நீ சுற்றநிற் சிலபேசினாய்? வீரமும் பெற்றாயல்லை! என்னைநாடிப்பெயருவது பிழையேயாயினும் கீர்த்தியைப்பெற்றாயல்லை! எனக்குப் பழியுந்தருவாயானாய்! என்று பலவாறு பேசுகின்றவன் எதிரிலே பகைத்துச்சென்று வில்லைவளைத்துப் பிறைமுகக்கணைகள் பலசெலுத்திக் கோபித்துநின்றான். அப்படி பாணப்பிரயோகஞ்செய்யவும் மதுவென்பவன் சிறிதும்வருந்தாமல் சூலமுசலமுதலிய படைகளையெல்லாமெறியப் பூதவீரன் மனந்தளர்ந்து தானவவீரன்தேரைவிரைந்து தன்கையிலெடுத்துக் கடற்மேற்செல்ல விடுத்தான். அத்தானவ வீரனோ தான்இலாகவத்தால்தப்பித்துக்கொண்டு பூமியில்வந்து அவனொடு மற்போர்செய்யத்தொடங்கப் பூதவீரன் அவனையெடுத்து ஆகாயத்தில்விட்டெறிந்தான். அவனோ அவ்வாகாயத்தினின்றுகொண்டு தானொரு வஞ்சகநினைந்து திருமாலிடத்தே தான் வரத்தாற்பெற்ற சக்கரமொன்றைக் கையிலேந்திப் பூதவீரன்மேல்விடுக்க அவன் நிராயுதனாக விருந்தமையால் மீண்டும் அத்தானவவீரனது தலையையரிந்துசென்றது. அசமுகனென்னும் தானவவீரனோ இடியேறு பூமியில்வீழ்ந்தாற்போலும்விழத் தானவர்களும் மனம்வருந்தினர். அச்சக்கரமோ அத்திருமாலிடமேசென்றுசேர்ந்தது. பின்பு அவர்கள் தங்கள் நாற்படையுடனே பூதவீரர்களைவளைக்க, அப்பூதவீரர்களோ இரியல்போயினர். அதைக்கண்ட இலக்கவீரரில் தண்டகனென்னும் வீரன் யமனைப்போன்ற தன் வில்லைவளைத்து அவுணவீரர்மேற் சரமழைபொழிந்தான். அச்சரமழை அவுணர்மேற்பட இரத்தவெள்ளம் பெருக்கெடுத்தோடியது. எண்ணிலாத தேரழிந்தன, குதிரைகளழிந்தன, யானைகள்பட்டன, அவுணப்பதாதிகளுமிறந்தொழிந்தன, இவ்வாறழியவே மற்றையோர் மனநொந்துதங்களுயிர் காப்பதற்கே நினைத்து எட்டுத்திக்கினும் பூமியினும் ஆகாயத்தினுமாக வலசைவாங்கியோட வாரம்பித்தார்கள். கெடாத அவுணப்படை இவ்வாறு இறந்துபட்டமையும் பலவோட்டெடுப்பதையும்கண்ட பானுகோபன் இந்திரன்முதலிய தேவர்களைச் சுவர்க்கத்திற்சென்று வெற்றிகொண்ட நம்முடைய படைவீரர்கள் இன்று நம்மீசன்மகனாகிய கந்தன்விடுத்த படைகளால் இறந்துபட்டனரோயன்றோ! சூரியனைச்சிறையிலிட்ட நானுயிரோடுமிருக்க நமதுப்பகைவராற்றலே

யுடையராய் நமதுசேனாவீரரைவெல்லுவது நன்றாயிருக்கின்றது! சிங்கமானது கொலைத்தன்மையில்லாமே கோபமில்லாதிருக்கவு மிருப்பதாயின் யானைக் கூட்டம் வெற்றிகொள்ளாதிருக்குமோ! நமதுபகைவரால் இரண்டாயிரவெள் ளத்தினுமேற்படவே நமது சேனாவீரர் இறந்துபட்டிருக்கலாம்! என்னைச்சூழ்ந் திருக்குந்தொகையோ ஆயிரவெள்ளமிருக்கலாம்! மற்றவையெல்லாம் ஓடிப் போயிருக்கலாமெனத்துணிந்து நானோ ஒற்றைவில்லாளியாயிருந்தும் நமது பகைவரை வெற்றிகொள்ளாதிருக்கின்றேன்; இதுஎன்னை! முன்னாளிலே அநே கம்பேரையும் கொல்வித்தேன், அவர்களை நானே போர்செய்யவுமனுப்பியிருந் தேன், கூழையிலும் நின்றுகொண்டிருக்கின்றேன். இது ஒருபொருளென் றும் நினையாதிருக்கின்றேன், தீரும்செய்கையை நினைந்தாலென்ன ஆகப்போ வது! ஒருவன் இனி முடிவதற்குள்ளாகவே நமது பகைவரொன்னும் பேரில் லாமலே போர்செய்து வெற்றிகொள்ளாவிட்டால் நானும் சூரன்மகனோவெ ன்று சபதஞ்செய்துகொண்டு தன்தேரிலேறிப் பாகன் தேரைச்செலுத்தச் சேனைக்கடலுடன்சென்று தன் புருவமாகியசிலையுடன் தன்கைச்சிலையினையும் வாங்கி வளைத்து அத்தமித்தலில்லாமல் சூரியனுக்குமுன்னே உதயமாகும் வெள்ளிசோதியிலே யாட்சியாக வருகிறகாலத்திற் கருக்கொண்டு மேகம் பூமி யிலே மழைசொரிந்தாற்போலக் கோபங்கொண்டடையும் பூதப்படைமேற் சர வருஷம் வருஷித்தான். இவ்வாறு பெரழிகின்ற காலத்திலே பூதர்கள்பார்த் துத் தங்கள் குழிகின்றகண்ணில் நெருப்புப்பொறிசிதற அஷ்டகுலாசலங்க ளொழிய மற்ற மலைகளையெல்லாம் வேருடன் பிடுங்கியெறிந்து யுகாந்தகாலத் திடிபோல் ஆரவாரித்துநின்றார்கள். பானுகோபனோ தன்னைப் பூதவீரர்கள்மலை கள் பலவற்றையும் வேருடன்பிடுங்கி யெறிந்ததைக்கண்டு ஒவ்வொருவர்மே லும் ஒருகோடி பாணங்களையேவியேவருத்தி மலைகளையும் பொடிப்பொடியாக் கினான். அவைகள் பிளந்துபோய்ச் சுவர்க்கத்திற்செல்பவர் மேனிமேற்பட அவர்கள் விண்ணிடையுள்ள கங்கையிற்சென்று நீராடினர்.

பின்பு பானுகோபனோ தன்னொற்றைவில்லாலே அப்போர்க்களமுழுதும் காற்றாடிபோலச்சுழன்று தன் வில்லினின்றும் பலபாணங்களைச்சொரிந்து பூத கணங்களைத் தொலைக்கத்துணிந்து சிலரைத் தோளைத்தொளைத்தும் சிலரை வாழ்நாளைக்கெடுத்தும் தன்பாணத்தால் போர்செய்தான், பூதவீரர்கள் வெற் றிவேற்கரத்து விமலனோ அங்கே யெழுந்தருளியிருக்கின்றான், வீரவாகுதேவ ரோ பிற்படையிலிருக்கின்றனர், பிறவீரர்களோ யாருமறிந்திலர்; முன்னணியி லிருக்கின்ற நம்மையோ இவன் இப்படி வருத்துகின்றானென்று பூதவீரர்கள் இரிந்துபோய் தம்படைக்கீற்றினிற்கின்ற வீரவாகுதேவர்பக்கமே முறையிடச் சென்றனர். அதைக்கண்ட உக்கிரனென்னுஞ்சேனாவீரன்கண்டுதன் கையிலேந் திய கதையைக்கொண்டே பானுகோபனை யெதிர்த்தான். பானுகோபனோ தன்வில்லினின்றும் அநேகமாயிரங்கோடி பாணங்களைச்சொரிந் தாரவாரித் தான். அப்பாணங்களோ பூதப்படைத்தலைவன்மேற்பட்டு முனைமாய்ந்துபோய் ஒன்றுஞ்செய்யாதனவாயிருக்கக்கண்ட பானுகோபன் இவனைவெல்வதெவ் வாறென்று வானைத்தொடுவதாகிய முசலமொன்றைக் கைப்பற்றிச் சுழற்றி

யெறிந்தான். அதையும் தன்கையிலுள்ள கதையினாலேயே சிதைத்துவிட்டு அவன்தேரை நெருங்கிக் குதிரைகளைப்புடைத்துப் பூமியில்விழ்த்த அதைக் கண்ட தேவர்களெல்லாருமிகவு மாரவாரித்தார்கள். பானுகோபனோ தன் தேரிற்கட்டிய குதிரைகளிறக்கக்கண்டு கோபித்துத் தான் வேறொருதேரி லேறிக்கொண்டு தன் வில்லைவளைத்து உக்கிரனேந்திய அக்கதைமுரிந்துபோக நூறுபாணங்களை யேவினான். அவைகளால் அவன் கையிற்பிடித்திருந்த கதை சிறுதூசிகளாகப் போய்விட்டன. உக்கிரனென்னும் பூதப்படைத்தலை வன் பானுகோபனேறிய தேரையெடுத்து ஆகாயத்தில்விட்டெறிந்தான். அத் தேரோ சூரியமண்டலம்வரையிலும் சென்றது. அதைக்கண்ட சூரியனோ நம்மை முன்னாளிலும் இப்போது அதிகமாகப்பிடிக்கமுயல்கின்றான் போலும்! இவன்மேற்கொண்ட வஞ்சனையறியேன், இவன் நெருங்குவதற்குமுன்னே என் னால் முடியுமோவென்று மனத்திலெண்ணிப் பயங்கொண்டோடினான். தேரு டன்சென்ற பானுகோபனோ அங்கேநின்று மீண்டும்வருவது காருடன் வானி லிருந்து தவறிப்போன காமர்வல்லிபடர்ந்த கற்பகத்தருவேருடன் பூமியில் விழ்ந்தாற்போலிருந்தது.

பானுகோபனோ அத்தேர்விட்டிழிந்து உக்கிரனென்னும் பூதவீரனையணு கித் தன்கையாலெடுத்துமேலேழுலகிற்கு மப்பாலேபோய்விழ வெறிந்ததன்றி வேறொருதேரிலேறித் தனக்குப்பிரமன்கொடுத்திருந்த சூலமொன்றை அவன் கீழேவிழ்வதற்குமுன் அவன்மார்பிலெறிய அதுபட்டு மிக வருந்தியதனாற் சிறிதயர்ந்தான். அதுகண்டு தன்கையிலெடுத்த குன்றுடனே தண்டியென் னும்பெயருள்ள பூதத்தலைவன் அதை அவன்மேற்சுழற்றியெறிந்தான். பானு கோபனோ தன்வில்லினின்றும் ஆயிரம்பாணங்களைத்தொடுத்து அவன்கையிற் பிடித்திருந்த மலையையோர்கணத்திற் கண்டதுண்டமாக்கினான். அப்படி தன் னால் வீசப்பட்டமலை தூளாயிற்று; பின் ஆகாயமளாவிய மராமரமொன்றை வேருடன்பிடுங்கிக் கையிலேந்தி அதைத் தன்வலிகொண்டு நின்று அவன் ஏறி யிருந்ததேரிற்கட்டியிருந்த குதிரைகளையடித்தான். அவ்வடிபட்டவுடனே அக் குதிரைகள் எல்லாம் கீழேவிழ்ந்திறந்தன. அதற்குமுன்னமே பானுகோபன் அநேகமாயிரம் பாணங்களைத் தண்டியென்னும் படைத்தலைவனது நெற்றியே யிலக்காகவிடுத்து உதிரமாரிசொரியச்செய்தான். அதனால் தண்டியோ மிக மெலிந்துநின்றான். அதைக்கண்ட பினாகியென்னும் பெயருள்ள வேறொரு பூதவீரன் மலையொன்றைப்பிடுங்கி வீசமுயன்றான்; பானுகோபனதைக் கண்டு ஆயிரம்பாணங்களைத் தன்வில்லிற்றொடுத்து அவன் மார்பிற்பட்டு வருந்தும்படி செய்தான். அதனால் அவனோ மிகவுஞ்சோர்ந்து விழுந்தான். பின்னே பூதவீரர்களோ தத்தம்பலங்கொண்டு அப்பானுகோபனை யெதிர்த் தும் அவன்விடும் பாணங்களுக்காற்றாமல் உடைந்துபோயினர். இவ்வாறு பூதவீரர்கள் உடைந்துபோவதுகண்டு காபாலி, அண்டலோசனன், நிரஞ்ச னன், உருத்திரன், அகண்டன், தண்டகன்முதலிய இலக்கத்தவர்கள் தங்கள் தேரைச்செலுத்தி அப்பானுகோபன்முன்னேசென்று தங்கள் வில்லைவளைத்து க்குணத்தொனிசெய்தனர். அதனால் ஐராவதம் அடைந்த துன்பத்தைச்

சொல்லியாவதென்ன? விநாயகரால் முன் பாரதமெழுத ஏடாயிருந்த மேரு மலையுஞ்சலித்தது. வையமும் திசையும் வானமுஞ்செவிடுபட்டன; பானு கோபனே அதைக்கண்டு சிறுநகைபுரிந்து பருத்தவில்லொன்றையெடுத்துத் தோளளவும் வளைத்து அண்டங்களெல்லாம்பயப்படத் தேர்க்கீழேவிழுமாறு படுத்துக் குணத்தொனிசெய்து நின்றான். திரண்டகல்போன்ற தோளை யுடைய இலக்கத்தவரும் ஒருங்கே தாம் வலத்திற்பிடித்த வில்லினிடத்திற் கூரியதாயுள்ள பாணங்களைத்தொடுத்து மேகம் பூமியில்வந்து மழையைப் பொழிவதேபோலப் பானுகோபன்மேற் பெருமழைபொழிந்தனர். இவனும் இவ்வாறு போர்த்தொழில்செய்ய இலக்கத்தவரும் வேறுவேறாகநின்று புங் கானுபுங்கமாகச்சொரிந்து எண்ணில்லாப் பேராறுகள்வரிசையாகநின்று நிலத் தைச்சூழ்ந்திருக்குங் கடல்மேற்செல்வனபோலெதிர்ந்தனர்.

இலக்கத்தவர்விட்ட கணைமழையால் அவுணர்களெல்லாம் கலக்கம டைய வருவது கண்டு பானுகோபன் கொலைத்தொழில்வாய்ந்த தன் வில்லை வளைத்து அதிலாயிரங்கோடி பாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து அவைகளையறுத்ததன்றி மற்றுமோராயிரங்கோடிபாணங்களையும் தொடுத்துக் கோபத்தொடும் பிரயோகிக்க, இலக்கத்தவரும் அவற்றிற் கெழுமடங்குபாண ங்களை விடுத்தறுத்தொழித்தனர். அதனாற் பானுகோபன் கோபித்து வயிரக் கட்டுகளமைந்த பாணங்களைவிட்டு அவர்கள் கையிற்பிடித்திருந்த விற்களையும் அழித்தான், வில்லழியவே, வீரர்கள்தேரில்வைத்திருந்த சேமவிற்களைக்கையி லெடுத்துவாங்கி அவைகளில் பல கணைகளைத்தொடுத்து அவன் விடுகின்ற பாணங்களையெல்லாம் நடுவது பாதியிற்கண்டித்தனர். அவன் தேர்மேலும் குதிரைகள்மேலும் கொடியின்மேலும் ஆயிரம் பாணங்களை யேவிப்பின்னும் ஆயிரம் பாணங்களைச் சாரதியின்மேலுஞ் செலுத்தினர்கள். தேரும் குதிரை யும் பாகனும்துவசமும் அழிந்துபோயின, அதுகண்டு பானுகோபன் வேறொரு சேமத்தேரிலேறினன். இலக்கத்தவர்தேரும் வில்லுமழிய நூறாயிரம் பாணங் களைத் தன் வில்லினின்றுஞ்செலுத்தி அவர்களுடம்பையு நோவச்செய்தான். இலக்கத்தவரும் உடன்மெலிந்து முன்னை வலியின்றிப் போர்செய்ய நினை யாராய்ப் பின்னிடைந்தனர்.

அத்தருணத்தில் நவவீரருள் வீரகேசரியென்னு மொருவீரன்கண்டு பானுகோபனையெதிர்த்து தன்வில்லைவளைத்துச் சோனைமழைபோல இலக்கம் பிறைமுகப் பாணங்களைச்சொரிந்தான். இவ்வாறு சொரிவதுகண்டு பானுகோ பனே தன் சிரத்தையசைத்து இவனாற்றலும் திறமையும் வில்வித்தையின் நேர்மையு நன்றாயிருக்கின்றதென்று பேசிக்கொண்டு வில்வளைத்துநின்றான். தேவர்கள் நடுக்கங்கொண்டார்கள். தன்வில்லைவளைத்த பானுகோபன் அவ்வில் வில் கூர்மையுள்ளதாய்க் கழுகிறகு பூண்டு தங்கக்கட்டுகளமைந்த நூறாயிரங் கோடி பாணங்களைச்செலுத்தித் தன்னெடுதனித்துஎதிர்ந்த வீரகேசரிவிட்ட பாணங்களைச் சிதைத்ததல்லாமல் தோள்மேலும் ஆயிரம்பாணங்களைவிடுத்து வருத்தினன். வீரகேசரியும் அவன் ஏவிய அம்புகளையெல்லாம் தடுத்து

அவன் மார்பும் சாளரமாக ஆயிரம்பாணங்களைவிடுத்தான். அப்படிவிடுக்கவே பானுகோபனும் மனம் நொந்துவருந்தி இவனை வில்லால் வெல்வதரிதென்றே நினைத்து நாராயணாத்திரமெடுத்து ருச்சபித்து விட்டான், அது வீரகோளரி விட்ட பாணங்களையெல்லாம் கவர்ந்து முருகப்பெருமானது வேற்படை யாணையால் அவ்வீரனது உயிர்கொள்ளவஞ்சி அவன் மார்பிற்புகுந்து சிறிது வன்மையைக்காட்டி விரைந்து கடவிராடிமீண்டது, வீரகோளரியோ மாண்டோனென்னும்படி மயங்கிவிழுந்தான், அதுகண்ட வீரமார்த்தாண்டன்வில்லை வளைத்து கோபத்துடனெதிர்த்தான். அவன் எதிரவே அவன் கையிற்பிடித்திருந்தவில்லை யாயிரம்பாணத்தால் துண்டமாக்கியதன்றி மேலுமாயிரம் பாணங்களையே வியவனெற்றியிலுமழுந்தச்செய்தான். தேவர்களும் வருத்தமடைந்தனர். வீரமார்த்தாண்டனும் வேறொருசேமவில்லையெடுத்துவளைத்து முன்னமே அதையுமிருதுண்டாக்கியதன்றி அவனேறியிருந்த தேரையும் குதிரையுமழித்துத் தோளிலும் எழுநூறுபாணங்களையேவி வருத்தினான். தேரும் வில்லும் அழிந்து வீரனென்னும் பெயருமழிந்து தன்னந்தனியனாய் நின்றதனால் உளர்கோளழிந்த சூரியன்போல விளங்கினதுகண்டு பானுகோபன் மேகமுனடுங்க ஆரவாரஞ்செய்தான். அதுகண்ட வீரமார்த்தாண்டன் அப்பானுகோபன்மேல் சூரியன் இராகுவின்மேற் பாய்ந்தாற்போலப்பாய்ந்து அவன் பிடித்திருந்த வில்லையு மிருதுண்டமாக்கி யெறிந்துநின்றான். பானுகோபனோ வாளையுருவி யவன்மார்பிற்குற்ற அதைப்பொறுது தன்னுடை வாளையுருவி அவன் மார்பிற்பூண்டிருந்த கவசமிற்றிடத்தள்ளிநின்றான். பானுகோபனும் தன்னுடைய வாளால் அவ்வீரமார்த்தாண்டனது நெற்றியிற்குற்றினான். அதனாற் காற்றின்மோதப்பட்டுவிழுந்த கற்பகம்போல மண்ணில்விழுந்தான். இவன் இறந்துபட்டானென்று தன்மனத்திலெண்ணிய பானுகோபன் வில்லையெடுத்துக்கொண்டு தன்னை எம்மருங்கும் கடற்சேனைகள்சூழ்ந்துவரக் கண்ட வீரராக்கதனென்னும் வீரன் வெகுண்டு தன் துணைவர்தொலைந்தமையும் மனத்திற்கொண்டு தன் வில்லைவளைத்து ஆயிரம் பாணங்களைத் தெரிந்தெடுத்துப் பானுகோபன்மேற்செலுத்த அம்புகளைத் தடுத்து நூறு பாணங்களால் தேர்ச்சாரதியையும் கொன்றான். வீரராக்கதனோ வேறொருபாகனைத் தன் தேரைச்செலுத்த வமைத்துக்கொண்டு சண்முகப்பெருமான் சேவடித்தியானபலத்தால் அப்பானுகோபன்மகுடத்தை யாயிரங்கணையெய்துபொடிப் பொடியாக்கினான். அதனால் பானுகோபனும் நாணமடைந்து மிக்க கோபங்கொண்டு வேறொருமகுடமணிந்து வீரராக்கதன் விடுகின்ற பாணங்களையெல்லாம் தடுத்து ஆயிரம் பாணங்களால் அவன் வில்லையும் இருதுண்டமாக்கினான். தன் வில்லொழியவே அவன் வேறொரு சேமவில்லெடுத்து வளைத்துப் பானுகோபன்மேல் ஆயிரம்பாணங்களை யேவி வீரராக்கதனுடைய தேர்க்குதிரைகளையுமழித்தான். குதிரை இறந்துபோகவே வீரராக்கதன் வேறொரு சேமத்தேரிலே பாய்ந்தபொழுது பானுகோபனோ அவன் கையிலிருந்தவில்லை யாயிரம் பாணங்களைவிட் டறுத்துத்தள்ளினான். அதுகண்டு வீரராக்கதன் அவன்மேல் வேற்படையொன்றேவினன்.

அவர் விடுத்த அம்பின்மேல் நூறுபாணங்களைத்தொடுத்து விடுத்தழிக்கத்திடத்தின் மேம்பட்ட வீராக்கதன் அதுதெரிந்து தேரினின்று மிழிந்து அறைகூவித் தனிபோய்ப் பானுகோபனிரதத்தை யெடுத்தெறிந்தான். எறியுமெல்லையில் பானுகோபன் விண்ணெழுந்து பிரமன்கொடுத்தவேலைப் பகைவனுவியை யுண்ணவிடுத்தலும் அதுசென்று வீராக்கதன்மேற்பட அவனும் வீழ்ந்தான். அப்படி தரையில்வீழ்ந்த வீராக்கதன் மிகவும் தளர்ந்தும் முருகனுணையால் அவனுயிர்போகாமலிருந்தது; பானுகோபனைச் சக்கரத்தால்தடுத்தவனுமெழுந்து போர்செய்யும் வல்லமையில்லாமல் இடைந்து பின் போய்விட்டான். போனகாலத்தில் வேறொரு தேரிற்புகுந்து பானுகோபன் வில்லை வளைத்துக் கணைமழைபொழிந்து மற்ற வீரர்களையும் வெற்றிகொள்ளும்படியெதிர்ந்தான், அப்போது வீராந்தகன் வீரமகேசன் வீரதீரன் வீரமகேந்திரன் வீரபுரந்தரன் ஆகிய ஐவரும் வில்லையெடுத்துக்கொண்டு பானுகோபன்மேல் சரமழை பொழிந்தார்கள். அவ்வாறு பொழிந்து அளவில்லாத போர்த்தொழிலையுஞ்செய்து நின்றனர். பானுகோபனே தன் பாணங்களால் இருவரை மெய்ம்முழுதும் புதைத்தனன், இருவரைத்தடுத்தனன், இருவரைச் சிலையையழிக்க நொந்தேபோயினர்.

இவ்வகையாகப் பானுகோபன் வீரர்களையெல்லாம் வேறுவேறாகநின்று போர்செய்து வெற்றிகொண்ட சமயத்தில் வல்லமையில்லாமல் முதுகிட்டோடிய அவுணர்களுடையசேனைகள் முழுதும் நாற்றிசையிலும் அவனைச்சூழ்ந்துகொண்டன. பின்னிட்டசேனைகளெல்லாம்தன்னயலில்மீண்டும்வந்துசூழ்ந்து போர்செய்ய பானுகோபன் வருதல்கண்டு இவனாற்றல் நன்றுநன்றென்று வீரவாகுதேவர் பிரமன்மாலறியாப் பெற்றியோனாகிய சிவகுமாரனுடைய உபயபாதங்களையு மனத்திலெண்ணித்துதித் துப்போர்செய்யமனங்கொண்டு செகுபற்றிய நெஞ்சமுடைய அக்கொடியவனாகிய பானுகோபன் முன்சென்று தன் வில்லைவளைத்துக் குணத்தொனிசெய்யத் தேவர்களும் வெருக்கொண்டனர். இவ்வாறு குணத்தொனிசெய்து போர்க்கெழுந்தருளப் பானுகோபன் வீரவாகுதேவரை நோக்கி நீயோ வேலினால் தாரகனையட்ட குகனுமல்லை, ஆதிவராகமாய்ப் பூமியைக் கிளைத்திடு மரியுமல்லை, நான்முகனு மல்லை, இந்திரனுமல்லை, தூதனாகிவந்த நீயோ என்னுடன்போர்செய்யவல்லை, இழைத்தமாயையால் முற்பகற்போந்தனை, எங்கோன் முன்னே பழித்திறஞ் சிலபேசினை, என் தம்பியையுங்கொன்றனை, இம்மாநகரையுமழித்தனை, யானதையுமறிந்திலேன், அதனால் பிழைத்தனை, இனியேனும் இங்கேபிழைத்திடப் பெறுவாயோ, மேலும்போர்செய்துவெற்றிகொண்டுன்னுயிரையும் யமனுலகத்திற்புகுவிப்பேன், உண்மையிது, சிறுகாலத்தில் சூரியனைச்சிறையிலிட்ட பானுகோபன் ஒருதூதனைப்படுத்தானென்ற பழியொன்று கொள்வதல்லாமல் புகழையடைவேனோ, இன்னும் என்னுடன்போர்க்குவந்த உன்றுணைவரையும் வெற்றிகொண்டேன், பூதங்களையும் போரில்வென்றேன். சேனைப் பெருக்கத்துடன்வந்த உன்னையு முடிப்பேன், உன்னையனுப்பிய முருகனையுமழித்து இந்திரனையுஞ் சிறையிலிடுவேன் என்றபோது வீரவாகுதேவர் எவரோனும் எதிர்ந்து போர்செய்வாரை

வெற்றிகொள்வதே திறலாம், பின்னிடுவோனா யடுவதே வசையல்லாமற் பிறி துண்டோ, வெற்றியடைபவர் தம்பெருமிதம் தாமே எடுத்துச்சொல்வாரோ விரைந்து போர்செய்யென்றான்.

அப்போது பானுகோபன் தன்வில்லிற் பத்துக்கணைகளைச்சொரிய வீர வாகுதேவரும் விரைந்து அத்தனைப்பாணங்களைவிட் டவற்றை யறுத்துத்தள் ளிப் பின்னும் நூறுபாணங்களைவிடுக்க அவனும் அத்தனை பாணங்களைவிட்டுக் கண்டித்துப் பின்னும் ஆயிரம்பாணங்களைச்சொரிந்தான். தான் ஆயிரங்கணை களைத்தூண்டி அவற்றையு மறுத்துத்தள்ளினான். வீரவாகுதேவரும் பதினாயி ரம்பாணங்களைவிட பானுகோபனும் அத்தனை பாணங்களைவிட்டவற்றையழி த்து இலட்சம் பாணங்களைப் பிரயோகஞ்செய்தான். வீரவாகுதேவரும் அத் தனைபாணங்களையும் தூண்டியறுத்துப் பத்துநூறாயிரம் பாணங்களையும்விடுத் தனர். சூரன்மகனும் அத்தனைவிட்டழித்து நூறுநூறாயிரம் பாணங்களையேவ அவற்றையும்விட்டழித்து நின்றனன். வஞ்சகனாகிய பானுகோபன் விட்ட பாணங்களையொழித்து வீரவாகுதேவர் நூறாயிரங்கோடி பாணங்களைவிடப் பிரமாஸ்திரம் பிரயோகஞ்செய்தான். அதனால் அவ்விருவர்போர்செய்த பார் மறைந்தும் திசைகளெல்லா மறைந்தும் கடல்மறைந்தும் குலகிரிமறைந்தும் மேகமறைந்தும் ககனமுமறைந்தும் சூரியனதுதேர் மறைந்தும்போயின. பாரி வட்டமும் மாதிரவட்டமும் கடல்வட்டமும் நேமிவட்டமும் ஆகாயவட்ட மும் அண்டவட்டமும் முடுகி அவர்களுடைய தேர்சாரிவட்டமாகத் திரிந்து கொண்டேயிருந்தன. இவ்வாறு பாணங்களை முறைமுறை சொரிதலால் மறை வார்கள்; அவைகளையழிக்கும்போது தோன்றுவர். இமையோனாயில் வேறு வேறாக இத்திறம்செய்யும் வீரர்கள் சூறுவளிபோற்சுழன்று உலகமெல்லாஞ் சுற்றித்திரிவார்கள். இவர்கள் ஏவும்பாணங்கள் சூரியனதுதேரிலும் அத்தேரிற் கட்டிய குதிரைகள்மேலும் சந்திரன்விமானத்துப் புறஞ்சூழ் கரிகள்மேலும் விண்ணிலுலாவும் தேவர்கள்மேலும்போய்ப்படும். இவ்வாறிருவரும் கோபங் கொண்டு போர்செய்வதனால் இன்னதிசையென்றே அங்கே நாடுவதோவரிது. பாணங்களனந்தம்வானெல்லாம்போய்மூடிக்கொண்டன, தேவர்கள்நம்மேலும் வருமென்றேசொல்லி தேவர்கள்இங்கேநிற்பதுகூடாதென வோடிப்போயினர், அனல்பூமியைக்குழிக்கும்அண்டங்களைத்தொளைக்கும்கடலேழையும்பருகும்; புவனங்களெல்லாம் கடக்கும், போர்த்தொழிலிற்சிறந்தார் யாவரும் தடுத்தற் கரியவடவைக்கனல்போலழிப்பர்தற்கரிமி. இவ்வாறிருக்கையில்வீரவாகுதேவ ரும் பானுகோபனும்செய்தபோர்த்திறலை யார்தானெடுத்துச்சொல்லவல்லவர். இவர்கள் தங்களால் கூடியவரையிலும் மிகுந்த பாணமழையையே பொழிந்து வருதற் கவர்கைவிற்களும் கள்ளமாமாயப்பிரானது சக்கரம்போல்வளைந்திருந் தன. பானுகோபனே வீரவாகுதேவர் விடும் பாணவருஷங்களைத் தடுத்து அவர் கையிலிருந்த வில்லையும் ஆயிரம்பாணங்களா லறுத்துத்தள்ளினான். அதைக்கண்ட வீரவாகுதேவரும் வேறொருவில்லைக் கையில்வாங்கிக்கொண்டு மிக்க கோபத்தால் அதைவளைத்து ஆயிரம்பாணங்களைத்தூண்டி ஒருமுகூர்த் தத்தில் அவன் வில்லையுமொடித்துத்தள்ளினர். அதனால் பானுகோபன் மிக்க

கோபங்கொண்டு கையில் வேறொருவில்லை யெடுத்துக்கொண்டு வளைத்துக் குணத்தொனிசெய்து ஆயிரம்பாணங்களால் அவர் மார்பில்பட வருத்த வீரவாகுதேவரும் ஏழுபாணங்களைவிடுத்து அவன் மணிமுடியைத் தகர்த்தார். இவ்வாறு நவரத்தினமயமான செம்பொன்செய்முடி தகரக்கண்ட பானுகோபன் மீளவும் வேறொரு மணிமுடி யணிந்துகொள்ளத் தொடங்குமுன் ஆயிரம்பாணங்களைப் பிரயோகஞ்செய்து அடுத்த சாலிகை சிந்தினார். அவ்வாறு சிந்தியமாத்திரத்தால் தருமதேவதையு நடனஞ்செய்தது. இந்திரன் பகைவனாகிய பானுகோபனு நகைத்தான். சூர்மகனாகிய பானுகோபன் ஆயிரம்பாணங்களை விடுத்து வீரவாகுதேவர் நெற்றியில் தாக்க அவர்நெற்றி பிளந்து மேற்றிசையிலிட்ட செவ்வானம்போல் விளங்கிற்று. நெற்றியில் ஆயிரம்பாணங்களை நெறியேபடுதலும் சற்றும் வலி சுருங்காமலிருந்தனர், பின்னும் வீரவாகுதேவர் தம் அங்கையாற்பற்றிப் பறித்துவீசினர். அதனால் அவன்விட்ட பாணங்களழிந்தன. சண்முகப்பிரான் தம்பியாகிய வீரவாகுதேவர் பகைவனதுமுகத்தில் ஆயிரம் மார்பிலாயிரம் தோளிலாயிரம் கைகளிலாயிரமாகப் பாணங்களைத் தொடுத்து விடுத்தனர். அவை சூரபதுமன் மகனாகிய பானுகோபன் உறுப்புகடோறும்பட்டு வருத்தஅவசமாயினான். தேகமுழுதும் உதிரமும்பெருகிற்று ; அதனால் மிக்ககோபங்கொண்டு அக்கினிமலைபோல் விளங்கினான். அப்போது அவுண வீரர்களெல்லாம் பானுகோபன் வலியோய்ந்திருப்பதுகண்டு நால்வகைச் சேனா சமுத்திரத்துடன் முன்சென்று வீரவாகுதேவனை வளைந்துகொண்டு சூலம் தண்டு எழு மழு சக்கரம் பாணமுதலிய ஆயுதங்களையெல்லாம் பொழிந்தார்கள். அதைக்கண்ட வீரவாகுதேவர் தமது கையிலிருந்த வில்லைவளைத்து ஆயிரகோடி பாணங்களைத்தொடுத்து அக்கொடியவர்விட்ட படைகளையெல்லாம் பொடிப்பொடியாகச் செய்தனர். அதுவே இருட்படலங்கீறும் சூரியனேபோலத் தோன்றிற்று, அப்பாணங்கள் நால்வகைப்படைகளையும் தலைதடுமாறச்செய்யவே, பூதவீரர்களோ பானுகோபன் நொந்து தன்னந்தனியே நிற்பதையும் அவன் நாற்படையும் அழிந்திருப்பதையும் கண்டு வீரவாகுதேவர் பக்கத்தே வந்து சூழ்ந்துகொண்டனர். அப்போது உணர்ச்சி நீங்கியிருந்த பானுகோபன் முன்னை யுணர்வுபெற்றுத் தன் சேனைமுழுதுங் காணாய் வீரவாகுதேவர் நின்ற நிலைமையைக்கண்டு நமது நாற்படையு மழித்துவிட்டான், இவன் சேவகமே சேவகமெனத் துணிந்து வியந்து என்னையெதிர்த்து போர்செய்த வீரரனைவருமாண்டனர், இவனொருவனே நிற்கின்றான். வெற்றியைப்பெறினும் பெறுவான், பானுகோபன் வலிமை நன்றாயிருக்கின்றதென்றான்.

பின்னே பானுகோபனுங் கடிகையொன்றில் நம்முருகப்பெருமானுடைய தூதன் சரீரத்தைச் சின்னபின்னம் படச் செய்வேன், அப்படி செய்யாவிட்டால் பின்னுயிர்வாழ்க்கை விரும்பேன், யான் பிறப்பெடுத்தேனு மல்லேன், என் வில்லுடன் யானெரியிற்குளிப்பேனென்றான். இவ்வாறு பானுகோபன் வஞ்சினம்பேசி மனத்தின் மானமும் கோபத்தீயு மிகுதியாயோங்க முன்னாளில் இறைவன் முன்னே சென்ற ஆலவிடம்போலத் தான் வீரவாகுதேவர்

முன்னே நெருங்கிச் சென்றான். அவ்வாறு சென்று தன்கையிலிருந்த வில்லை வளைத்து முத்தலைக்கணைக ளாயிரம் தொடுத்துவிடுக்க அதுகண்ட வீரவாகு தேவரும் அத்தனைப் பாணங்களையும்விட்டொழித்தனர். பிறகு பானுகோபன் ஆயிரம் பாணங்களைத் தூண்டி அவர்விட்ட பாணங்களை விலக்கிப் பதினாயிரம் பாணங்களால் அவர் தேரையும் பாகனையும் குதிரைகளையு மழிக்கும்படி விடுக்க அதைக்கண்ட தேவர்களெல்லாம் வருத்தமடைந்தனர். வீரவாகு தேவரும் வேறொருதேர்மேல் வில்லொடும்பாய்ந்து பதினாயிரம்பாணங்களை விட்டுப் பானுகோபன் தேர்பாகன் குதிரை இவைகளைத் தேவர்கள் மகிழ் சிறக்கத் துண்டஞ்செய்தான். பானுகோபன் வேறொரு தேரிலேறிக்கொண்டு வில்லைவளைத்து எழுநூறு பாணங்களைப்பூட்டி வீரவாகுதேவர் மார்பைத் தொளைசெய்தான். தன்னுடம்பில் பாணங்கள் தைத்தமையால் வில்லையு மறுத்து பின்னு மாயிரம் பாணங்களால் இரதத்தையும் குதிரையோடழித்து நூறுபாணங்களால் பானுகோபன் மார்பையும் பிளந்தான். அதற்குப் பானு கோபன் வருந்தாமல் ஆயிரம் பாணங்களையேவி அம்பறாத் தூணியை யறுத் துத்தள்ளினான். அதனாற் பானுகோபன் இதென்ன அதிசயம்! நமது பகை வன்கற்றவித்தையே வில்வித்தை யெனமதித்துஇவனையோவெல்வதரிதென்று மோகனாஸ்திரத்தை யெடுத்து அபிமந்திரித்து மனத்தினா லர்ச்சனைசெய்து தன்சேனையுடன் பகைவனையடைந் துணர்வைக் கலக்கி வரவேண்டுமென்று விடுத்தான், பூதசேனைகளும் பூதவீரும் பயந்தனர். மோகனப்படை வர வைக்கண்டு அதை வேறு படைவிடுத்து வெல்லலாமென்றெண்ணி வேறொரு செய்கையறியாமற் சிந்தித்தான். இப்படையைக் கண்டு வீரவாகுதேவரை யொழிந்த இலக்கத் தென்மரும் கலங்கினர். வீரவாகுதேவரும் கிலத்திற் பட்ட கந்துபோலநின்றான் ; பானுகோபனே எனக்கெதிரானவர்யாவருளர்? நாம் நன்று நினைந்தோமென்று நகைத்துக்கொண்டிருந்தான். இவ்வாறு பானு கோபன் மகிழ்ச்சியோடிருந்து இவ்வீரர்களனைவரும் முன்னை யுணர்ச்சியில் லாமற் கலங்கியிருக்கின்றனர். என் வில்லாற்றலால் இவர்களை விரைந்து கொல்வேனென்று மதித்து வில்லைவளைத் துணர்வுசிதைத்திருந்த வீரர்கள் மேல் பாணஞ்சொரிந்தான்.

அத்தருணத்தில் சண்முகங்கொண்ட சதுரப்பெருமான் வீரவாகுதே வர் முதலானோர் நீங்காத மயக்கங்கொண்டு பானுகோபனால் வருந்தியதறிந்து அமோகப்படைவிடுத்து அதனோடு சொல்லுகின்றான். நீ சென்று மோகனப் படையை வெற்றிகொண் டிங்கேவாவென்று கட்டளையிட அவ்வமோகப் படை போர்க் களத்தில்வந்து அம்மோகனப்படையின் வலியைச் சிதைத்து விட்டது, மோகனப்படையும் பூதசேனையை விட்டகன்று போய்விட்டது, வீரவாகுதேவரு மற்றவீரரும் தம்மயக்கமகன்று குமரநாயகன்விட்ட வமோ கப்படையைக்கண்டு மகிழ்வடைந்து நாம் வருந்தியிருப்பதுநோக்கிக் கருணை நெடுங்கடலாகிய சரவணப்பெருமான்இவ்வகைப்படையைவிடுத்து நமக்குண ர்ச்சியை யளித்தானென்று அவர்களெல்லாம் அப்பெருந்தகையை வாழ்த்தித் துதித்தனர். அப்போது அக்கடவுட் பெருமான்விட்ட படையும் அவ்விட

நீங்கிச் சென்றது, அப்படை மீண்டவுடன் வீரர்களெல்லாம் மீளவும் போர்க் கோலங்கொண்டனர். வீரவாகுதேவரும் மானமும் கோபமுமோங்க முன்னே நம்மையெல்லா மயக்கிவிட்டானல்லவா? இப்போதே அவனை வெல்ல வேண்டு மென்றெண்ணிச் சிவாத்திரத்தைவிடத் துணிந்தான். அதைக்கண்ட அசுரேசன் மகன் மோகனப்படை மீண்டதும் இறைவன் படைசென்றதும் வீரவாகுதேவர் செய்கையும் ஆராய்ந்து நாமோ இங்குள்ளாரையெல்லாம் வெற்றிபெற்றோம், அவர்களோ மீளவுந் தோன்றினர், இதெல்லா மிறைவன் செய்கையாகவே தோன்றுகின்றது, நாமென்ன செய்வது? வீரவாகுவோ சிவாத்திரம்விடத் துணிந்து கையிலெடுத்திருக்கின்றான். அதைத் தொடுப்பானாயின் நாமிறந்துபடுவது நிச்சயம், நாம் நமது நகர்க்கேசென்று தெய்வதப் படைகள் கொண்டுவந்து போர்செய்ய வேண்டுமென்றே பானுகோபன் தன்னுருக்கரந்து மாயையினாற் றன்னூர்க்குச் சென்றான். பானுகோபன்மறைந்து போனதைக்கண்டு அவுணர்களும் தொலைந்துபோயினர். தேவர்களும் வெற்றி நமதென்றே பூமழைசொரிந்தனர். பானுகோபன் பயந்து முதுகிடக்கண்டு யாவரும் நாமவனைப் பற்றிக்கொண்டு வரவேண்டுமென்றுசொல்ல, வீரவாகு தேவரும் பேடிசெய்கையைப்போலப் பெரிதுமுள்ளழிந்தே ஓடிய பகைவனை நாம் நாடித்திரிவது நலமோ! இனி அவன் போர்க்குவந்தாற் காணவேண்டு மென்றுசொல்ல யாவரும் நன்று நன்றெனறனர். பூதவெள்ளமும் மிகமகிழ்ச்சியுடனாரவாரித்தன, சூரியனும் இன்றுதான் நமதுபகைவன் புறமுதுகிட்டோடினான், இனி அங்கே வீரனு நிற்கமாட்டானென்று நீங்குவான் போலச் சூரியனும் மேற்கடலை நோக்கி யோடினான். இருள் வரவேயெங்கும் தாராகணங்கள் தோன்றின; சந்திரனும் பண்டேள் தாருகாவனத்துமுனிவர் பரமன்மேல் விட்ட வெண்டலையே போலத் தோன்றினான்.

வீரவாகுதேவரும் இலக்கத்தெண்மரும் பூதவீரரும் பிறரும் தன்னைச் சூழ்ந்துவர மீண்டும்பாசறையுட்புகுந்து பிரமன்மாலறியாப் பெற்றியோனாகிய பரமசிவனருளிய பாலசுப்பிரமணியனை யடைந்து வணங்கியெழுந்து பின்னவ்வள்ளற்பெருமானறியப் பானுகோபன்போர்செய்ததும்அவனச்சத்துடனகன்றதுமுதலாகிய யாவுஞ் செப்பத் திருச்செவிசாத்தியருளிய கந்தப்பெருமான் இற்றைப் பகலெல்லாம் போர்செய்தலால் துன்பமடைந்தனை, இற்றையிரவு நின்னிருக்கைக்கு உன் துணைவரோடு போவென்றான். வீரவாகுதேவரும் விடைபெற்றுத் தன்னிருக்கைசென்றடைந்தான்.

இங்கே புறந்தந்தும்பான பானுகோபனும் போரிலழிந்துமுன்னரோடியும் தன்னுள்ளத்தில் மிக்கதுயரமும்பழியும் மானமும் நீண்டுபெருமித நீங்கித் தன்றந்தை மாளிகையணுகாமல் தன்னகரமடைந்து தாழ்ச்சியடைந்தார் போல மனந்தளர்ந்து மந்திரிமாருடன் மருவாமலும் தந்திரத்தரொடுஞ் சாராமலும் சிங்காதனத்திலிராமலும் நாடகமாதர் நாடகத்தை விரும்பாமலும், பாடன் மாதனைப்பாராமலும், கூடுமங்கையர் கூட்டத்தை நோக்காமலும், ஊடுமாதரோடுடன் புணர்தல் விழையாமலும், இராக்காலமெல்லா மெண்ணமிட்டுக் கொண்டேயிருந்து முருகப்பெருமான் படைவீரரைப்போ

ரில் வெற்றிகொள்வதற்குத் தன்னெஞ்சொடு மனோராச்சியம் பண்ணிக்கொண்டே யிருந்தான், தூதுவர்களோ சூரபதும னிருக்கையை யடைந்து உமது குமாரனாகிய பானுகோபனே வீரவாகுவோடுபோர்செய்து பூதவீரரையெல்லா மிறுகண்டு மீண்டுமடைந்தான். வினைய மேதேனுமுண்டோ அதனையேயா மறியமாட்டோம், அதை இனிமேலறி! வீரவாகுதேவரும் தன்சேனையுடன் பாசறை சென்றனர் என்றனர். அதைக்கேட்ட சூரன்தன்மகன் மாற்றார்முன் வலியிலனாகிச் சென்றதனால் கோபமாய் கண்களிற் றீப்பொறியெழப் பெருமூச்செறிந்து மிகுதியும் நகைத்து அரசனென்று சொல்வான். மைந்தரும் சுற்றத்தவரும் துணைவரும் தந்திரத்தலைவரும் போர்செய்ய நாளைபோகார்கள். நாளை நானே நால்வகைச்சேனையுடன் சென்று கந்தனை வெற்றிகொண்டுமீள்வேன், இப்போது போங்களென்று சொல்லத் தூதுவரும் போயினர். சூரபதுமனோ பகைவரை வெற்றிகொள்வதே நாட்டமாக யாதுமெண்ணாதவனாயிருந்தான். இதுநிற்க, சூரியனுமுதயமானான்.

முதனாட்பானுகோபன்யுத்தப்படலம்.

முற்றிற்று

---

## இரண்டாநாள்சூரபதுமன்யுத்தப்படலம்.

சூரியோதயத்துக்கு முன்னே சூரபதுமன் துயினீங்கி யெழுந்து முறையாகச்செய்யவேண்டிய காலைக்கடனை முடித்துக்கொண்டு சிங்காதனத்திலிருந்துகொண்டு நேற்றுத் தன்மகன் போர்க்களத்திலடைந்த விசையினை நினைந்து தன்னுள்ளத்திற் பெருங்கோபமிக இனிப் போர்த்தொழிற் கியாரையும்விடுக்கேன், சேனையோடுசென்று நானே போர்செய்து வாகைமாலை சூடிக்கொள்வேன் என்று தெளிந்து தேறித் தூதர் பலரையுமழைத்து இவ்வுலக முழுதுங் கிடக்கின்ற சேனைவெள்ளத்தை யழைத்துக்கொண்டு வாருங்கோளென்றான். அப்படியே அவர்கள் தங்களரசன் கட்டளையையறிவிக்க, யானை தேர் குதிரை யென்பவற்றையூர்ந்து முன்னை நாளில் வெற்றிகொண்ட நூறாயிரவெள்ளமென்னுந் தொகையினையுடையவரா யவர்கள் சூலம் மழு தண்டு தோமரம் வயிரம் வில் வாள் பலகை வட்டம் குந்தம் வேல் நாஞ்சில் பிண்டிபாலம் முசுண்டிமுதலிய படைகளையேந்திக்கொண்டு சென்றார்கள். இவ்வாறு ஆயிரவெள்ளம்சேனை சூழ்ந்துவர மகேந்திரநகரமுழுதுமாரவாரிப்பதை மேருமலையினுச்சியிற் கண்டனன், கதிர் நுழையாத மேகம்போன்ற சேனையின்கூட்டங்கண்டு சிந்தையிற்கொண்ட வலிய துயரமெல்லா நீக்கி வன்மையைப்பெற்றுப் பகைவரைப் போர்செய்து வெற்றி யெய்தினவன்போல நின்றான். அழிந்திடுகின்ற காலத்தில் சமுத்திரம்போற் கோஷித்துச்செல்லும் அச்சேனையைக் கண்டுவிரைந்து போர்க்கேசெல்லநினைந்து சூரியனைமதியமாக்கும் இரத்தினங்கள்பதித்த மாடங்களின் சிகரத்தினின்றுமிழிந்து வில்லையெடுத்து ஏனைப் படைகளையும் தேவர்களா லுதவப்பட்ட அஸ்திர சஸ்திரங்களையும்கொண்டு கையில்கோதையைப்பிடித்து முதுகிலம்பறாத்தூணிகட்டிவிரல்களில் அடுத்த

பொற்புட்டில்சேர்த்துமுடியிற் போர்க்குரிய தும்பைமாலைசூடி மேருமலையோ அல்லது மந்திரமலையோ வென்னப் புறப்படும் தேரிலேறித் தன்னைக்குதிரைக் கூட்டங்களும் யானைக்கூட்டங்களும்தேர்க்கூட்டங்களும் காலாட்களும பின்றொடர மந்திரிமார்கள் பக்கத்தேநடந்துவர இராசவீதிகடந்து சென்றான். அத்தருணத்தில் சிங்கமுகன் மகனாகிய அதிசூரனென்பவனும், தாரகன்மகனாகிய அசுரேந்திரனென்பவனும்போய் சூரபதுமனையடைந்துவணங்கினர். அவரைக் கண்டுசூரபதுமன் சொல்லத்தொடங்கினான். கடல்போல நிறைந்த கோட்டகம் கரையில்லாதவிடத்துச் சிறிதுடைந்து விடுவதுபோலப் போர்செய்கின்ற நால்வகைப்படை பலவுளவாயினும் அதைக்காக்கு மரசரில்லாதவழி நில்லாதழியும். ஆகையால் இனி நீங்களிருவரும் இப்பெருஞ்சேனைக்குத் தலைவராய் முன்னே போங்களென்றுசொல்ல அக்குமரரிருவரும் இதுவே மகா பாக்கியமென்றுவணங்கிஅக்கட்டளையைமேற்கொண்டுஅச்சேனைகளை அணிபெறவகுத்து தானைத்தலைவரராய் சென்றனர். அதைநோக்கிய நூறுயிரவெள்ளத்து மறவோரும் போர்க்களத்தை நாடி ஆதிசேடனு மற்ற நாகராசரும் மனநடுங்கப் போயினர். சூரபதுமனும் விடந்தனிநடந்து போவதைப்போலத் தேவர்கள் நடுங்கத் தேரிற்போனான். தொண்டகம் துடி பம்பை தாரிய முருடு படகம் மொந்தை திமிலை தடாரி தக்கை கண்டை ஆகுளி பீலி காகளம் உடுக்கை பதலை சங்கம் குடமுழா முதலிய வாத்தியமும் கறங்கின. சூரபதுமன் ஆகாயமார்க்கமாகவே தேரேறிவருவதை இந்திரனறிந்து கடம்பணிபுயத்துப் பெருந்தகையையடைந்து கைதொழுது வணங்கிச்சொல்லலாயினான். முன்னாளிற் பரம்பரனை நோக்கித் தவஞ்செய்தபோது அத்தனிமுதல்வனளித்தசகல விதப் படைகளையுங்கொண்டு சூரபதுமன் இன்று போர்செய்ய வருகின்றான். அவனைவென்று எங்கட்குச் சீரருளவேண்டுமென்றான். அவ்வகையாகஅவன் சொல்ல அவனுக்கருள்செய்து சிங்காதனத்தைவிட்டிழிந்து வாயுதேவனாகிய பாகனையழைத்து தேரைக்கொண்டுவரக் கட்டளையிட அவனுமவ்வாறே மலைபோன்ற தேரைக் கொண்டுவந்து சந்நிதானத்தில் நிறுத்த வேற்படையுடைய விசாகனதிலெழுந்தருளத் தேவர்கள் பூமழைபொழிந்தனர். இவ்வாறெழுந்தருளவே பூதர்களும் புறப்பட்டாரவாரித்தனர். தக்கை உடுக்கை துடி சல்லரி தடாரி மத்தளம் குடமுழா பேரி காளை புள்ளாங்குழல் ஆம்பல் கொக்கரைமுதலிய வாத்தியங்கள்முழங்கின. கின்னரர் தும்புருநாரதர்பாடினர். தேவர்களு முனிவர்களும் இறைவனை வாழ்த்தி வணங்கினர். சண்முகப்பெருமானுடைய ஆணையால் வீரவாகுதேவரும் இலக்கத்தெண்மரும் பூதகணத்தலைவரும் தேர்மேலேறித் தத்தம்படைகளுடன் சேனையுடன் செல்வாராயினர். இவ்வாறு தம்மைப் பூதப்படைகள்சூழச்சென்று குமரநாயகன் போர்க்களமடைந்தனன். பூமியிலு மாகாயத்திலுமாகிவரும் சூரபதுமனுடைய அவுணர்சேனையைப் பூதப்படைகள் வளைந்துகொண்டு பெரியதோ ராரவாரஞ்செய்து மரங்களும் மலைகளும் தண்டுகளும் கழுமுட்களும் சக்கரமும் கவண்கல் லும்வேலும் நாஞ்சிலும் அவுணர்கள்மேற் பூதவீரலெறிந்தனர். அவுணர்களும் கோபித்து வில்லினின்றும் விடப்படு மம்புகளுடன் மழு வாள் நாஞ்சில் சூலம் முசலம்

முற்கர முகப்பணமுதலிய ஆயுதங்களைப்பூதப்படைமேல்எறிந்தனர். பூதரோ இரதமோராயிரமெடுத்துயானையாயிரந்தளரமோதியும்யானையோராயிரமெடுத்துக் குதிரையோராயிரமழியப் பூமியில் மோதுவார்கள், பதினாயிரங் குதிரைகளைக் கையிற்கொண்டு ஆயிரகோடி யவுணர்களைப் பூமியில் விழச்செய்வர். குதிரைவீரர் யானைவீரர் தேர்வீரர் காலாட்கள் இவர்கள் பூதர்களை வளைத்துக்கொண்டு பாணங்களாலும் படைகளாலுங் கொல்லத்தொடங்கினர். இவ்வாறு பகைத்துப் போர்செய்கையில் பூதகணத்தலைவர் ஊக்க மிகுந்து போர் செய்கையில் அவுணவீரர் மாண்டார்கள். பிணக்காடுண்டாயதேயன்றி உதிரவாறும் பெருக்கெடுத்தோடின. அனந்தங்கோடி கவந்தங்கள் நாம் வேற்படை விசாகன் சந்நிதானத்தின்முன் இறந்துபட்டோமாதலால்இனிக் கொடியவெம் பாசத்தாலாகிய பிறவிவேற்கலையப்பெற்றோமென்று கூத்தாடுவது போலிருந்தது இங்கே அவுணப்படையில் பூதப்படைகள்செய்யும் வெற்றியை நோக்கி அதிசூரனென்பவன் தேராயிரமாயிர மொருபுறத்தே சேமத்தேராகச் செல்லவும் ஆயிரம்யானைகள்சார்ந்துவரும்படி இரண்டாயிரம்குதிரைக்கட்டியிழுக்கும் தேர்மேல் அதிசூரன் ஏறிக்கொண்டு வில்லைவளைத்து பாணங்களைச்செலுத்தி அநேகம் பூதரைக்கொன்றுகுவித்துவருகையில் பூதர்களவனைப்பார்த்து இவன் ஒற்றைத்தேராளியாகத் தன்னந்தனியே போர்செய்கின்றான் இவனே தான் வில்லாளியோவென்று சொல்லிக்கொண்டு பூதவீரர் தலைவரிலொருவனாகிய உக்கிரனென்பவன் சலந்தரனுடலங்கீண்ட சக்கரப்படையை யுண்டுமிழும் பூதவீரனும்தானவர் முதல்வனாகிய அசுரேந்திரனென்பவன் செய்யும் போர்த்திறங்கண்டு தண்டுகொண்டெறிய நேரே குறுகிப்பெசென்று மார்பில்மோத அவுணப்படைகள் அவனிறந்துபட்டானென்றே பயந்து சொல்லிக்கொண்டனர். உக்கிரனேவுதலும்வருகின்றதண்டு அவன்மார்பின் உளதாகிய சாலிகை சிந்தக் கொதித்துவந்து பருந்துகள் தங்கியிருக்கும் போர்க்களத்தில் இவனைப் பலியூட்டுவேனென்று நூறாயிரம்பாணங்களை ஒருதொடையிற்செலுத்தினன். கொடியனவாகிய பாணங்களை உக்கிரன்மேல் அதிசூரன்பெய்ய உடன்முழுதும் குருதியாறு சொரியக்கண்டு அவன் பெரியதோர் மலையைப்பிடுங்கியெறிந்தான். அதனால் அவ்வதிசூரனேறியிருந்த குதிரைபூட்டியதேர் பிதிர்ந்துபோகவும் பூமிமேற்படர்தல் பிழையாமென்று நினைத்துப் பொன்மலை போன்ற தேரில் நீலக்கதிர்போல் விரைந்து பாய்ந்தான். அப்படி பாயும் பொழுது அப்பன்மணித்தேரை யிழுத்துக்கொண்டு செல்லும் குதிரைகள் அழியும்படி மறத்தொழில்செய்யும் உக்கிரன் சிங்கம்போற் போயுதைத்தான். அவ்வாறுதைக்கவே அவ்வதிசூரனுடைய தேரிற்கட்டியிருந்த குதிரைகள் பூமியில் புதைந்து வீழ்ந்தன, அதனால் மிக்ககோபங்கொண்டு அவன் மேல் புதைய நூறுபாணங்களைத் தூண்டினன். அப்படி பாணங்களெல்லாம் தன்னெதிரே வருந்தன்மையையறிந்த உக்கிரன்கதையைக் கைக்கொண்டு வருவது கண்டு வேறொரு தேரிலேறித் தெய்வதப் படைகளைவிட்டு உன்னை இறந்துபடச் செய்வேனென்று எல்லா வழிபாடுகளையு மனத்தாலேதானேசெய்து விட்டு அக்கினியாத்திரம் வாங்கி வணங்கிவீசினன். இவ்வாறவன்விட்ட

அக்கிலிபாத்திரம் அக்கினிப் பொறிசிதறும்படிவர அப்படிவிட்ட பாணத்தினது வேகத்தைக்கண்டு சண்முகப்பெருமான் சேவடித்தியான பலத்தால் அதைப் பிடித்து விழுங்கிவிட்டான். அப்படி விழுங்கக்கண்டுவருணாத்திரம்விட அவ்வாறே யதனையுமருந்தினன், வாயுவாஸ்திரமேவினன், அதையும்பற்றி விழுங்கினன், பிரமாத்திரத்தையேவ அதையும் பற்றி விழுங்கினன். பின்பவன்கள்ளமாமாயப்பிரானிடம்பெற்றநாராயணாத்திரத்தையேவினன், அப்போதுசிங்கமுகாசுரன்மகனாகிய அதிசூரன் இனி யாமென்செயத்தக்கது! இவன்பிரமனோ! கள்ளமா மாயப்பிரானோ! கறைமிடற்றொருவனோ! கண்டறியேனேவென்றும் மும்மைப் பெருந்தேவரல்லது பிறராலே இப்படி செய்யவும் வல்லமையுண்டோவென்றும் அம்மும்மைப்பெருந்தேவரிலிவனுமொருவனாவானேவென்றும் அதிசூரனினைந்து கூறினன். கோபமிகுதியாகவுடைய அவுணர்கள் உக்கிரனுடைய ஏற்றங்கண்டுஇனியென்ன செய்வோமென்று கூற்றுவன் கைக்கொண்டவுயிர்போலக்கலங்க இந்திரன்முதலியதேவர்கள் இவ்வதிசயங்கண்டு தாமரையிலெழுந்தருளிய நான்முகப்பெருமானைப்பணிந்து எங்களால்தரப்பட்ட அஸ்திரசஸ்திரங்களும் நாராயணாத்திரமும் உமது பேராலாகிய பிரமாஸ்திரமும் இவனொருங்குவாயிற்பெய்யத்தக்கபோாற்றலெவ்வாறுபடைத்தனனென்றனர். அதைக்கேட்ட நான்முகத்தொருவன் இவனோ மதிச்சடைபொறுத்தமாசிலாமணிவரம்பெற்றுள்ளான், கந்தன் கழலிணை மறவாக்கவின்பெறுஞ் செல்வத்தான், எவ்வெவ்வகையுமாற்றவல்லான் 'அவனருளாலேயவன்றாள்வணங்கி' என்றவாறு அப்பரம்பரனருளால் மும்மையும் தொழுமுத்திபெற்றான். இவனோ எம்மினும் பெரியான், என்று மீறிலாதவனேயாவான், கருங்கடல் வண்ணனாகிய திருமாலேவியசக்கரத்தையுமுண்டவன்மையுடையோன், இன்னுமிகுந்திறல் படைத்தவன், வெற்றியிற்சிறந்தவன், உக்கிரனென்னும் பெயர்வாய்ந்தவன், இவன் நாமெல்லாம்கொடுத்தபடைகளையுண்டமைதானோபெரிது, நான்கண்ட அண்டங்களையுஞ் சிதையத்தாக்குவன், இவன்புகழுங் கூறமுடியுமோவென்றுசொல்லத் தேவர்கள் கேட்டுத்தலையையசைத்து இவனுக்கின்னும்வலிமையுண்டாகவெனக் கூறினர்.

இவ்வாறு ஆகாயத்தில் நடக்கையில் அவுணர் சேனைத்தலைவனாகிய அதிசூரன் உக்கிரனென்னும் பூதவீரனை நோக்கி உன்னைச் சிதைப்பேன் உளனமாகியபடை விடுகின்றேனென்றெண்ணாதை! ஞானநாயகமாகிய சிவாத்திரத்தைத் தொடுப்பேனென்று. மனத்தினால் பூசனைமுதலியவற்றை வகுத்துச் சிந்தையின் மிக்ககோபத்துடன் அவ்வத்திரத்தைப் பிரயோகிக்க அது சங்கார கருத்தாவைப்போ லுருக்கொண்டு விளங்கிற்று. அது அழலைச்சொரியும் நாகமும் யமனுருவும் பஞ்சபூதங்களும் கணங்களும் வேறுபல்படையும் அக்கினியும் போற்ற எவ்வுலகமு மஞ்சநடந்துவர உக்கிரன் கண்டு தன்கையிலிருந்த தண்டினை நீக்கிப் பவமகற்றும் திருவஞ்செழுத்தை விதிமுறை யுச்சரித்துக் கைதொழுதுஇறைவனடியைச்சிந்தித்தான். இவ்வாறுஉக்கிரன்வணங்கித் துதித்துக்கொண்டிருக்க ; இவனை நாமடுவதுநலமன்றெனத் துணிந்து தான் இவனைக்கொல்லுதல்தகுதியன்றென, சிவபெருமானதுபடைக்கலம் விரைந்து

சென்றது. இப்படிவந்த தன்மையைக்கண்டுசிவனே வென்றயிர்த்து அதிகுரனடுங்கினன்; பூதர்கள் பிறந்தார்கள். தேவர்கள் மலர்மழை பொழிந்தனர். பகைவர் விழிவழி நீர்பொழிந்தனர். நீங்குகின்ற தானவர் கூட்டத்தைநோக்கி நீங்கள் எங்குவதை விடுங்களென்று தேரினின்று மிழிந்து தன்கரத்திருந்த தண்டைக் கையிலேந்திக் கோபத்துடன் அதிகுரனைத் தாக்கினன்; அவனே பூமியில் பதைத்துவிழுந்தான்; நமனுமவனுயிரைக் கைக்கொண்டு சென்றான். உக்கிரனென்னும் பூதவீரனல் அதிசூரன்மாண்டமையையறிந்த அசுரேந்திரன் நெஞ்சுவிடமெனக் கொதித்துஅழலெழ நகைத்துப் பூதக்கூட்டத்தின் மேல்விரைந்து சென்றனன். இவ்வாறு சென்ற அசுரேந்திரன் இந்திரன் கையிலுள்ள நீண்ட வில்லினும் இரண்டாயிரமடங்கு நிமிர்ந்த வில்லேந்தி வளைத்துக் குணத்தொனிசெய்துசரமழை பொழிந்தான். பூதர்கள் அதுகண்டு தண்டுகளையும் மலைகளையும் கொண்டு போர்செய்தனர். அவற்றைத் தன்பாணங்களால் விலக்கிப் பின்னும் பாணங்களைச்சொரிந்துமுடியும் கைகளுமுடலும் முகமுந் தோளுமழுந்த வருத்தினன். இவ்வாறு பூதர்களைச் சின்ன பின்னம் படக் கொல்லவே, வீரரிற் கனகனென்பவன் எதிர்ந்தான். தன்னை யெதிர்ந்தகனகனென்னும் வீரனைப் பாணவருடம்பொழிந்து வருத்த, அவ்வீரன் உதிரவாரியோடு அவன் தேர்மேல் அடைந்து பாகனையும் தான் உயிர்நீங்கவுதைத்து அவன் வில்லினுணைக் காகம்போலத் தன் வெண் பற்களைச்சிறிக்கறைசேர்ந்த மேகம் பூமியிலிழிந்தாற்போலவு மீண்டுஅசுரேந்திரன்மேல் பெரியமலையொன்றை வாங்கியெறிய அது வில்லையொடித்தது; அசுரேந்திரன் வேறொரு வில்லையெடுத்துக்கொண்டு பூதர்கள் பயங்கொள்ள வளைத்து எட்டுப் பாணங்களைத் தொடுத்து அவன்விட்ட மலையைத்துகளாக்கிஆயிரம்பாணங்களாற்புயங்களும் வருந்தும்படிசெய்தான். அதனைக்கண்ட மத்தனென்பவன் இவன் செருக்கைக்கண்டு எதிர்ந்தான். அவன்மேலும் அசுரேந்திரன் பலபாணங்களையேவி வருத்த மத்தனென்பவனும் அசுரேந்திரனே டெதிர்ந்தான். அவனையும் ஆயிரம்பாணங்களால்வருத்த மத்தனுமயர்ந்தான். சிங்கனென்பவன் அதன் பின்னர்மிகக் கொடும் போர்செய்ய அவனு நொந்து நிற்கக்கண்டு பூதவீரர்களெல்லாரும் போர்செய்திளைத்தனர். இவர்கள் இவ்வாருக இளைக்கண்ட இலக்கத்தவரில்தண்டகனென்பவன் ஆயிரங்கணைகளை அவன்நெற்றியிலேஉதிரமெழவருத்தவயர்ந்தான். அதைக்கண்ட தாரகனிளையமகனுகியசோமுகனென்பவன் ஆயிரம் பாணங்களைச் சொரிந்து அவன் தேரை யழித்தான். தேரழியவே சோமுகனும்கோபமாய்வேறொருதேரிலேறி அவனுயிரைவாங்கும்படிவிட அத்தண்டகனும் தளர்ந்தான். அப்போது விசயனென்பவன் சோமுகன் கையிற்பிடித்தவில்லை யாயிரம்பாணங்களாற் றுண்டித்தான். வில்லழியவே சோமுகன் விசயன்மேல் தண்டைத் திரித்துவிட்டான். அதனுற் கலக்கமுறவே இலக்கத்தவரும் தனித்தனியேவந்து போர்செய்தனர். இவ்வாறு போர்செய்திளைக்கக்கண்ட சோமுகன் வீரவாகுதேவரை யெதிர்ந்தான். வீரவாகுதேவரும் தெய்வசிகாமணியாகிய சண்முகத்தொருவனைத் தாள்பணிந்து வில்லைவளைத்து நாணேற்றித் தேவரும் பிறரும் வியக்கவும்; அவுணர்க ளயர

வும் பாணமழையால் அச்சோமுகனை மறைத்தனர். அவ்வாறு மறைத்தத
னால் தன்னுடல் முழுதும் உதிரவெள்ளம் பெருகக்கண்டு தன் கையிலிருந்த
வில்லைவளைத்து பிறைமுகக்கணையையழுத்தினன், அதனால்பொருதஇருவரும்
இளஞ்சூரியனை யொத்திருந்தனர். சோமுகனே ஏழுபாணங்களை விடுத்து
வில்லைத் துண்டித்தான். வீரவாகுதேவரும் வேறொருவில்லைக் கையிலெடு
த்துவளைத்து ஆயிரம்பாணங்களை யேவினர். அப்படி செய்வதுகண் டமரர்
சோமுகனை வீரவாகுதேவர் வெற்றிகொள்வாரோ இச்சோமுகனே யானை
மகன் அவ்வீரவாகுவோ சிம்புளின்மகன், இருவர் போரும் வெகு அற்புதமெ
ன்றே பேசிக்கொண்டனர். பின்பு சோமுகன் வேறொருதேரிலேறி வீரவாகு
தேவரேறிய தேரையழித்தான். வீரவாகுதேவரோ சண்முகப்பெருமானைச்
சிந்தித்துத் தன்கையிலிருந்த வாளை யுறையினின்றும் கழற்றி அவன் கரத்
தைத் துண்டித்தனர். பின்பு வேறொருகையில் தண்டுகொண்டடித்தான்.
வீரவாகுதேவரோ அவன் தலையைக் காலாலுதைக்க மீண்டுஞ் சோமுகனும்
பின்னுந்தொடர அவனைக்கொன்றனர். அவுணருமஞ்சியோட்டெடுத்தனர்.
இதைக்கண்ட சூரபதுமன் பூதவெள்ளத்தின்மேல் கோபத்துடனெதிர்த்தான்.
அவ்வாறெதிர்த்து வில்லைவளைத்து நாணேற்றிப் பலபாணங்களை யெறிந்தனன்.
சிலபூதர்கள் இறந்துபட்டனர். சிலர் இரியல்போயினர். சிலர் திகைத்தனர்.
சிலர் நொந்தனர். இவன் வில்லைக்குனித்து நாணேற்றிய வோசை பன்னிரண்
டாண்டுவரையிலும்சலிப்பறவொலித்துக்கொண்டிருந்ததென்றால் இவன்வீற்றி
றலைச் சொல்லத்தக்கவர்கள் யார்? பின்பு பூதத்தலைவர்கள் நெருங்கிப் போர்
செய்யவும் அவர்களை அநேகமாயிரம் பாணங்களால் வருத்தி யயரச்செய்
தான். பிறகு இலக்கத்தவர்கள் போர்செய்தனர். அவர்கள் கையிலிருந்த விற்
களை யொடித்தெறிந்து அநேகம் பாணங்களைவிடுத் துடலையு மிளைக்கச்செய்
தான். இவ்வாறாக நவவீரரில் வீரதிவாகரனென்பவன் சூரபதுமனைப் பல
பாணங்கள்விடுத்து அவ்விரதிவாகரன் கையிற்பிடித்த வில்லையொடித்து அவ
னுரத்தையும்பிளக்க விழுந்தான். வீரராக்கதன் சூரபதுமனோடெதிர்த்து வா
ளொடுசூரபதுமனிருக்கிறதேரிலையணுகி அவன்வில்லைத் துணிக்க அவன்வில்
லொடிந்ததில்லை, வீரராக்கதனை யோர்தாளினு லவன்செல்ல வுந்துதலும்
விரைந்து பாரில்விழுந்தான். இப்படி விழுந்ததை வீரமகேந்திரன்கண்டு பல
பாணங்களை யேவச் சூரபதுமனும் நூறுபாணங்களைவிட்டு அவனையும் பூமி
யில் விழ்த்தினன். பிறகு வீரதீரன் விரைந்துவந்து சூரபதுமன்மேற் சின
ந்து பதினன்கு பாணங்களால் அவனையும் விழச்செய்தான். வீரமகேசன்
சூரபதுமனோடெதிர்த்து வேலாயுதமொன்றைவிடுக்க அவ்வேல் சூரன்மார்பிற்
பட்டுப் பொடிப்பொடியாயிற்று, சூரபதுமனே ஏழுபாணங்களைத்தோள்மே
லேவி அவனையும் பூமியில்விழச்செய்தான். இதை வீரகேசரிகண்டு சிலபாண
ங்களைத்தொடுத்துச் சூரபதுமன்மேலேவ, சூரபதுமன் அவனை யொருகை
யால் கடலில்விட்டெறிய அவனும் பின்பு சேனையைவந்துகூடினன். இதைக்
கண்ட வீரபுரந்தரன் யமாஸ்திரத்தைவிடுக்க அது சூரன்மேற்பட்டுப் பொடிப்
பொடியாகவே அநேகமாயிரம் பாணங்களைவிடுத்துவீரபுரந்தரனையு மிளைக்கச்

செய்தான். பிறகுவீராந்தகன்விரைந்துவந்துபலகணைகள்சிந்தினன்; அவற்றை யும்விலக்கிச் சூரபதுமன் அவனையு மாயிரம்பாணங்களால் அவன்பிடித்தவில் லும் ஏறியதேருமழித்து மார்பையும்பிளக்க அயர்ந்து விழுந்தான். இவ்வாறு நிகழ்வதை வீரவாகுதேவர்கண்டு தன்தேரோடுவந் தெதிர்க்கக்கண்டு சூரபது மன் இவன் மனத்திலே தூதுவனென்பதெண்ணி இன்னமு மென்முன்னே தூதனெனவந்தாயானல்துன்பமடையமாட்டாய்; வில்லைப்பிடித்தெதிர்நிற்பை யாயின்உன் னுயிர்வாங்கிவிடுவேனென்றான். அதற்குவீரவாகுதேவரோ சூரனை நோக்கி நான் தூதனு மமைச்சனுமாவேன், உரத்தைக்கொண்ட பகைவர் மேற் போர்க்குஞ்செல்வேன், வெற்றிவேற்கரத்தையுடைய விசாகனுக்குரிய வேண்டிய பணியுஞ்செய்வேன், யானே முற்றும் வல்லமையுடையேன், என் னேடு போர்செய்யென்ன, சூரபதுமனும் கோபமாய் ஆயிரங்கோடி பாணங் களை வீரவாகுதேவர்மேற் சொரிந்தான். வீரவாகுதேவரும் அளவில்லாத கணைகளைச்சொரிந்து சூரன்விட்டபாணங்களத்தனையும்ஒருசேரவழிக்கப்பின் ஒருநூறுபாணங்களைவிட்டு நெற்றியைப்பிளக்க அவற்றையும் விலக்கி நூறம்பு தொடுத்து வீரவாகுதேவரையும் வருத்தினன். பின்னும் வீரவாகுதேவர் அநே கம்பாணங்களைத் தேர்மேல்விட்டுப் பாகனையும்வருத்தினர். இவ்வாறு செய் யவே சூரபதுமன் வீரவாகுதேவரேறியதேரைச்சிதைக்க அவரும் வேறொரு தேரிலேறினர். அவ்வாறு தேரிலேறி அக்கினியாத்திரம் யமாத்திரம் நிருதி யாத்திரம் இந்திராத்திரம் பிரமாத்திரம் விஷ்ணுவாத்திரம் தொடுத்துவிடுக்க, சூரபதுமன்மேல் அவைவந்துவந்துபட்டு மட்டற்றதுகளாயின. இவ்வாறுகக் கண்டு வீரவாகுதேவரும் சிவாத்திரத்தை விடுக்க சூரபதுமனும் அதை வேறுவிட்டு விலக்கிப் பதினைந்து பாணங்களைத்தொடுத்து வீரவாகுதேவர் கையிற்பிடித்த வில்லையொடித்தான். வீரவாகுதேவருக்குக் கோபமூண்டு வேற்படை யொன்றைவிடுக்க அது அச்சூரன்மேற்பட்டொழியச் சூரனும் தன்டொன்றை வாங்கி வீரவாகுதேவர் மார்பே யிலக்காகவிட அதுபட்டு உதிரஞ்சொரிந்துகொண்டு தேரின்மேற் சாய்ந்தனர். இச்செய்கையெல்லாம் அறிந்த சரவணேற்பவன் சூரபதுமனேரோசென்றெதிர்க்க, அவர் வருகை யைக்கண்ட சூரபதுமன் அவர் திருமேனியினழகை முற்றுநோக்கி மிக்க கோபமாய் நம்பெருவள்ளலாகிய முருகப்பிரானேடுஞ்சொல்லலாயினன். உன் னெடுவந்த சேனையாவுமொழிந்தன, அதன்படைத்தலைவனுகிய வீரவாகுவும் துயரத்தோடும் வீழ்ந்தான். நேற்றுப்பிறந்த பச்சைப்பசும்பாலகனுகிய நீயா என்னெடு போர்செய்யவல்லை, நின்வல்லமையை யொருகணத்திலொழிக்கின் றேன் பாரென்றான். அதைத்திருச்செவிசாத்தியருளிய சண்முகப்பெருமான் என்னை இளங்குழந்தையென்றெண்ணிக் கொண்டிருக்கின்றாயே! நமது பெரு வாழ்வாகிய சிவபெருமானது நெற்றியிற்றோன்றும் தீப்பொறி யொன்றன்றோ கடைநாளில் உலகத்தை முழுதுமழிப்பது; நீயோ விவேகஞ்சிறிதேனுமில்லாத பேதை! உலகத்திலே வீரர்களாவார் பாலனென்றும் பெரியாரென்றும் பேசார் களே. யாரேனும்போர்செய்யவருவாரானல் எதிர்ந்துபோர்செய்வார்கள்; இனி ஆண்மையொடு மிகுந்த நின்சேவகந்தன்மையைக்காட்டு, பார்ப்போம் மிகப்

பசும்பாலனென்ற என்வலிமையால் கெடுத்து விடுவேனென்று சொல்லினர்; பின் கோபத்துடன் பலபாணங்களைச் சூரபதுமன்விட அவற்றையெல்லாம் முருகப்பெருமான்தடுத்தனன், அவ்வாறு தடுத்ததுமல்லாமல் அச்சூரபதுமன தோள்மேற் பதினான்கு பாணங்களைவிட்டு அவையெல்லாம் முற்றுமொழித்தனர். பின்னும் வேறுமோராயிரம் பாணங்களைவிட்டு அச்சூரன் கைவில்லை யொடித்தெறிந்தனர், பின்பவன் வேல்விட்டெறிய அதையும் பதினான்கு பாணங்களைவிட்டுக்கண்டித்தனர். சூரபதுமனே வேறொருவில்லையெடுத்துக் குகப்பெருமான்விட்ட பாணங்களை நூறியேழுபாணங்களைத் தோளிலெய்யவும் அவைதுகளாகவும் மிகக்கோபித்துப் பத்துக்கணைகளா லச்சூரபதுமன் கையிற்பிடித்திருந்தவில்லைக்கண்டித்து ஆயிரம்பாணங்களால்அவனேறியிருந்த தேரையுமழித்துவிட்டு அதுவுமல்லாமல் சேமத்தேர் நூற்றினையுமழித்தனன். சூரபதுமன் தன்கையிலிருந்தவில்லழிந்ததல்லாமல் தேருமழியவே, பூமியிலிழிந்து தான்சூலப்படையேவ, அவற்றையும் பன்னிருபாணங்களை விட்டுக்கண்டித்துவிட்டுப் பின்னும் பலபாணங்களைத்தூவி அவனணிந்த மதாணிப் பதக்கத்தையு மறுத்தனன். இதைக்கண்ட அவுணர்களெல்லா மங்கேயடைந்து எமது முத்துக்குமாரப் பெருமானை வளைந்துகொண்டு போர்செய்ய அவனும் ஒரு சக்கரத்தையேவ அதுசேனைமுற்றுமழித்துவிட்டு அப்பெருமான் கையிலேவந்தடைந்தது. சூரபதுமனே பிரமாத்திரத்தையும் விஷ்ணுவாத்திரத்தையும்விட அவற்றையெல்லாம் குகப்பெருமானது வேற்படையே விழுங்கிற்று. பிறகு சூரனே சிவாத்திரத்தைத்தொடுக்க அதைத்தமது திருக்கரத்தினாலேபிடித்துக் கொண்டு அவனுக்குத்தக்க புத்திமதிகளைச்சொல்லவும் அச்சூரபதுமன்கேளாமல் இனி நாளைமட்டில்லாத சேனையுடனேவந்துபோர்செய்யலாமென்று மாயமாய்மறைந்து போயினன். முன்னே போர்க்களத்திலே யயர்ந்து வீழ்ந்திருந்த சேனைவீரரும் சண்முகப்பெருமானை வந்தடைந்தனர். சிலபூதவீரர் சூரபதுமனுடைய வடக்குவாயலிற்சென்று அதிசூரனொடும்போர்செய்து அவனையவன் சேனையுடன் கொன்று மதிலையுமிடித்துக் கோபுரத்தையுமிடித்துத் தகர்த்துக் கடலிவிட்டு அரக்கரைமுழுது மழித்துவிட்ட தல்லாமல் முருகப்பெருமானையும்வந்தடைந்தனர். பின்பு சண்முகப்பெருமானும் பூதவீரரும் இலக்கத்தொன்பதின்மரும் தம்மைப் புடைசூழ்ந்துவரத் தாமோ பாசறையுட்புகுந்து தமது மாளிகையையடைந்து சிங்காதனத்திலமர்ந்துவீற்றிருந்தனன்; சூரியனும் அந்தரமும் பூமியும் இருளும்படி மேற்கடலின்மறைந்தனன். இவ்வாறு அப்பூதர்கள்வந்து வடக்குவாய் தலையழித்துப்போயினர் என்றுதூதர் சொல்லக்கேட்ட பானுகோபன் சிலரையழைத்து நமது மரபின் தச்சனாகிய மயனென்பவனை வெகு சீக்கிரமாயழைத்து வாருமென, அவ்வாறே அவர்களழைத்துவந்துவிட அவனும் பானுகோபனைவணங்கினின்றான். அவனைநோக்கி நமது நகரத்தின் வடகோபுரத்தை முன்போலப் புதுக்க வேண்டுமென்றுசொல்ல; அவ்வாறே புதுக்கிப்போயினன். பானுகோபனே மாகாயனென்பவனைநோக்கி நீ சென்று வடக்குக் கோபுரவாயிலைக் காத்திருவென்றுசொல்லி யனுப்பினன். அவனும் அவ்வாறே செய்யச்சென்றான். இதுகிடக்க;

இரண்டாநாட்சூரபதுமன்யுத்தப்படலம்
முற்றிற்று.

---

## மூன்றுநாள்பானுகோபன்யுத்தப்படலம்.

வைகறையிலெழுந்து பானுகோபன் காலைக்கடனை முடித்துக்கொண்டு தான் போரில் அபசயப்பட்ட காரியத்தைச் சிந்தித்து வருந்தித் தன்தாயை யீன்ற தாயாகிய மாயையைநினைத்தான். அவன் நினைத்தலும் அவள் அவன் கட்புலனுக்குத் தோன்றினின்றாள். அவனே பிதாமகியைவணங்கிநின்று சண் முகப்பெருமான் தூதனாகிய வீரவாகுவால் நான் மானமிழந்து மிகவருந்தி னேன்; இங்கே பகைவரோடுபோர்செய்து முடிவிற்புறமுதுகிட்டோடுவார்நிலை மையை யடைந்தேனென்றான். அதைக்கேட்ட பிதாமகியாகிய மாயையோ அப்பா! நீ வேதநெறி பிறழ்ந்தாய், தேவர்களைச் சிறையிலிட்டனை! தேவேந் திரனையு முறைமைகெடச் செய்தாய், முனிவர்செய்யுந் தவத்தையழித்தனை, தேவரையும் பகைத்தனை; நீஎப்படியுய்யலாம், அழியாத தன்மையுள்ள உயிர்க ளெல்லாம்வணங்கும் மும்மைப்பெருந்தேவரோ நின்பகைவரொன்றால் எங்ஙனம் உயிர்வாழ்வை! கெட்டவழியில் மிகுதியு நடப்பதல்லாமல் பழித்திறம் பூண் டாய், பகைவர் இந்நகரத்தை யழித்துப் போர்செய்ய அவர்களுக்குத்தோற்று விட்டாய்! விதியையாரோவெல்லவல்லவர் எனப்பலபலபேசி இனியாவதென்ன விருக்கின்றது, பேராற்றல் படைத்த என்மகனாகிய சூரபதுமனது அருந்தவச் செல்வமே! நீ வேண்டுவது கேள் தருகிறேனென்றாள். அதைக்கேட்ட பானு கோபன் நேற்றுப் போர்விரும்பிச்செய்த வீரவாகுவை இன்று நான் சேனையு டன்சென்று வெற்றிகொள்ள ஒன்றொருபடைக்கல மளிக்கவேண்டுமென்றான். மிக்கவலிபெற்ற சூரபதுமன் மகனாகிய பானுகோபன் இவ்வாறு சொன்னதை யெல்லாம் மாயைகேட்டு மாயாத்திரம் விதித்துக்கொடுத்து அவனுடன்சொல் வாளாயினாள். இதை நீ விடுப்பையானால் முருகப்பெருமான் தூதனையேனும் பிறரையேனும் உணர்வையழித்துச்சுற்றும்; வாயுவின்றொழிலையுஞ்செய்யும்; இற்றைநாள் உனக்கே வெற்றியுளதென்றாள். மாயை இவைகளைச்சொல்லி வா னின்வழியே சென்றபிறகு வரத்தினாற்பெற்ற மாயாத்திரத்தை கையில்தாங்கி நேற்றென்னை வெற்றிகொண்டு சென்ற வீரவாகுவை வெற்றிகொள்ள வேண்டு மென்று துணிந்து அம்பறாத் தூணியைத்தாங்கிமற்ற ஆயுதங்களெல்லாமெடுத் துக்கொண்டு வில்லேந்தி இருபதினாயிரவெள்ள மவுணர்சேனை தன்னைப்புடை சூழப்புறப்பட்டான். அப்போது முரசு துடி குடமுழா சல்லரி கரடிகை மத் தளம்காகளம் உடுக்கை இரலை முதலிய வாத்தியங்கள்முழங்கின. யானை தேர் குதிரை காலாட்படையென்னும் நால்வகைச் சேனையுஞ்சூழ்ந்துவர மகேந்திர நகரவாயிலைக்கடந்து குமரநாயகன் எழுந்தருளியிருந்த போர்க்களத்தையடை ந்து தன்தூதனை நோக்கி நீ ஏமகூடஞ்சென்று பாசறையை யடைந்து வீர வாகுவைநோக்கி இன்றுன்னைப் படுத்தல்லது மீளானென்று பானுகோபன் சொல்லியனுப்பியதாக விரைந்தனுப்பினான். அதைக்கேட்ட வீரவாகுதேவர் நான் பானுகோபனை யுயிர்வாங்கவருகிறேனென்றுசொல்லியனுப்பினார். அவ் வாறு சொல்லிவிட்டுப் பூதவீரரும் இலக்கத்தெண்மரும் தன்னைச்சூழ்ந்துவரக் குமரநாயகன் சந்திதானமடைந்து எங்குமாகி யிருந்திடும் இறைவனது பாத

மலரை அட்டாங்கமாகப்பணிந்தெழுந்து கைகூப்பிநிற்ப அவனைநோக்கியருளி அங்குநடந்ததை முழுதுமறிந்து முருகப்பெருமான் சொல்வதாயினன். வீரவாகுவே! நீஅவனோடும் போர்செய்யும்போது அவனெந்த அம்பு விடுகின்றானோ, அதற்கெதிர் அம்புதொடுத்து அவற்றை நீக்கவேண்டுகிறேன். அவன் மாயைசெய்யத் தொடங்குவானேல் நமது ஞானசத்தியாகிய வேற்படையை விடுகிறேன்; அது அம்மாயையை நீக்கிவிடும் நீ விரைந்துபோவென்றான்; அவ்வாறுசொல்லிய முருகப்பெருமானை வணங்கி விடைபெற்றுப் போர்க்களங் குறுகினான். பூதவீரரும் அவுணவீரரும் தம்மிற் கைகலந்தனர். அவர்கள் முத்தலைச்சூலம்முசலம் கதை மழு சக்கரம் மலை மரங்களாகிய இவற்றாற் போர் செய்யவே; அங்கே யொழுகிய உதிரவாற்றில் மிதந்துவரும் மாமிசத்தையருந்தப் பறவைகள் ஆகாயத்தில் நெருங்கின. இவ்வாறு போர்செய்கையில் சிலர் கைகள் துணிந்தன, தோள் துணிந்தன, தலை துணிந்தன, மார்புபிளந்தன, கழற்கால் துணிந்தன, சிலர் மெய்பிளந்தன, பூதர் இறந்துபட்டனர், அங்கே சில அவுணரும் அவ்வாறாயினர். பூதத்தலைவரோடும் அவுணத்தலைவரும் நெருங்கிப் போர்செய்தனர். இலக்கத்தெண்மரும் தத்தம் வில்லையேந்தி அவுணர்களிற் பலரைக்கொன்றனர், அவுணரிற்பலபேர் இறந்துபட்டதைக்கண்ட பானுகோபன் தானொருவில்லையெடுத்துத் தேர்ப்பாகனைத் தேரைத் தூண்டக் கட்டளையிட்டுச் சாரதப்படையுட்புகுந்துசென்றனன்; வீரவாகுதேவரும் தமது துணைவருமுடன்வரத்தாமெதிர்ந்துபாணங்களைச்சொரிந்தனர். அப்பாணமோ மேகங்களைக்கடந்து சென்றன, தேவர்கள் விரும்பி வசிக்கும் சேணெறியிற் புகுந்தன, அமராவதிமுதலிய எண்டிசைநகரங்களிலும் சென்றுலாவும், மலைகளெல்லாம்போயுலாவும், அவை மேகத்தின் மேலனவோ! பூமியை நாடுவனவோ! வைகுந்தத்திற் செல்வனவோ! கடலிற் சேர்வனவோவென்று தேவர்கள் தம்மில் நினைந்தனர். அத்தேர்களிலிருக்கும் பாகர்கள் குதிரைகளைத்தூண்டிச்சூரியன்முதலிய கிரகவரிசைவரையிலுஞ்சென்றனர். தேவர்களும் இரியல்போயினர். பானுகோபனோ தன்வில்லில் ஆயிரம்பாணங்களைத் தொடுத்து வீரவாகுதேவர் மார்பிலெய்தான். அவை தன் மார்பிலழுந்த வீரவாகுதேவர் கோபங்கொண்டு தான் ஆயிரம்பாணங்களைத் தன் வில்லினின்றும்விடுத்துப் பாகனையும் குதிரைகளையும்தேரையும்அழித்தனர். தேரழியவே பானுகோபனும் வேறொரு தேரிலேறித் தன்கையில் வில்லையெடுத்து அவன் வில்லைவளைக்குமுன் ஆயிரம்பாணங்களைத்துரந்து அவன் மார்பைப்பிளக்க அவனும்வருந்தினான். பூதர்களெல்லாரும் ஆரவாரித்தனர். இவ்வாறுபூதர்கள் ஆரவாரிப்பதைக்கேட்ட பானுகோபன் மனம்வருந்திக் காதில் தீயவிடம்சொரிந்தாற்போலக் கோபித்துத் தெய்வப்படைகளால்இத்தூதனாற்றலைக் கெடுக்க வேண்டுமென்றெண்ணி வருணாத்திரமெடுத்து வில்லிற்பூட்டி நீ பூதவீரர்களையும் தூதனையும் இலக்கத்தெண்மரையு மழிக்கவேண்டுமென்று தொடுத்துவிடுத்தான். அது கடையுகத்தில் உலகமேழினையும்பரந்த எழுகடல் வெள்ளம் போலச்சென்று ஆகாயத்தையளாவி இடியோசை காட்டியது. அதைக்கண்ட தேவரும் கலங்கினர். பூதர்களும் கலக்கங்கொண்டனர்; இலக்கத்தெண்மரும்

மனம் குலைந்தனர். இதைக்கண்ட வீரவாகுதேவர் உலகமுண்டலாவிவரும் ஆக்கினேயாத்திரத்தை விடுக்க எங்கும் புகைமூடிக்கொண்டன, வெம்மையு மெழுந்தன, தீப்பொறி யெங்குஞ்சிதறின, திக்கொள்ளியு மெழுந்தன, ஒளி யெழுந்தன, சடசடவென்னும் பேரொலியெழுந்தன, வானமுந்திசையும் எங்கும் நெருப்புமயமாயின. முடிக்கும்படிவந்த அந்தப்படைகளால் அண்டம்வெடிக்கத்தொடங்கியது. கங்கையிலுள்ளமீனினம் வற்றித்துடிக்கவும் கங்கையுமப்படிமாயிற்று.சமுத்திரமும் மலைகளும்பொடிக்கலுற்றன பூமியும்தளர்ந்துபிளந்தது. சண்முகப்பெருமானுடைய தூதன்விட்டபாணம் இவ்வாறு சென்று ஒருமுகூர்த்தத்தில் வாருணாத்திரத்தையழித்து அவ்வெள்ளத்தையும் கிரகித்து மேலெழுந்து போர்த்ததுபோன்றது. இப்படி தன்னைப்புறத்தே சுற்றிக்கொண்ட வாயுவாத்திரத்தைவிடப் பானுகோபன்கண்டு அவ்வாயுவாத்திரத்தைத்தொடுத்துவிடத்தன் மேல்வரக்கண்டுவீரவாகுதேவரும்நாகாத்திரத்தை விடுத்தனர். அது ஆயிரம் பதினாயிரம் முதலிய கணக்கற்ற பாம்புகளாகி அவ் வாயுவாத்திரத்தின் வலியைக்கவர்ந்தது. பானுகோபனே கருடாத்திரத்தை விடுத்து அதன் வலியைக்கவர வீரவாகுதேவரும் நந்திதேவர் படையை விடுத்து அதன்வலியையடக்கினர். மிக்க கோபமாய் வீரவாகுதேவர் நந்திப் படைசெலுத்த அநேகமாயிரம்கோடி எருத்தின்வடிவங்கொண்டு, உலகமெல் லாநெருங்கிப் பெருமூச்செறிந்தாரவாரித்தது. இப்படி நந்திமாப்படையனு கிக் காருடப்படையை வலியழித்துவிட்டது. பானுகோபனே அந்தகாத்திரத் தைத்தொடுத்தான். அவ்வந்தகப்படையும் நந்திமாப்படையைவெற்றி கொள் ளாததையறிந்துபிரமாத்திரத்தைப் பிரயோகஞ்செய்தான். பிரமாத்திரஞ்சென்றுவிண்ணிடத்திலேநந்திமாப்படையைவணங்கிநான்நீசனேவலால் வந்தேன்; நின்வரவைச் சிறிதேனுமறியேன், கோபங்கொள்ளாதையெனவேண்டி நின்று விரைந்தகன்றது நந்திமாப்படையை பிரமாத்திரம் தொழுது சென்றமையை தேவர்கள் கண்டுஆரவாரித்தனர்.அதுகண்டு வீரவாகுதேவர்நாராயணாத்திரத் தைத்தொடுத்துவிடுத்தார்.அந்நாராயணாத்திரம் நந்திமாப்படையெதிரடைந்து போர்செய்துகொண்டு நின்றது. அதுகண்டு பரமசிவன் சிம்புளாகவந்த வீர பத்திரப்படையை விடுத்தனர். இப்படிப்பட்ட வீரபத்திரப்படையெழுந்து சென்றபோது நந்திமாப்படைமுன் போர்செய்துமாயன்படை நீங்கியது. இவ் வாறு விஷ்ணுவாத்திரம் தொலைந்த பின்பு இமையோரையில் அகிலமுழுது மழிக்கும் சிவாத்திரம் தொடுக்கவெடுத்தான். குறைவில்லாததாகிய சிவாத்திரம்விடும்படி மஞ்சனம் சந்தனம் மாலிகை மணிவிளக்கு திருவமுது முதலியவற்றை மனத்தினாலே தியானித்துநிரப்பி மிக விரைந்து தொடுத்துவிட்டான், தாதையின் படையைப் பிரயோகஞ்செய்தமையைக்காதன்மாமகன் கண்டுதானுமப்படியே ஆதிபகவன் படையையெடுத்துத் தன்மனத்தி லருச்சனைசெய்துவிடுத்தனன், இவ்வாறுவழிபாடு செய்தபிறகு சூரபதுமன்மகனாகிய பானுகோபன்விட்ட படைக்குமாறாகி மேன்மையாகவே மீளவேண்டுமென்று வேண்டியேயல்லது மேலான இறைவன் படைசெயத் தொடுத் தான். வீரவாகுதேவர்விட்ட சிவாத்திரம்! பானுகோபன்விட்ட அத்திரத்

னுடன் போர்செய்து கொண்டிருந்து அவற்றை விட்டவரிடமே போய்ச்சேர் தன,பொழுதும்பட்டது. பானுகோபனேவானில்மாயையால்மறைந்துகொண்டு தன்பிதாமகியாகிய மாயையால் கொடுக்கப்பட்டமாயாத்திரத்தை தியானஞ் செய்து விடுத்தான். அது விரைவில்வந்து வீரவாகுதேவருடையசேனையனை த்தையும்மயக்கிக் கட்டிக்கொண்டுகடலிலிட்டது. அதைக்கண்டு பானுகோ பனுமகிழ்ச்சியடைந்துதன்பிதாவாகியசூரபதுமன்முன்னடைந்துஅன்று போர் க்களத்தினடந்ததையெல்லாஞ்சொல்லித்தன்மாளிகையை யடைந்தான்.

அதையறிந்த நாரதமுனிவர் குமாரசற்குரு சந்நிதானமடைந்து பானு கோபன் செய்துபோனதை யறிவிக்க, அதைத் திருவுளத்தடைத்த குமார சற்குரு தன்கையிலிருக்கும்வேற்படையையேவ,அதுவிரைந்துசென்று அம்மா யையின் வலியையெல்லாங்கெடுத்து அவன்கையில் வந்துசேர்ந்தது. அக்கட லிற்சென்றிருந்த வீரவாகுதேவரோ யுள்ளிட்டோரெல்லாம்மயக்கமகன்றுமகே ந்திரநகரையெதிரேநெருங்கஅவருள்வீரவாகுதேவர்சொல்லாநின்றனர். ஆகாய த்தில்மறைந்து நின்று மாயையால்நம்மை வென்றோடிப்போனகள்ளனாகியபா னுகோபனைத்தலையறுத்தல்லதுநமக்குச்சகலநன்மையுந் தரும்குமாரசற்குருவி னுடைய சந்நிதானத்திற் செல்லேன், என்வில்லுடன் நானும் தீயில் இறந்து படுவேனென்று தன் சேனையுடன் மகேந்திரநகரின் மேற்புறவாயிலை யடைந் தார். அங்கே புலிமுகனென்னுமரக்கன் மாண்டான். பின்பு வீரவாகுதேவ ரும் ஆக்கினேயாத்திரம் வாயுவாத்திரம்இவைகளைவிடுத்து அம்மகேந்திர நகர மழியும்படி செய்யத் தேவர்கள் பகைவனாகிய சூரபதுமன் அத்தீயையவிக்கச் சத்த மேகங்களையுமேவினான். அவைகள் மிகுந்த மழைபெய்து அத்தீயை யவிப்பதை யெதிரிற்கண்டனர்.

மூன்றுநாள்பானுகோபன்யுத்தப்படலம்

முற்றிற்று.

---

## இரணியன் யுத்தப்படலம்.

வீரவாகுதேவரோ அதைக்கண்டு கோபித்து வடவாமுகாக்கினியாத்தி ரம் பிரயோகஞ்செய்தனர். அது சென்று ஆகாயத்திற்படர்ந்த சத்தமேகங் களை யெல்லாம் கிரகித்துவிடவே, அம்மேகங்கள் விழுந்து கடலிற்சென்றன. தூதவரோ விரைந்துசென்று இதனைச் சூரபதுமனுக்கு அறிவித்தனர். அதை க்கேட்ட சூரபதுமன் மிக்ககோபங்கொண்டு நிற்க அருகேநின்ற மனந்தூய னும் ஆயிரம்வேதமுணர்ந்தானும் மெய்ந்நெறியிற் செல்பவனுமாகிய இர ணியனென்னும் அச்சூரன் மகன் தன்தாதையைப்பணிந்து நான் சொல் வதைக் கேட்டருளு மென்றிதனைச் சொல்லத் தொடங்கினான். ஒளியுள்ள தாய்ச் செல்வநிரம்பியுள்ள பொன்னுலகத்திலுள்ள தேவர்கள் பலரையும் நாம் சிறையிலிட்டது பெரும்பாவமேயல்லது அறத்தாறென்று சொல்லப்படு

மோ! அவர்களையெல்லாம் நாம் வெற்றிகொண்டோமென்பது சோமசூரியா க்கினியென்னு முச்சுடரையுங் கண்களாகக்கொண்ட நமதுபரம்பொருளாகிய சிவபெருமானருளியவரத்தின் மேம்பாட்டினாலன்றி வேறொன்றாலன்று. நம் மிறைவனுடன் மாறுகொண்டாரெல்லாம் இறந்துபட்டனரேயல்லது இருந்தா ரென்பாரைக் காணகில்லேன். இப்போதோநமக்கவ்வரங்களெல்லாம்பாலித்த பரமசிவனுடைய திருக்குமாரனே நம்மொடு போர்செய்யவந்திருக்கின்றனன். அவ்வாறாகையால் நாம் அவனோடு பகைத்துப் போர்செய்வது மழகேயன்று, நாம் செய்தபிழையை நாடியே தண்டிக்க நமது குகப்பெருமா னெழுந்தருளி னான். ஆகையால் தேவர்களைச் சிறையினின்று நீக்கி அவனெதிரே சென்று நாம் பண்ணிய அபராதமனைத்தும் பொறுத்தருள வேண்டுமென்று வேண் டினால் அவனே கயிலையைநாடிப் போய் விடுவானென்றான். இவ்வாறு தன் மகனாகிய இரணியன் சொல்லியதைக்கேட்ட சூரபதுமன் மிக்ககோபத்துடன் சிலசொற்களைச் சொல்ல அதைக்கேட்ட இரணியனும் அடியேன் அபராதத் தை மனத்திற்கொள்ள வேண்டாம். இப்போதே நம்முடன் போர்செய்யவந் திருக்கும் பகைவரெல்லாமோடிப் போகும்வண்ணம் போர்செய்கிறேனென்று சொல்லிநின்றான் அதைக்கேட்டசூரபதுமன் மனமிகமகிழ்ந்தான். இரணியனே தாதை கட்டளைபெற்றுச்சென்றுதன் மாளிகையையடைந்து வில்முதலியப டைகளையேந்திநாலாயிரம்வெள்ளம்அவுணப்படையையழைத்துகொண்டுபோ ர்க்களங்குறுகினான். முத்தலையுள்ள வச்சிரவாகு வென்பவனுக்கு மூத்தவனா கிய இரணியன் மறமேகுடிகொண்ட மனமுடைய தன்சேனையைநாற்றிசையி லும்பார்த்து பலவிதமாகவளைந்து கொள்ளக்கட்டளையிட்டுத்தான் மேற்றிசை யை நாடிநடந்தான். அதைக்கண்டவீரவாகுதேவரும்தம்முடைய சேனையை யும் அவ்வாறே யமைத்துத்தாமும் இரணியனை நோக்கி யெதிர்ந்தனர். இவ் வாறெதிர்ந்தபோது பூதப்படையும் அவுணப்படையும் ஒன்றோடொன்று கை கலந்தன. சண்முகங்கொண்டதாணுவுக்கிளைய வீரவாகுதேவர்இரணியனுடன் வந்த அவுணரையெல்லாம் பாணமழைபொழிந்து கொல்லுகையில் சூரபது மன் மகனாகிய இரணியனே ஆயிரம் பாணங்களையேவி அப்பூதப்படையை இரியல்போகச் செய்தான். அவுணவிரரில் நீலனென்னும் பூதவீரன் இரணிய னோ டெதிர்த்து அவனேறியிருந்த தேருடன் அவனை ஆகாயத்தில் விட்டெ றிந்தான். அவன் தேருடன் மீண்டபொழுது அவனைத் தன்காலா லுருளும் படி நிலத்தில்வீழ்த்தி அவன் மேற்பாய்ந்தான். அதைக்கண்ட இரணியனே தன்மாயையினால் வேறோருருவங்கொண்டு காட்ட அதைத்தொடர்ந்து சென் றான். இதற்குள் இரணியன் மெலிவுதீர்ந்து வேறொரு தேரிலேறி நீலன்மேற் பாணமழைபொழிந்தான். அதனால்நீலன்மனவாட்டமடைந்திருந்தான். அதை க்கண்ட வீரவாகுதேவரும் தங்கையிலேந்திய வேலால்அவன்மாயையைக்கெ டுத்துவிட அவனும் வீரவாகுதேவர்மார்பின்மேல் ஆயிரம்பாணங்களையேவி னான். அவைகளோ மார்பிற்பட்டவுடன் பொடிப்பொடியாயின. வீரவாகு தேவரோ ஆயிரம்பாணங்களை இரணியன்மேலேவி அவன் முதுகிற்கட்டியிரு ந்த அம்பறாத்தூணியையும் பாணங்களையும் தேருடனழித்துவிட்டு, அவன்

சேமத்தேர்களையெல்லாம் பொடிப்பொடியாக்கினர். இரணியனோ இச்செயல்களை யெல்லாங்கண்டு நாமோ இறந்துபடுவது திண்ணம், நமது பிதாவும் இளையபிதாவும் இறந்துபடுவர், பானுகோபன் முதலானோரும் இறந்துபடுவது திண்ணம், நாம் எல்லாரும் இறந்துபடுவது திண்ணமாதலால், இவர்களுக்கு உத்தரகிரியை செய்வதற்கே யாளில்லாமற் போய்விடுமே, ஆதலால் நாம்உத்தரகிரியை செய்வதற்காகவாவது மறைந்திருக்க வேண்டுமெனத்துணிந்து அங்கே யருவமாய்மறைந்து மீனுருக்கொண்டு கடலிலொளித்துக்கொண்டனன். இரவுகழியவே சூரியனுங் கீழ்த்திசையி லுதயமானான். இவனேஇவ்வாறுருக்கரந்த செய்தியைத் தூதர்கள் சூரபதுமனிடஞ்சென்று தெரிவித்தார்கள். அதைக்கேட்டிருந்த சூரபதுமன் கோபங்கொள்ள, அங்கேயிருந்த வேறொரு குமாரனாகிய அக்கினிமுகனென்பவன்நானே சென்றுபூதப்படையைக் குமாரனோடு வாட்டிவருகிறேன் கட்டளையிடவேண்டுமென்று கேட்க, அதைக்கேட்ட சூரபதுமன் மனமகிழ்ந்து நீயே சென்று வெற்றிகொண்டு மீண்டுவாவென்று சொல்லித் தன்மாளிகையை நோக்கி யடைந்தனன்.

இரணியன்யுத்தப்படலம்

முற்றிற்று.

---

## அக்கினிமுகன் வதைப்படலம்.

அவ்வாறடைந்த அக்கினிமுகன் தன்படைக்கல மெல்லாமெடுத்துக்கொண்டு தேரேறி மிக்கசேனைகள் சூழ்ந்துவரப் பூதப்படைகள்நிறைந்திருக்கும் போர்க்களங் குறுகினான். பூதர்களும் அவுணர்களுங் கைகலந்தனர். அவர்கள் அவ்வாறு போர்செய்கையில்இருதிறத்தாரில் இலக்கத்தவர்முனைந்து அவுண வெள்ளத்தைச் சின்னா பின்னப்படுத்த அவுணர்கள் எதிர்நிற்கமாட்டாம லோடிப் போயினர். அவர்களோடக்கண்டு அவருள் மேகன் சோமன் முதலிய படைத்தலைவர் பூதப்படையை நெருங்கி மிகவு முக்கிரமாய்ப் போர்செய்தார்கள். அதைக்கண்டு நவவீரரு ளொருவனாகிய வீரபுரந்தரன் விரைந்துபோர்செய்யத்துணிந்துஅச்சேனைகளையும்சோமனையும்கொன்றனன். பின்னும் அவுணர்கள் இதைக்கண்டே யிரியல் போயினர். அக்கினிமுகன் கொதிப்புள்ள முகமுடையானாய்க் கூரிய பாணங்களையேவி அநேகம் பூதரைக்கொன்றான். வீரபுரந்தரனோ அவன்மேற் கோபமாய் எதிர்த்துக்கொலைத்தொழில்செய்யும் கூரியபாணங்களையேவ அதைக்கண்டு அக்கினி முகனும் வீரபுரந்தரன் வில்லையுந் தேரையும் அம்பறாத்துணியையு மறுத்தது மன்றி அவன் மார்பிலும் அழுந்த அநேகமாயிரம் பாணங்களையேவ மூர்ச்சையடைந்தான். இவன் இவ்வாறு மூர்ச்சை யடையக்கண்டு வீரபுரந்தரனும் வீரவாகுதேவருமொழிந்த வீரரெழுவரும் தத்தம் வில்லைவளைத்துப் பலபாணங்களைத்தொடுத்து எதிர்த்தார்கள். அக்கினிமுகனும்அஞ்சாநெஞ்சு படைத்தவனாய்

அவர்கள் தோளிற்பட அநேகமாயிரம் பாணங்களை யேவினன். அந்தக் கண்ட வீரரெழுவரும் தத்தம்விற்களில் அநேகமாயிரம் பாணங்களைத் தொடுத்து நெற்றியிலும் மார்பிலும் தோளிலும் கைகளிலும்தைக்கும்படி யெய்ததன்றி அவனேறியிருந்த தேரையு மழித்தனர். அவ்வக்கினிமுகனோ வேறொரு தேரிலேறிக்கொண்டு வீரர்கள்மேல் பாணவருஷம்பொழிய; வீரர்களும் அவற்றையெல்லாம் நொறுங்க வழித்தனர். பின்பவன் சிவாத்திரத்தைத் தன் வில்லிற்றொடுத்து அவ்வெழுவர்மேலும் விடுத்தான். அவர்கள் இது ஆக்கிநேயாத்திர மென்றெண்ணி வருணாத்திரமேவினர். அது அக்கணையையும் உண்டுவிட்டு அவ்வெழுவரையுங் கொல்லவே, கடல்போல் நெருங்கியிருந்த பூதர்கள் இரியல்போயினர். இதைப்பார்த்துக் கொண்டிருந்த வீரவாகுதேவர் பூதர்களைக் கையமைத்து அஞ்சவேண்டாமென்று அவனுக்கெதிரில் தேரைச் செலுத்தினர். அவ்விருவரும் வெகுநேரம் போர்செய்தனர். அக்கினிமுகனே வீரவாகுதேவர் நெற்றிமேல் ஆயிரம் பாணங்களை யேவினன். பின்பு வீரவாகுதேவரோ தாமும் ஆயிரம் பாணங்களையேவி அக்கினிமுகன் தேரையும் கையிற்பிடித்திருந்த வில்லையு மழித்தனர். அவ்வக்கினிமுகனோ வேறொரு தேரிலேறிக்கொண்டு ஒருதண்டைக் கைக்கொண் டெறிந்தான். அதை ஒருபாணத்தால் நொறுங்கப் புடைத்தனர். அக்கினிமுகன் தன்கையில் வில்லைப்பிடித்து வாயுவாத்திரம் யமாத்திரம் சூரியாத்திரம் இவைகளை யேவினன். அதற்கு வீரவாகுதேவரும் அதையதை யேவித்தடுத்ததன்றிப் பின்னும் அவ்வக்கினிமுகன் மார்பில் நூறுகணைகளை யேவினர். அவைகள் பட்டவுடனே தான்மிகத் துன்பமடைந்து தனக்கு வழிபடுகடவுளாகிய தன்னகர்க்காளியை நினைந்து வருந்தினன். அவன் வருந்தக்கண்ட அக்காளி அவன் கட்புலன் முன்தோன்றி நானேபகைவனைக் கொல்லுகின்றேன். நீயஞ்சவேண்டாமென்று பூதர்கள்மேற்சென்றாள். அவளோசென்று பூதர்கள்மேற் சூலமொன்றை யேவினள். அது ஆலவிடம்போல் தோன்றவேவீரவாகுதேவர் கோபங்கொண்டு ஏழுபாணங்களால் அச்சூலப்படையைத் தகர்த்துவிட்டனர். பின்னுமொரு சூலப்படையை யேவினள். ஆயிரம் பாணங்களால் அதனையு மழித்தனர். பின்பு அக்காளியோ வீரவாகுதேவ ரேறிக்கொண்டிருந்ததேர்மேற்பாய்ந்தாள். அதைக்கண்டவீரவாகுதேவர் அக்காளியினுடைய எட்டுக்கைகளையும் தன்னொருகையா லொருசேரப் பிடித்துக்கொண்டு மற்றொருகையால் அவள் மார்பின்மேல் மோதினர். அதனால் அக்காளி திப்பிரமைகொண்டு உதிரங்கக்கி மூர்ச்சையாய்விழுந்து பின்பு எழுந்து வீரவாகுதேவரைத் துதித்துப் போயினள். அக்கினிமுகன் இதைக்கண்டெழுந்து வில்லொன்றைக் கையிலேந்தி நூறுகணைகளால் வீரவாகுதேவ ரேறியிருந்த தேரையழித்து வெற்றியுண்டாகத்தக்கதென்று சங்கத்தொனி செய்தான். வீரவாகுதேவரோ பல பாணங்களால்அவ்வக்கினிமுகன்வில்லையொடித்து அவன் தலையையு மறுத்துத் தள்ளினர். அப்பாணமோ வீரவாகுதேவர் கையில்வந்து சேர்ந்தது. அக்கினிமுகன் இறந்தமைகண்டுஅவனொடுவந்த அளவில்லாத அவுணப்படை மானமும் வீரமுமிகுந்து வீரவாகுதேவரை யெதிர்த்துப் பலவகை

யாயுதங்களாற் போர்செய்தனர். வீரவாகுதேவரோ அவர்கள்மேல் கோபங் கொண்டு விரைந்துபலகணைகளைத்தொடுத்தனர். அதனால் அவர்கள்படைகள் அழிந்துவிட்டன. அதன் பின்னரும் பூதர்களும்தம்பியருள்எழுவரையு நீங்க லாக மற்றதம்பியும் இலக்கத்தவரும் பூதவீரரும் வீரவாகுதேவரை நெருங் கினர். வீரவாகு தேவரோ தன்தம்பிய ரெழுவரையும் இறந்துபட்டதாக உக்கிரன் சொல்லக் கேள்விபட்டுத் தன்னிரண்டு கண்களுநீர்சொரிய நின்று அவர்களுடம்பைக்கண்டு புலம்பினர்.

இவ்வாறு துயரங்கொண்ட வீரவாகுதேவர் தன்தம்பிமாரை யெழுப்ப மனங்கொண்டு தன்முதுகிற் கட்டியிருக்கும் அம்பறாத்தூணியிலுள்ள ஒரு கணையை யெடுத்து அதன்முனையில் வீரத்துடன் தன் நகத்தால்வெற்றிவேற் பெருமா னிளையவன் விடுத்ததிது ; யமன் காணக்கடவது, நீயென் தம்பியர் உயிர்கொண்டாய் ; இது உனக்குத் தகுதியோ! நீ சீக்கிரமாய் அவர்களை யனு ப்பிவிடென்று கோபமாயெழுதி அக்கணையை வில்லிற்பூட்டிச் செல்ல விடுத் தனர். அக்கணை எழுகடலையுங் கடந்து யமன்முன்னேவிழுந்தது. அவனதை யெடுத்துவாசித்துப்பார்த்துமனத்தில்மிகுதியும்பயமடைந்துதன்னுலகெல்லா முழுதும் தேடிப்பார்த்தும் அங்கில்லாமையால்கயிலைமலையை யடைந்துபார்க் கையில் அங்கவ்வெழுவரும் வீற்றிருந்தனர். அவர்களோஅப்போரிலிறந்த பூதர் களுடன் வீற்றிருக்கக்கண்டு தொழுது நீங்கள் அப்போர்க்களத்தி ராமையை நோக்கி வீரவாகுதேவர் எழுதி யனுப்பினர். நீங்கள் விரைவாக வரவேண்டு மென்று சொல்ல, அவ்வீரர்கள்மிக்க சேனையுடன் போர்க்களங் குறுகித்தத் தம் உடலிற்புகுந்து வீரவாகுதேவரை வணங்கினர். அவர்அவர்களைவிருப்பத் துடன் வாகைமாலையணிந்தமதுமார்பிலிறுகத்தழுவிக்கொண்டுமனமகிழ்ச்சி யடைந்தனர். அப்போதுயமன் அவ்வீரவாகுதேவர்முன்னேவந்து அவரை வணங்கி என்மேல் தேவரீர் ஏன்கோபங் கொண்டீர் ; அவர்கள் கைலை வரையை யடைந்திருந்தனர். தேவரீர் எழுதியதைப்பார்த்தே நானோடிச் சென்றவர்களைக் கொணர்ந்தே னென்றனன். இதையெல்லாம் தூதர்களோ டிச்சென்று சூரபதுமனை வணங்கி அக்கினிமுக னிறந்துபட்டானென்று விண் ணப்பித்தனர். அவன் இறந்தமைகேட்டுப் புலம்புகையில் மூவாயிரவராகிய அச்சூரபதுமன் மக்கள் அவன் சமுகம்வந்தடைந்தனர்.

அக்கினிமுகன் வதைப்படலம்
முற்றிற்று.

## மூவாயிரவர்வதைப்படலம்.

அவரைக்கண்ட சூரபதுமன் வாய்விட்டுப் புலம்ப அவரும் மூவாயிரம் பேரும் 'கடந்துளோர்களும் விடுவரோ மக்கள் மேற்காதல்' என்றபடி வருந் திய தந்தையைத் தேற்றி நாங்களே போர்க்களத்திற்சென்று போர்செய்கின் றோமென்று விடைபெற்று குதிரைகள் வரிசையாகப் பூட்டப்பட்ட தேரிலே றிக்கொண்டு அளவிறந்த சேனைகள் சூழ வீரவாகுதேவரும் பூதப்படையும்

நெருங்கியிருக்கின்ற போர்க்களங் குறுகினர். அவுணர்களும்பூதர்களும் போர் செய்ய பலபடைகளையேவி நிற்க இருபடைகளிலும் பலர்மாண்டனர். மூவா யிரவரும் எதிர்ந்து சென்று பாணங்களையேவிப் பூதவீரர்களை யெதிர்ந்தனர். அவ்வாறெதிர்ந்து அப்பூதவீரருடையகணைகள்சரீரத்தில்அழுந்த அவர்கள்துன் பத்தொடு நின்றனர். இலக்கத்தவரில் ஆயிரவர்மாண்டனர். இவ்வாறுநிகழ்வது கண்டு வீரவாகுதேவரைப் பணிந்து விடைபெற்று விரைவிற்சென்று விசய னே யாதியான வீரர் பலர்நெருங்கி அம்மூவாயிரவரையும் எதிர்ந்து பாண மழைபொழிந்தனர். இவ்வாறு போர்செய்கையில் மூவாயிரவர் அவ்வாயிர வீரர்கள் ஏறியிருந்த தேரையழித்தனர். தேரழியவே வேறு சேமத்தேரி லேறிக்கொண்டு அம்மூவாயிரவர் விற்களையுந் துண்டித்தனர். அம்மூவாயிரவ ரும் கைகளில் வில்லில்லாமையால் மலைகளை வேருடன் பிடுங்கிக்கொண்டு அவ்வீரர் மேலெறிந்தனர். அவற்றையெல்லாம் தாங்கள் விடுங்கணைகளால் நொறுக்கிவிட்டு அவர்களுடம்பைப் பாணங்களால் சல்லடைக்கண்ணேபோல் தொளைத்துவிட்டனர். அவ்வாறு செய்யவே அம்மூவாயிரவரும் அவ்வீரர்க ளேறிக்கொண்டிருந்த தேர்களை யவருடனெடுத்துக்கடலில் விட்டெறிந்தனர். அவர்களோ அத்தேர்கள் கடலில்விழுவதன் முன்இலாகவமாகக்குதித்து அவ ருடன் போர்செய்யத் தொடங்கினர். இவ்வாறு போர்செய்யும்போது மூவா யிரவரிற் சிலர் அவர்கையிலிருந்தவிற்களை யொடித்தெறிந்தனர். வில்லொடி யவே வீரர்கள் அம்மூவாயிரவருள் சிலரை மார்பிலோங்கி யடித்ததன்றி மற் போர்செய்யவும் நேர்ந்தனர். இவ்வாறு மற்போர்செய்கையில்விசயனென்னும் வீரனொழிய மற்ற தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது வீரர்களும் அம்மூவாயிரவரால் வருந்தினர். அதைக்கண்ட விசயன் மனங்கொதித்து பலபாணங்களையேவி அம்மூவாயிரவரில் சிலரைக் கைகளையும் சிலரைக் கால் களையும் சிலரை மார்பையும் சிலரைத்தோளையும் சிலரைத் தலைகளையும் அறு த்துக் கொன்றான். இவ்வாறு விசயன்விடும் பாணங்களால்இறந்துபட்டவரும் கைகால்முதலியஉறுப்புக் குறைந்துவரும் மீண்டும் போர்செய்வதைக்கண்ட விசயன்மிக்கவும்அதிசயமடைந்து சண்முகங்கொண்ட பெருமானை யுள்ளத் தில் நினைந்து இதுஎன்ன கொள்ளையென்று தியானித்தான். அதற்கு முரு கப்பெருமானும் அசரீரியாய் வானின்கண் அப்பா அன்பனே! இவ்வாறுஇறந்து பட்டும் அவர்கள் மீண்டு மெழுந்து போர்செய்வது முன்னாளில் பிரமதேவன் ளித்தவரமேயாம். இவர்கள் கெட்டொழிய இவ்வயிரப்படையையே வென்ற ளித்துச்சென்றனன். இதனை உன்மத்தனாகிய அசுரேசன் ஆராய்ந்தறிந்துமா யாஸ்திரத்தையேவ அதைக்கண்டவிசயன் வயிரக்கணையை யேவினான். அது சென்று மாயாஸ்திரத்தையழித்துஅம்மூவாயிரவரையும் கொன்றது. அம்மூ வாயிரவரு மிறந்துபட்டதைத் தூதர்கள்கண்டு மதிமயங்கிச் சொல்லக்கண்டு சூரபதுமனும்கோவென்று அழுதுபுலம்பினான்.

மூவாயிரவர்வதைப்படலம்.

முற்றிற்று.

—

## தருமகோபன்வதைப்படலம்.

நான்காநாளிரவில் தருமகோபன் சூரபதுமனிடம்சென்றுசிலபுத்திகளைச் சொல்லி நான் இதோ சென்று பூதவீரருடன் வந்தகுமரனை வெற்றிகொண்டு வருகிறேனென்று விடைபெற்று புண்டரீகமென்னும்திசையானையின்பிடர்மே லேறிக்கொண்டு நாற்பெரும்படைசூழப் போர்க்களங்குறுகினான். அவன் குறு கவே பூதர்களும் அவுணர்களும் ஒருவருக்கொருவர் போர்செய்தனர். இவ் வாறு போர்செய்கையில் அவுணரில் மந்திரிமாரும் இலக்கத்தவரும் கைகலந் தனர். இருதிறப்படையிலும் சிலர்மாண்டனர். அவுணமந்திரிமாரில் இலக்கத் தவர் ஆற்றலிழந்தனர். இதையறிந்த வீரமார்த்தாண்டனென்பவன் சிறி துமாற்றாமல் மந்திரிமாரையெதிர்த்துக் கொன்று குவித்தான். அதைக்கண்டு போர்க்களத்து பூதர்க ளெதிர்த்துப் போர்செய்யமலைகளைப் பறித்தெயறி வே, அவுணர்கள் கண்டுதாமிரியல் போம்படிவருத்தினர்.

இவ்வாறு போர்செய்கையில் தருமகோபனென்பவன் ஏறியிருந்த புண் டரீகமென்னும் திசையானைபொருது சிலபூதர்களைக் கால்களாலும் சிலரைக் கோட்டாலும்சிலரைவாலாலும்சிலரைத்துதிக்கையாலும்கொன்றுகுவித்தது. இப்படி செய்யவே பூதர்கள்வெருக் கொண்டோடினர். இதைக்கண்டவீரமா ர்த்தாண்டன் விரைந்து அப்புண்டரீகமென்னும் யானையின்மேல் பலபா ணங்களையேவி அதனை மூர்ச்சையடைவித்தான். தருமகோபனோ அது பொருது அவ்வீர மார்த்தாண்டன் நெற்றியிலுருவிப்போம்படி நூறுபாண ங்களையேவினான். அது அவனெற்றியில் உதிரமெழும்படியே செய்கையில் தருமகோபன் அவன்மேற் கொடியவே லொன்றேவினான். அதைக்கண்ட வீரபுரந்தன் அவ்வேலைத்தடுத்து பின்னும்பலபாணங்களையவன்மேலேவினான். தருமகோபனோ அவைகளைத் தன்வில்லினின்றும் தொடுத்துவிடும் பாணங் களால் விலக்கி அவன்மே லொருகதையை யெறிந்தான். அதனால் வீரபுரந் தரன் மூர்ச்சையடைந்தான். இதைக்கேட்டறிந்த வீரவாகுதேவர் விரைந்தே யெதிரில்வரத் தருமகோபனோ அவ்வீரவாகுதேவர் மேல் பலபாணங்களையே வினான். அத்தனை கணைகளும் வீரவாகுதேவர் மேற்பட்டோடிய வீரவாகு தேவரும்தன்கையினின்றும்ஒருவேற்படையை அத்தருமகோபன்மேல் விடுத் தனர். அது அவன்மார்பிலுருவமூர்ச்சையடைந்து அப் புண்டரீகமென்னும்யா னைமேல்விழுந்துகிடந்தான். அவன் மூர்ச்சையடைந்திருந்தபோது அவனேறி யிருந்த யானைமனத்திற் கோபமூண்டு வீரவாகுதேவரேறியிருந்த தேரைத் தன்நாற்கோட்டாலு முயரவெடுத்து அத்தேரைச்செலுத்தும் பாகனையுமடித் தது. யானை இவ்வாறு செய்ய வீரவாகுதேவர் தாமும் வேறொரு தேரிலேறி அவ்யானையின் துதிக்கையைப் பிடித்துக்கொண்டு அதன் கன்னத்திலறைந்து அப்புறத்துலகிலெறியவே, அதுவானளவுஞ்சென்று நிலத்தில்வீழ்ந்துமூர்ச்சை யடைந்தது. முன்னே மூர்ச்சையடைந்திருந்ததருமகோபன் மூர்ச்சைதெளிந் தெழுந்து ஒருகதையை அவர்மேலெறிந்தான். அதை வீரவாகுதேவரும் வா ளினால் துண்டப்படுத்தினர், மீண்டும் வயிரப்படையொன்றேவினான். அதைத்

தமது கையாற்பிடித்துக்கொண்டு அதனையே தருமகோபன்மேலெறிந்தார். அதுதைத்த மாத்திரத்தில் அவன் பதைபதைத்து விழுந்தனன். அவ்வாறு விழுந்தவனை வீரவாகுதேவர் காலாலுதைத்து நிற்கத் தேவர்கள் அவர்மேற் பூமழைபொழிந்து வாழ்த்தினர். அத்தருமகோபனு முயிர்நீங்கினன். எஞ்சி நின்ற அவன்படையோ தலைவிரிகோலமா யோடிப்போயின, அவனேறியிரு ந்த யானைமூர்ச்சை தெளிந்தெழுந்திருந்து விடைபெற்று அவரைப் புகழ்ந்து தன்றிசைநாடிச் சென்றது. பூதர்களும் பெருமகிழ்ச்சியிற்றிளைத்தனர், தரும கோபனிறந்துபட்ட செய்கையைக்கேட்ட சூரபதுமன் துன்பக் கடலிலழுந் திச் சித்திரபாவை போல்அத்தகவசைவற்றிருந்தான்.

தருமகோபன்வதைப்படலம்.

முற்றிற்று.

## பானுகோபன் வதைப்படலம்.

சூரபதுமன் இவ்வாறு துயரங் கொண்டிருக்கையில் சூரியன் உதயமா னான். சூரபதுமன் வருந்துவதைக்கண்ட தூதர்களோடிச்சென்று வாயுவே கம் மனோவேகம் பின்னிடப் பானுகோபனை வணங்கி நின்று வீரமாமயை யாற் கட்டிக்கடலி லிட்டபின்பு நடந்த செய்திகளைச் சொல்லினர். பானு கோபனோ பெருந்துயரமடைந்து இனி நமதுவாழ் வழியுமென்று சொல்லிக் கொண்டெழுந்து தன் பிதாவினுடைய மாளிகையை யடைந்து அவனையெட் டுறுப்பு நிலமுறப்பணிந்து நாம் அழிவது திண்ணம், இனிமுருகனையும் வீர வாகுவையும் நாம் வெல்வதருமை, ஆகையால் நாம் தேவர்களைச் சிறையி னின்றும் விடுவிப்பதே நலமென்றான். அதைக்கேட்ட சூரபதுமனோ நீ நெஞ் சிற் பயங்கொண்டனை! நீ உன் மாளிகைக்குச்சென்று தூங்கிக்கொண்டிரு வென்ன, அதற்குப் பானுகோபனோ இவன் நாஞ்சொன்னதை மனத்திற் சிறி தேனுங்கொள்ளா திருக்கின்றானென்று நினைத்து நான்செய்த சிறுபிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று அவனிடத்தே விடைபெற்றுப் போர்க்கோ லங்கொண்டு தன்னை நால்வகைப்படையுஞ் சூழப் போர்க்களங் குறுகினான்.

இவ்வாறு பானுகோபன் போர்க்களங் குறுகவே பூதவீரரும் அவுணவீர ரும் பேராற்றல் கொண்டெதிர்த்துப் பலபடைகளையேவ, தூசிப்படையி னின்ற பூதவீரர் தோற்றோடினர், அப்போது பிற்படையினின்ற பூதவீரர் அவுணர்களிரியல் போம்படி போர்செய்தனர். அதைக்கண்ட பானுகோபன் தானும் பூதவீரர்கள்மேல் சுடுசரம் துரந்தான். அதனால் பூதவீரர்கள் வரு ந்துவதைக்கண்ட வீரவாகுதேவர் அவுணப்படை திசைதோறு நாடியோட் டெடுப்பப் பாணப்பிரயோகஞ் செய்தனர். பானுகோபனோ தன் தேரை வீரவாகுதேவர்க் கெதிரினிறுத்தி வில்லைவளைத்து மிகுதியுங் கூர்மையுள்ள ஆயிரம் பாணங்களை யேவினான். அவையனைத்தும் தமது மார்பிற்பட்டு முது கினுருவிப் போகக்கண்ட வீரவாகுதேவர் மிகுதியுங் கோபங்கொண்டு அவன்

தோள்மேல் நூறுபாணங்களை யேவினர். அவன் வருந்தித் தன்வில்லினின்றும் நூறுபாணங்களையேவி வீரவாகுதேவர் பிடித்திருந்த வில்லை யொடித்தான். தமது வில்லொழியவே வேலொன்றையெடுத்து அவனெற்றியிற் படும்படியேவினர். அதனால் நெற்றியி னின்றும் உதிரம்பெருகமூர்ச்சையாய்விழுந்தான். வீரவாகுதேவரோ வேறொரு வில்லையெடுத்து வளைத்து அருகேயிருந்த அவுணர்க ளஞ்சும்படி வாயுவாத்திரம், ஆக்கினேயாத்திர முதலிய தெய்வப்படைகளை விடுக்க அவனும் அந்தந்தப்பாணங்களையேவித் தடுத்தான். பானுகோபனே சூரியாத்திரம்பிரமாத்திரம் நாராயணாத்திரமுதலியவற்றைப்பின்னுமேவவீரவாகுதேவரும் அவைகளையேவிட் டவன்விட்டவைகளை மாற்றினர். பின்புபானுகோபன்மாயையால்தேருடன்மறைந்துநின்றுஊழிகாலத்திற் பெய்யும்மேகம்போற்பாணமழைபொழிந்தான். வீரவாகுதேவர்உடம்புமுழுதும்உதிரம்பெருகவே அவர்கோபமாய் ஞானாத்திரமேவினர்; அதனால்அம்மாயாத்திர நீங்கிப்போயிற்று. அவனே யாவருமிகழ ஆகாயத்தில் தெரிய நின்றான். அவனைக்கண்டு கோபங்கொண்டு நீயெங்கேயோடிப் போகின்றனை! நில் நில்லென்று தமதுதேரை ஆகாயத்திற்செலுத்தி அவன்மேற் பாணமழை பொழிந்தனர். பானுகோபனும் பின்வாங்காமற் பாணமழைபொழிய இருவருமிடைவிடாமற் போர் செய்தனர். இவ்விருவருமேறிய தேர்கள் ஒன்றோடொன்று நெருங்கிப்போம்; எண்டிசையிலும் ஆகாயத்திலு முட்டிநிற்கும், இவ்வாறு போர்செய்கையில் ஒருவரோடொருவர் இகழ்வர், தாம்செய்யும்போரைப்புகழ்வர். பாணமழை பொழிந்து தமது வெற்றிச்சங்க முழக்குவர், சபதஞ்செய்வர், இடசாரி வலசாரிவருவர், இவர்கள் விடும்பாணங்கள் மலைமேலோடும். மேகமண்டலந் தாவும், கடலிலோடும், எண்டிசையிற் செல்லும், பாதாளத்திற் செல்லும். இவ்வாறு போர்செய்கையில் பானுகோபன் இலட்சம் பாணங்களையேவி வீரவாகுதேவ ரேறியிருந்த தேரையழித்தான். வீரவாகுதேவரும் அப்போதே அப்பானுகோபனேறிய தேரை யழித்தனர். இவ்வாறே இருவரும் விற்போர்செய்து அதன்மேல் வாள்கொண்டு போர்செய்தனர். பானுகோபனே தன்னை வெட்டவரும் வீரவாகுதேவர்வாட்படையை விலக்கி அவன் தோளைவெட்டத் துணிகையில் வீரவாகுதேவர் விரைந்து அவனது வலத்தோளை வெட்டித்தள்ளினர். பானுகோபன் தன்வலத்தோள் வெட்டுண்டுபோகவே இடத்தோளால் வாள்கொண்டு போர்செய்தான். வீரவாகுதேவரோ இனி இவனை வைக்கலாகாதென்று தேவர்கள் துதிசெய்து கூத்தாட அவன் தலையை வெட்டித் தள்ளினர். இவ்வாறு பானுகோபன் இறந்ததுகண்டு தேவர்களெல்லாரும் ஆனந்தக் கூத்தாடினர். வீரவாகுதேவரோ தாஞ்செய்துகொண்ட சபத முடித்துக் கொண்டதனால் மனமகிழ்ச்சி யெய்தினர். பின்பு வீரவாகுதேவர் பானுகோபன் இறந்துபட்டமையால் தம்மை இலக்கத்தெண்மரும் பூதவீரரும் சூழ்ந்துவரச் சண்முகப்பெருமான் சந்நிதானத்தை யடைந்து வணங்கி நின்றனர். சண்முகப்பெருமானே வீரவாகுதேவனை நோக்கி நீமிக வருத்தப்பட்டுப் பானுகோபனை வெற்றி கொண்டனை போலும்! என்றுகேட்க, அதற்கு வீரவாகுதேவரும் யான் தேவர்கள் பதத்

தையும் பிரமபதத்தையும் விண்டு பதத்தையும் வேண்டேன் ; உனதுதாமரை மலர்போன்ற சேவடியினிடத்துப் பேரன்பே வேண்டுகிறேனென்று விண்ணப்பிக்கவே. முருகப் பெருமானே அவ்வாறே யாகுகவென்று விடைதரப்பெற்றுத் தம்மிருக்கையிற் சென்றார். இலக்கத்தெண்மரும் பூதவீரரும் தத்தமிருக்கை சென்றடைந்தனர். இதுகிடக்க ;

பானுகோபன் இறந்துபட்டதைத் தூதர்கள்கண்டு சூரபதுமனிடஞ் சென்று நடந்த செய்தியை யறிவித்தனர். அதைக்கேட்ட சூரபதுமன்சிங்காசனத்திலிருந்து பலவாறு புலம்பியழும்போது தூதர்கள் போர்க்களத்திற் சின்னபின்னமாக வதைக்கப்பட்ட பானுகோபன் உடம்பைக்கொண்டுவரக்கண்டு மிகவும் வருந்தித் தலையையும் கைகளையும்மார்பையும் பொருத்திப்பார்ப்பான், புரள்வான், சோர்ந்து விழுவான், வாயிலடித்துக்கொள்வான், அற்றைத்தினத்திற் சூரபதுமன்கொண்ட துன்பத்திற் கெல்லையென்பதே கிடையாது, இச்செய்தியைக்கேட்ட பதுமகோமளையென்னும்தாய்உறுப்புகள்வெவ்வேறாகத்தன் மகன்இறந்துவிழுந்துகிடக்கிற இடஞ்சென்றுகுறைவிலாத்துயரத்துடன் அழுது புலம்பினள். அந்நகரமாந்தரு மிக்கதுன்ப மடைந்தனர். இதுகிடக்க;

பானுகோபன் வதைப்படலம்
முற்றிற்று.

---

## சிங்கமுகன்வதைப்படலம்.

இவ்வாறுவருத்தமடைந்துபின்புதன்னருகிருந்தசிலரைநோக்கிமதுபகைவரைமுற்றுங்கொன்றுயாகஞ்செய்து என் மகனையெழுப்பிக்கொள்வேன்; இவ்வுடம்பை யோரிடத்திற்சேமித்து வைக்கவேண்டுமென்றான். அவ்வாறே செய்துமென்றுஅவர்கள் சொல்லினர். சூரபதுமனே தூதுவரைப்பார்த்து ஆயிரஞ் சிங்கமுகங்கொண்டஎன்தம்பியாகியசிங்க முகாசுரனையழைத்துவம்மினென்றனன். அவன் கட்டளையேற்ற தூதர்வாயுவேகம் மனோவேகம் பின்னிடச் சென்று கடலினடுவில் மாயாபுரத்துள்ள அவனரண்மனையையடைந்து சிங்கமுகாசுரனைக் கண்டு இதுவரையிலுநடந்த சங்கதிகளைச் செவ்வையாக வெடுத்துச்சொல்லி உம்மைச் சூரபதுமன் அழைத்துவரக் கட்டளையிட்டானென்றனர். இவ்வாறு தூதர்சொல்லவே சிங்கமுகாசுரனெழுந்திருந்து தன் சேனையுடன் மகேந்திர நகரத்திற்சேர்ந்து தேவகண்டகனாகிய சூரபதுமனுடைய பாதங்களில்வணங்கி நீயென்னையழைத்த காரணமென்னவென்றான். சூரபதுமனே நடந்தவற்றை யெல்லாமெடுத்துச் சொல்லி முருகனே நம்மைக்கொலை செய்ய வேண்டுமென்றே வந்திருக்கின்றனன். ஆதலால் நீ விரைந்துசென்று பொருதுவென்று வாவென்று விடைகொடுப்ப விடைபெற்றுக்கொண்டு தன் மாளிகையையடைந்து ஊனையருந்தித் தேரிலேறிக்கொண்டு இலட்சம்வெள்ளம்படைசூழநடந்தான். அவன் வருகையைக்கண்டு தேவர்கள்பயந்தோடிச் சண்முகங்கொண்ட தாணுவைவணங்கி நின்று சூரபதுமனுக் கிளையவனாகிய

சிங்கமுகாசுரன் வருகிறான்; அவன் சூரனிலு மிக்க வலிபெற்றவன், அவனே போர்க்களங் குறுகினனென்று விண்ணப்பித்தனர். சுப்பிரமணியப் பெருமானேதான் போர்க்கெழ நினைத்தலும் அதையறிந்தவீரவாகுதேவர் அப்பெருமானையெட்டுறுப்பு நிலமுறப்பணிந்து நின்று வாய்பொத்திக் கைகட்டிக்கொண்டு அச்சிங்கமுகனை நானே கொன்றுவருகின்றேனென்று விண்ணப்பிக்க, அவர் அவ்வாறேசெல்லக் கட்டளையிட்டனர். அதனையேற்றுத் தம்மை நாற்படை நெருங்கிச்சூழப் போர்க்களஞ்சென்று குறுகினர். குறுகவே இருதிறப்படையும் போர்செய்யத் தொடங்கின, ஒருவரோடொருவர் பலவகைப் படைகளையுங்கொண்டு போர்செய்ய அவுணரிலுஞ் சிலர்மாண்டனர், பூதரிலுஞ் சிலர் மாண்டனர், சிலர் தோற்றோடினர், அப்பூதருள் சிங்கமுகனென்பவன் தன் கையிலுள்ளதண்டாயுதங்கொண்டு அவுணர்களை மிகவருத்துகையில் அவுணரில்தசமுகனென்பவன்மேல்தன்வில்லைவளைத்துச்சிங்கனென்பவன் அநேகம்பாணங்களைப்பொழிய அவற்றையெல்லாந்தன்கைத்தண்டினால்தடுத்தான், தானும் பெரியகதையொன்றை விட்டெறிந்தான். அது சிங்கன்மார்பிற்பட்டுமுறிந்தது. அதுகண்டு மழுவொன்றைவீசினான். அதைத் தன்கையாலொடித்தான். ஒடிக்கவே வேலைவிட்டெறிந்தான். அதிற்கெதிராகச் சக்கரமெறிந்தான். அது வேலையழித்துவிட்டது; மேலும் கதையொன்றைச்சிங்கன்மேல்தசமுகன்விட்டெறிந்தான். அது அவன் மார்பிற்பட்டவுடனே இறந்துபட்டான். இவ்வாறு தசமுகன் இறந்துபடவே அவுணர்கள் எல்லாரும் போர்செய்தனர், இவ்வாறு அவுணர்களெதிர்ந்தபோது அவருள் துன்முகன் பல்லுருக்கொண்டு கொடும் போர்புரிந்தான். துன்முகன் இவ்வண்ணமாய்ப் போர்செய்கையில் வீரமார்த்தாண்டன் ஞானத்திரமேவி அவன்மாயத்தைவெளியாக்கி மேலும் ஆயிரம்பாணங்களையேவி வருத்தமூர்ச்சையடைந்து தெளிந்து பூதவீரர் மனமகிழ அருவமாகத் தோற்றோடிப்போனான்.

அவன் தோற்றோடிப் போகக்கண்ட சிங்கமுகாசுரன் பூதர்கள் முன்னே தேரை நடத்தி வருத்தினான். பூதர்கள் மரங்களையும் மலைகளையும் இராசியிராசியாகப் பிடுங்கியெறிந் தெதிர்த்தனர். அவையனைத்தும் அச்சிங்கமுகாசுரன் மூக்கினின்றெழும் மூச்சினாலழிந்துபோயின. அதனால் பூதர்கள் மிக்க கோபங்கொண்டு பின்னு மரமலைகளை விட்டெறிந்தனர். அவைபட்டும் சிறிது மூறில்லாதவனாய் அச்சேனையி னடுவேபுகுந்து தன்கையாற் பிசைந்து கொன்றான். சிலரை யண்டமுகட்டி லடித்தான். சிலரைப்பற்களிற் குத்தினான். சிலரைக் காலைப்பிடித்துச் சுழற்றியெறிந்தான். சிலரைக் காலான் மிதித்தான். சிலரைச் சத்தியலோகத்தில் விட்டெறிவான். சிலரைக் கூற்றுவனுலகமடைய வீசுவான். இவ்வாறு பல பூதர்களிறக்கவே, சிங்கமுகாசுரன் தன் தேர்மேலேறினான். அதைக்கண்ட பூதவீரர்களில் அக்கினிக்கண்ணன் சிங்கமுகாசுர னெதிரேசென்று அவன்மே லொருதண்டை வீசியெறிந்தான். அது அவன் தேரிலிருந்த சாரதியைக் கொன்றது. சிங்கமுகாசுரன் மிகக்கோபித்து அவன்மேல் ஒருதண்டினை வீசினான், அதனால் அக்கினிக்கண்ணன் மூர்ச்சை யடைந்தான். பின்பு சிங்கமுகாசுரன் தன்

தேர்மேல் வேறொரு சாரதியை யேற்றிக்கொண்டு போரிலெதிர்ந்தான், சுமாலியென்னும் பூதவீரன் அச்சிங்கமுகாசுரனோடெதிர்த்தான். சிங்கமுகாசுரனோ அச்சுமாலியை வருத்தவிழுந்தான். பின்பு தண்டியென்னும் பூதவீரன் சிங்கமுகாசுரன்மேற் பாய்ந்து அவன்மார்பிற் கதைகொண்டு தாக்கியபோது அக்கதாயுத மொடிந்து போய்விட்டது. சிங்கமுகாசுரனோ அத்தண்டியைத்தன்காலாலுதைத்துத்தள்ளினான். அவனோதாவிக்கோபமாய்ச்சிங்கமுகாசுரன் தோண்மேற்பாய்ந்து தன்காலாலவனை வன்மையாகமிதித்துழக்கினான். இவ்வாறு செய்கையில் சிங்கமுகாசுரனோ தனக்கவன் செய்வது ஈமொய்ப்பது போலிருந்தமையால் அவனைத் தன்கையாற் சொறிந்து துடைத்தான். அவ்வளவே அவன் வருத்தமடைந் தோடிப்போனான். பின்பு இலக்கத்தவருடன் வீரவாகுதேவரொழிந்த வீரரெண்மரும் அளவில்லாத பாணங்களையேவினர். சிங்கமுகாசுரனோ தேரைவிட்டிழிந்து சிலரைத்தேருட னெடுத்தெறிந்தான். சிலதேரை மற்றொருதேருடன் மோதினான். சிலதேரைத் தன்கையாலெடுத்து முறித்தான். சிலதேரை யுதைத்தழித்தான். இவ்வாறு செய்யவே வீரர்களெல்லா மிரியல்போயினர். இலக்கத்தெண்மரும் பூதவீரர்களும் தோற்று ஓடிப்போனமைகண்ட வீரவாகுதேவரும் மனத்திற் கோபமிகுந்துதமதுகையிலுள்ளவில்லைவளைத்துநாணேற்றிட்டொருகணத்தில்பாணமழைபொழிந்து அவுணருயிரையுண்டான். அவுணர்களுடைய கைகளையும்கால்களையும் மார்புகளையும்தோள்களையும் அவர்கள்பெற்ற வரங்களையும் வீரவாகுதேவர்விட்ட அம்புகள் சென்றுசிதைத்தன. வீரவாகுதேவர் விடும் கணைகளால்அவுணர்சேனைகள் படாதபாடுபடக்கண்ட சிங்கமுகாசுரன் மக்கள் பார்த்து தங்கள் கையிலிருந்த வில்லையெடுத்து வளைத்து நூறுபாணங்களைத் தொடுத்து வீரவாகுதேவரை வருத்தினர். வீரவாகுதேவரோ அத்தனை பாணங்களையேவிடுத்துத் தடுத்துவிட்டுப் பின்னும் கொடிய பாணங்களைவிடுத்து அவர்களேறியிருந்த தேர்களை யழித்தனர். அவர்களோ தேரிழந்தும் வாட்போர்செய்ய வழைத்தனர். வீரவாகுதேவரோ அவருடன் வாட்போர் செய்யத்துணிந்து தேரைவிட்டிழிந்து அவர்களெதிரே சென்றார். வீரவாகுதேவரும் அவர்களுடன் வாட்போர்செய்து வரும்போது சிறிது மூறில்லாதவரா யிருக்கக்கண்டு நூறுபேரும் ஒன்றாகச்சேர்ந்தவரைப்பிடிக்கத்தொடங்கினர். தொடங்கவே அவர்களொருங்கழிய வாள் வீசிக்கொன்றனர். தம்மொடுபோர்செய்த அந்நூற்றுவரையுங்கொன்றுகுவித்த அவ்வீரவாகுதேவர்தம்மைத் தேவர்களெல்லாம் வாழ்த்தெடுப்பத்தேரிலேறிக்கொண்டார். சிங்கமுகாசுரன்தன்மக்களிறந்தமைகண்டு சாலமனம்வருந்தி வீரவாகுதேவரைநோக்கி நீமுருகனுமல்லை, இலக்கத்தவரிலொருவனோ! எட்டுவீரரி லொருவனோ! அல்லது எங்கள் நகரத்திற்குத் தூதாகவந்தவனோ! நீயாவனோவென்று வினாவினான். இவ்வாறு கேட்கவே அவனோடு வீரவாகுதேவர் சொல்வாராயினர்.

நான்இன்னானென்று சொல்கின்றேன்கேள்! யானோஎப்பொருட்குமிறைவனாகிய பரமசிவனுதவிய பாலசுப்பிரமணியனுக் கடித்தொண்டன். முன்னாவில் உங்களூரில் தூதனாகவந்தே உங்களூரை யழித்தேன். நீதிவழி யொழு

காத உங்களைமுடிக்கவே வந்திருக்கிறேன். என்பெயரோ வீரவாகுவென்ப ரென்றான். வீரவாகுதேவர் இவ்வாறு சொல்லியபோது சிங்கமுகாசுரன் அவரை நோக்கி உன்னையும் உனக்கிறைவனாகிய முருகனையும் இமையோரை யில்வென்று விடுகிறேன்; பாரென்று சிங்கமுகாசுரன் சொல்லி முடித்தான். அதைக்கேட்டவீரவாகுதேவர் சிங்கமுகாசுரன்மேல்பதினெட்டுப்பாணங்களை யேவினர். அச்சிங்கமுகாசுரனே வீரவாகுதேவர்மேல் ஒருதண்டையெடுத்து விடுத்தான். அதை நாலுபாணங்களை விட்டுத்தடுத்தார். அதன்பின்பு ஆயிரம் பாணங்களையேவிச் சிங்கமுகாசுரன் தலைதோறும்பட விடுத்தார். அவைகள் பட்டு முறிந்துபோயின. அப்போது சிங்கமுகாசுரன் சூலப்படையை யேவி னான். அதைத்தடுக்க வீரவாகுதேவர் இரண்டாயிரம் பாணங்களையேவ அவ ற்றையெல்லாம் கிரகித்துவருவது கண்டு வாளாயுதத்தால் அச்சூலாயுதத்தை யழித்தனர். அச்சூலத்தை யழித்தபின் சிவாத்திரத்தையேவினர், அவனும் சிவாத்திரத்தைவிடுத்தான், அவை இரண்டும் ஒன்றோடொன்று போர்செய்து தம்மைவிட்டவரிடமே மீண்டன, வீரவாகுதேவரும் மனத்தின் கண்ணே மகிழ்ச்சியடைந்து பதினான்குபாணம்விட அவை சிங்கமுகாசுரன் தேரைநட த்துகிற சாரதித்தலையைக்கொண்டோடின. பின்னும்சிங்கமுகாசுரன் ஒருதண் டினைவிட்டெறிந்தான். அதுவீரவாகுதேவர் மார்பிற்பட்டுப்பொடிப்பொடியா கவே வீரவாகுதேவர் சூறாவளிபோன்ற ஆயிரம் பாணங்களையேவி அச்சிங்க முகாசுரனேறியிருந்த தேரைச் சிதைத்தனர். அப்போது பூதவீரர் வளைந்து கொண்டனர். சிங்கமுகனே மிக்ககோபமாய் வேறொரு தேரிலேறித் தன் னுயிரங்கைகளாலும் ஆயிரம் விற்களைவளைத்து பூதவீரர்மேல் சரமாரிபொழிந் தான். வீரவாகுதேவரும் பின்வாங்காமல் அவன்விட்ட பாணங்களைத்தடுத் தார். சிங்கமுகனே இரண்டாயிரம் பாணங்களையேவி வீரவாகுதேவர் கை யிற்பிடித்திருந்த வில்லைத்துண்டித்து அவர் அங்கே வில்லொன்று வேறெடுப்ப தன்முன் நூறுகோடி பாணங்களையேவி மார்பிலழுத்தவே உதிரம் பெ ருக்கெடுத்துக்கொண்டது. வீரவாகுதேவர் வெகுண்டு ஆயிரம் பாணங் களைக்கொண்டு சிங்கமுகன் தேரையழித்தார். அவனே வேறு தேரிலேறி னான். வீரவாகுதேவர்எண்ணிறந்தபாணங்களையேவிஅவன்பிடித்திருந்தவில்லை த்தகர்த்தனர். அப்போது மும்மையுலகமுமனமகிழ்ந்தன. வீரவாகுதேவர் தன்கைகளிற்பிடித்த விற்களையழிக்கவே சிங்கமுகன் மிக்ககோபங்கொண்டு மாயாபாசமெடுத்தெறிந்தான். அது பூதவீரரையும் இலக்கத்தவரையும் வீர வாகுதேவரை யுள்ளிட்ட நவவீரரையும் பிணித்து எழுகடற்கப்புறத்தே யிட் டது. வானிலிருந்ததேவர்கள் இதையறிந்து சுப்பிரமணியப்பெருமானிடத்தி லறிவித்தனர். அப்பெருமானே இதைத் திருச்செவி சாத்தியருளிச் சிங்கா சனம்விட்டிழிந்து தேரிலேறி யாயிரவெள்ளம் பூதர்கள்தன்னைச்சூழத்தேவர்க ளாரவாரிக்க சிங்கமுகாசுரனெதிரே தோன்றினன். அவுணர்களும் பூதர்களும் கைகலந்தனர். இருதிறப் படைகளிலும் சிலரிறந்தனர். சிங்கமுகனேவானளா வியதோர் வடிவங்கொண்டு தன்னிரண்டாயிரங் கைகளையும் உயரவெழு ப்பி அப்பூதவீரரனைவரையும் வாயிற் பெய்தனன். முருகப்பெருமானே தன்

னங் தனியே நின்றனன். இதைத்தூதர்கள் சென்றறிவிக்கவே சூரபது மன் மனமகிழ்ச்சிகொண்டு கோபுரத்தினுச்சியிலேறித் தன் தம்பிசெய்யும் போர்த்திறத்தைக் கண்களாரப்பார்த்துக் கொண்டிருந்த தன்பின் பல அவு ணப் படைகளையும் துணையாயனுப்பினன். அச்சேனைகளும் போர்க்களமே வந்துசேர்ந்தன, சிங்கமுகனே சண்முகப்பெருமான் எதிரேவந்து நின்றபோது அவனுடன் வந்த அவுணர்வெள்ளம் அப்பெருமான்மேல் தத்தம்படைகளை விட்டெறிந்தனர். பிள்ளையாரோ தமது கையிற்பிடித்திருந்த வில்லைக்குணத் தொனிசெய்தனர். அவுணர்வெள்ளம் பல இறந்தன, சிங்கமுகனே பிள்ளையா ரைக் கிட்டிவந்து எங்களுக்கும் தேவர்கட்கும் தீராப்பகையுண்டு ஆகையால் நாங்கள் தேவர்களுக்குத் துன்பஞ்செய்வதியற்கை. நீயோ அவரிலொருவ னல்லை, எமக்குப் பகைவனுமல்லை, நீ போர்க்கெழுந்தருளிய காரணமென்ன வென்று விண்ணப்பிக்க, அதற்குப் பிள்ளையாரோ 'அகதிக்குத் தெய்வமே துணை' என்றபடிவலியார் மெலியாரைவருத்துவராயின் அவரைக்கோறலே யெமதுதொழில், இதுதா னீதியினியற்கை, அது பற்றியேயாம்போர்செய்யவந் தோம். எளியாரைக்காப்பதே எமதுவிரதமென்று சொல்லிமுடித்தனர். சிங்க முகனே நீயோபோராற்றலையுடையை, அவுணரினமோ வலிமையில்லாதவர். நீ போர்செய்யலாம், சும்மாவிருப்பதென்னே வென்று சிங்கமுகன்சொல்ல, பிள்ளையாரோ அவன் மார்பிற்பட்டுருவ ஒரு நாராசக்கணையை யேவினர். அது அவன்மார்பிற்றைத்துருவவே உதிரம்பெருக்கெடுத்துக்கொண்டது. அக் கணைதொளைத்தவழியே அவன்வயிற்றிற்பெய்த பூதர்களெல்லாம்அவ்வழியே மெல்லென இழிந்தனர். அதைச் சிங்கமுகன் கண்டு வெகுண்டு தன்கையால் அவ்வெளியை யடைத்துக்கொண்டு பிள்ளையார்மேற் கதைகொண்டெறிந் தான். பிள்ளையாரோ நாலுபாணங்களையேவி அவன்விட்டெறிந்த கதையைப் பொடிப்பொடியாக்கி விட்டதன்றி அவ்ன் கையாலடைத்த வெளியையடைக் காவண்ணம் அக்கையை நெகிழ்த்திவிட்டன, பூதவீரர்கள் யாவரும் தடை யின்றிப்பூமியிலிழிந்தனர். பூதர்கள்வந்துசேரவேஒருபாணத்தையேவிஎழுகடற் கப்பால் இலக்கத்தொன்பதின்மரையும் பூதரையும்பிணித்துக்கொண்டு இட்ட மாயாபாசத்தைச் சிதைத்தனர், அவர்களும் பிள்ளையாரிடத்தேவந்து சேர்ந் தனர். பிள்ளையாரும் மனமகிழ்ச்சியோடு கருணைசெய்தருளினர். நெற்றியிற் பட்ட நான்குபாணங்களால் அச்சிங்கமுகனே மூர்ச்சையடைந்திருந்தான். பூதவீரர்களெல்லாம் வந்ததையறிந்த அவுணர்கள் பிள்ளையாரை வளைந்து கொண்டனர். அவரோ தமது கையிற்பிடித்திருந்த வில்லினின்றும் பல கணைகளைத்தொடுத்து அவுணர்க ளிறக்கச்செய்தனர். இதற்குள் மூர்ச்சை தெளிந்த சிங்கமுகன் தன்னுபிரங்கைகளாலும் வில்லைப்பிடித்து அவர்விட்ட பாணங்களைச் சிதைத்து அவர் தேரிலுள்ள சாரதியின்மேலும் ஆயிரம் பாண ங்களையேவினன். அதனல் தேர்ப்பாகனு மயர்ந்தான். அதுகண்ட பிள்ளை யாரும் நூறுபாணங்களையேவி அச்சிங்கமுக னேறியிருந்த தேரைச்சிதைத்து விட்டனர், அவனே நிலத்தினின்றுகொண்டே அளவிறந்த பாணங்களையேவி னன். பிள்ளையார் ஆயிரம் பாணங்களையேவி அவன் கையிற்பிடித்திருந்த விற்

களைச் சிதைத்தனர். அவன் ஒரு சூலப்படைவிட்டெறிந்தான். பிள்ளையா ரும் பதினூன்குபாணங்களையேவி அச்சூலப்படையையழித்த‌தன்றிப் பின்னு மாயிரம்பாணங்களையேவ அவனொரு தண்டினையெடுத்து தன்மேல் விட்ட அம்புகளைச்சிதறும்படி செய்தான். அதைக்கண்ட பிள்ளையாரும் தண்டே ந்தியகையையறுத்துத்தள்ளினர். அறுத்தகை மீளவுமுளைக்கக்கண்ட சிங்கமு கன் பூமியிலெறிந்த தண்டினைக்கொண்டோடிவந்தான். பிள்ளையாரும் அவன் விட்ட தண்டினை ஆயிரம் கணைகளால் துண்டமாக்கினர். அதைக் கண்ட பாவியாகிய சிங்கமுகன் பிள்ளையாரைப் பிடிக்க வேண்டுமென்று வன்மையோடுவந்தான், பிள்ளையாரோ அவன் அவ்வாறு வருவதைக்கண்டு அவனது தலை கைகள் அறுந்துவிழ மூவாயிரங்கணைகளையேவினர். பின்னு மவை முன்போலவே முளைந்தன. அதன்மேல் சிங்கமுகன் கோபங்கொண்டு பல மலைகளை வேருடன் பிடுங்கியெறிந்தான். அவைகள் பொடிப் பொடி யாம்படி பலகணைகளைத் தூண்டி அழித்துவிட்டு அவன் தலைகளழியும் படி பலகணைகளையேவினர். அவைகள் மீளவும் முளைத்துவிட்டன. இவ் வாறு தலைகளையும் கைகளையுங் கொய்துவர முளைந்து வரக்கண்டு பிள்ளை யார் உங்காரஞ்செய்தனர், இரண்டுகையும் ஒருதலையுமாக அவைமுளைப்பதொ ழிந்து சிங்கமுகன் பிள்ளையார் திருமுன் தோன்றி நின்றுதனக்கு ஒப்பாவா ரெவரோயென்று ஒரு மலையைவிட்டெறிந்தான். பிள்ளையாரும் ஒரு கணையை யேவி அம்மலையையழித்துவிட்டனர், அவன்பின்னே ஒருதண்டினை விட்டெ றிந்தான். அதைக்கண்ட பிள்ளையாரும் இவ்வஞ்சகனை யுயிருண்டு வாவென்று தன்கையிலிருந்த வயிரப்படையையேவ அது அத்தண்டினை யழித்துவிட்டுச் சிங்கமுகன் மார்பிலுஞ் சென்றுதைத்தது. அது மார்பிற்றைத்து ஊடுருவ வே மிக்கதுயரத்தோடும் சிங்கமுகாசுரன் இறந்துபட்டான். வயிரப்படையோ சென்று ஆகாயகங்கையில் நீராடி யொருகணத்தில் நமது குகப்பெருமானது கையில்வந்து சேர்ந்தது. தேவர்களோ பூமழை பொழிந்து ஆடிப்பாடிமகிழ்ந் தனர். முருகப்பெருமானே நவவீரரும் பூதர் கூட்டமும் அயலிலே வரச் சென்று பாசறையிற் சேர்ந்தனர். இதைக்கண்ட தூதர்சென்று சூரபதுமன் சமுகத்திற்சென்று சிங்கமுகாசுரன் மடிந்ததைத் தெரிவித்தனர். சூரபதும னே மலைபோன்ற மாளிகையிலிருந்து துன்பக்கடலிலாழ்ந்து மிகவுந்தளர்ந்து தன்னந்தனியே புலம்பியழுதான். இதுநிடக்க;

சிங்கமுகன் வதைப்படலம்
முற்றிற்று.

---

## சூரபதுமன் வதைப்படலம்.

---

சூரபதுமன் தான்கொண்ட துயரமொருவாறு நீங்கி யாயிரங்கோடி தூதர் களையனுப்பி அங்கங் கிருக்குஞ் சேனைகளை யழைத்துவரக் கட்டளையிட் டனுப்பினன். தூதர்களும் விரைந்துசென்று அண்டங்களிற்சென்று சொல்ல

வும் மிக்கபோர்ற்றலுடைய அவுணவெள்ளங்கள் அண்டத்தின்வழியேவந்தன. அண்டங்களிலிருந்து பரந்துவரும் சூரிப்படை சத்தியலோகத்திலும் வைகுந்தத்திலும் பூவுலகத்திலு நிறைந்தன. பெரியதிசைகளிலும் நிறைந்தன. கடலிலு நிறைந்தன. இமையோரையி லெங்குநிறையவே தூதர்கள் சேனைகள் வந்தமையைச் சூரபதுமனுக் கறிவித்தனர். சூரபதுமன்மகிழ்ச்சிகொண்டு எழுபதினுயிரம் சிங்கங்களும் எழுபதினுயிரம் குதிரைகளும் எழுபதினுயிரம் பூதங்களும் பூண்ட தேர்மேலேறிக்கொண்டு தன்னை நாற்படைகளுஞ் சூழ்ந்து வரப் போர்க்களங் குறுகினுன். பிரமனும் கள்ளமாமாயப்பிரானும் சண்முகப்பெருமான் சந்நிதானத்தையடைந்து இப்போதோ சூரபதுமன் போர்க்களங் குறுகிப் போர்செய்ய வந்திருக்கின்றுனென விண்ணப்பஞ்செய்தனர். பிள்ளையாரோ நவவீரரும் இலக்கத்தவரும் பூதவீரரும் தம்மைச் சூழ்ந்துவர வெழுந்தருளினுர். பூதவீரர்களும் அவுணவீரரும் ஒருவரோடொருவர் போர்புரிந்தனர். பூதர்களில் பலபேர் மாண்டனர். அதைக்கண்டு இலக்கத்தெண்மரும் போர்செய்து தோற்ருேடினர். வீரவாகுதேவரும் அவுணர்களை யெதிர்த்துப் போர்புரிந்து பலரைக் கொன்றனர். அவுணப்படைகளைக்கொன்றும் அவுணப்படை மாயாமையை முருகப்பெருமானிடத்தே வீரவாகுதேவர் விண்ணப்பஞ் செய்தனர். இளைய பிள்ளையாரோ தமது வில்லைவளைத்து அளவில்லாத பாணங்களைத்தொடுத்து நிலத்திலும் விண்ணிலும் நிறைந்திருக்கும் அவுணப்படையைப் பிணமாம்படிசெய்தருளினுன். அச்செயலைக்கண்டு அண்டகடாகத்தினப் புறமிருந்த அவுணப்படை மிகுதியாக நெருங்கி முன்போல முருகப்பெருமானைச் சூழ்ந்து கொண்டனர். எம்பெருமானே தன்றேரை நடத்தும் பாகனுகிய வாயுபகவானை நோக்கி நமது தேரினை இவ்வவுணப்படை நடுவே நடத்தவேண்டுமென்று கட்டளையிட்டனன். அவனே அப்படியே செய்கின்றேனென்று வானின்மேலும் நிலத்தின்மேலுங்கடன்மேலுந்தேரைச்செலுத்தினுன். அவ்வாறு செலுத்துகையில் பிள்ளையாரோ மழைமுகில்போலப் பாணமழைபொழிந்து இரக்கமென்பது சிறிதேனுமில்லாத அவுணப்படைமுழுதும் இறந்துபட்டுப் பிணக்குவியலும் உதிரவாறும் பெருகப் போர்செய்தனர். எழுகடன்மேலும் விண்ணின்மேலும் நிலத்தின்மேலும் அவுணப்படையோ பிணமாகக்கிடக்க அவர்களுடம்பி னின்றுதிர வெள்ளம்பொழிந்து எழுநிலத்திலும் பூவுலகத்திலும் எண்டிசையிலும் ஆகாயத்திலும் பரவியபோது முருகப்பெருமானே அவுணர்கள்வருகின்றஅண்டத்தின்வழியையடைத்தனன். சூரபதுமனே நமது குகப்பெருமானுக்கெதிரில் தன்தேரைச்செலுத்திஇதுசொல்வானுயினுன். குகப்பெருமானே! உண்மையறிவானந்தமே திருமேனியாகவுடைய நமதுபரமசிவன் அருளிச்செய்தவரத்தால் என்றுமிருப்பேனல்லதிறவேன். என்குற்றேவலைச்செய்து கொண்டிங்கேயுழல்கின்றதேவர்கள் சொல்லை நீமெய்மையாகக்கொண்டு போர்செய்ய இங்கேயெழுந்தருளினுயே! இனி நீ யென்ன பாடுபட்டாலும் நானுன்னைவிடப்போவதேயில்லை. மேலும் நீ சிறியபாலகனென்று விடுவேனே அப்படியும் விடவேமாட்டேனென்று சொல்லினுன். அதைக் கேட்டருளிய முருகப்பெருமானே சூரபதுமனை நோக்கித்

தேவர்களை வருத்துங்கொடியோனே! வம்புமொழிகள் சொல்லாமின்றனை. நா மேவும் அம்புகளே உனக்கு விடைகொடுக்கு மென்றனன். சூரபதுமன் தன் கையிலிருந்த வில்லை வளைத்துக் குணத்தொனிசெய்து சரமழை பொழிந் தான். பூதர்களோசூரபதுமனைவளைந்துகொண்டனர். சூரபதுமனேதன்வில்லி னின்றும் பாணங்களைத் தொடுத்துவிட அந்தப்பாணங்களுக் காற்றுமல் பூதர் கள் தோற்றேடினர். இச்செயலைக்கண்ட வீரவாகுதேவரை யுள்ளிட்ட இலக் கத்தொன்பதின்மரும்அச்சூரபதுமனேடெதிர்த்துப்போர்செய்தனர். சூரபது மனே நூறுகோடி பாணங்களையேவி அவர்கள்கையிற் பிடித்திருந்த வில்லையும் ஏறியிருந்த தேரையு மழித்துப்பின்னு நாலாயிரம் பாணங்களையேவி அவர்க ளுடம்பிற்படும்படி வருத்தினன். அவைகளினல் வீரவாகுதேவரை யொ ழிந்த இலக்கத்தெண்மருமிரியல்போயினர். வீரவாகுதேவரோசூரபதுமன் தே ரிற்பாய்ந்து தமது வாளால் அவன் கையிற் பிடித்திருந்தவில்லையொடித்தனர். சூரபதுமனே தன் கையால்வீரவாகுதேவர்மார்பிலறைந்தான். அவரோ அத னல்நிலத்தில் வீழ்ந்து மூர்ச்சையடைந்ததுகண்டு அவரையெடுத்து ஆகாயத் தில் விட்டெறிந்தான். பின்பு வீரவாகு தேவரோ மூர்ச்சைதெளிந்து முரு கப் பெருமான்சந்நிதானத்தை யடைந்தனர். சூரபதுமனும்பின்புமுருகப்பெ ருமானை நாடிவந்து தன் வில்லை வளைத்து அநேகவகையான விற்போர் விதங் காட்டி அப்பெருமான் தேரிற் கட்டி யிருக்கும் கொடியைக் கூரிய பாணங்க ளாலழிக்கத்துணிந்தான். பிள்ளையாரோ அவனேவிய பாணங்களையெல்லாம் தகர்த்துவிட்டுஅவன் கொடியையு மறுத்துக் கடலில் வீழ்த்தினர். தேவர்க ளதைக்கண்டு மனமகிழ்ந்தனர். சூரபதுமனே வெகுண்டு ஆகாயத்திலிருந்து வேடிக்கை பார்க்கும் தேவர்கள்மேலும் அவர்கள்மிகவருந்தும்படி அம்புகளை யேவினன். நிலத்திலிருந்த வண்ணமே முருகப்பெருமானே அவன் விட்ட அம்புகளை யெல்லாம் கண்டித்துத்தன் தேரையாகாயத்திற் செலுத்தி அச்சூர பதுமனுடன் பலவகைவிற்போர்விதங்களைக்காட்டி யருளினன். இவ்விருவர் தேர்களோஇருந்தாற்போலிருந்து பாதாளம்செல்லும். நிலத்தில் வந்துநிற்கும் எண்டிசையிலுஞ் செல்லும். கடலிற்றுவிப்போம். குலவரையிலோடும். சத் தியலோகமடையும். பெரும்புறக்கடலையும் அதற்கப்பா லிருக்கும் சக்கரவாள கிரியையுடையும். பலவண்டங்களிலும் போய்ச்சேரும். இவ்வாறு அத்தேர் களிரண்டு மெங்கு முலாவின. வச்சிரதேகம்பெற்றசூரபதுமனேமுருகப்பெரு மான்மேல் பலபாணங்களை யேவினன். பின்னை யாரும் தமதுவில்லைவளைத்து அவன் விடும் பாணங்களைத் தம்மால் விடப்படும் பாணங்களால் தடுத்துப் பதினன்கு பாணங்களையேவி அவனேறி யிருந்த தேரையும் அழித்தனர். அச் சூரபதுமனேவில்லுடன் நிலத்தில்வந்தடைந்தான். வந்தடைந்தும்வறிதேயிரா மல்புங்கானுபுங்கமாக நம்பெருமான்மேல் பலபாணங்களையேவினன். முருகப் பெருமானேதானும்பலபாணங்களையேவி அவன்விட்டபாணங்களை யெல்லாந் தகர்த்துஅவன் தோள்மேலும் ஆயிரம்பாணங்களையேவினன். அவைகள்பட்டு ஓடிந்துபோயின, சூரபதுமனே தோளேயிலக்காகஇரண்டாயிரம் பாணங்களை யேவிமுருகப் பெருமானை வருத்தினன், அவை யனைத்துந் துகளாயின. மீளவும்

சூரபதுமன்விடுகின்றபாணங்களையெல்லாம் தம்மால்விடப்படும்பாணங்களால் விலக்கிஆயிரம் சுடுகணைகளை யேவி அவன் பிடித்திருந்த வில்லையுமொடித்தெறிந்தனன், பின்னும்சூரபதுமனே வேறொருவில்லையெடுத்துக்கொண்டு ஆகாயத்திலெழுந்தான். முருகப்பெருமானே விரைந்து தானு மெழுந்துஆகாய மார்க்கமாகச்சென்று போர் செய்தனன். அதுகண்டு சூரபதுமனே மீளவு நிலத்தில் வந்தான். தானும் பூமியில்வந்து போர்செய்யத்தொடங்கினன். இவ்வாறெங்குஞ் சென்றுபோர் செய்துவருகையில் நிலத்தி லிருந்தசூரபதுமன்திசைதோறும் சென்றான் அங்குஞ் சென்றனன். கடலிற் சென்றான்; பாதலத்திற் சென்றான். வைகுந்தஞ் சென்றான், இவன் எங்கெங்கு செல்கின்றானே அவ்வவ்விடத்தினுஞ்சென்று பிள்ளையார் போர்செய்யச் சூரபதுமன் அண்டத்திற்குப்பொருந்தியவழியேசென்றனன். பிள்ளையாரோ அவனை அங்குந்தொடர்ந்து சென்று போர் செய்து அவனது தேரை யழித்து விட்டனர். தேரழியவும் சூரபதுமன் எண்ணாத வெண்ணமெல்லாம் எண்ணி யெண்ணி யேங்கி மனம் புண்ணாகித்தான் செய்தயாகத்தில் தனக்குப் பரம்பரனாகிய பரமசிவனளித்த பெருவரத்தா லுதவப்பட்ட மனோவேகமுடைய இந்திரஞாலத்தேரை நினைத்தான். அத்தேர்வந்தெதிர்நிற்க, அத்தேரிலேறிக்கொண்டுபிள்ளையார்முன்னேயண்டத்திற் பொருந்தியவழியை யடைத்த கதவைப் பாணங்களையேவியறுத்தெறிந்து வழியையுண்டாக்கினன். அண்டத்திற் கப்புறத்திருந்த அவுணப் படைகளோ பிள்ளையாருக்கயலில் வந்து சேர்ந்தன.

இவ்வாறு வந்த சேனைகளைக்கண்ட பிள்ளையாரோ தமது விழியாற்கோபித்து நோக்கி நிற்கவே அவை வந்தவழி போனவழி தெரியாமற் போயின. பின் அதன்மேல் உள்ள அண்டங்களி லுள்ள படைகளெல்லாம்வந்துகொண்டேயிருந்தன. அவைவரக்கண்டபிள்ளையார் உங்காரஞ்செய்தனர். அவைகளுமழிந்துபோய்விட்டன. பின்னுள்ள அண்டங்களிலிருந்து சேனைகள்வந்து கொண்டேயிருந்தன. இவ்வாறுவருவனவற்றையெல்லாநோக்கித் தமதுதிருக்கரங்களிலுள்ள பஞ்சாயுதங்களை யேவினர். அவை பலவண்டங்கடோறுஞ் தூருவிச்சென்று அவுணப்படைகளையெல்லாம் ஒருகணப்போதேயழித்துவிட்டன. இவ்வகையாகவே தன் படைகளனைத்தும் அழிந்துபோகக்கண்ட சூரபதுமன் தனக்குப் பரம்பொருளாகிய சிவபெருமா னளித்த சக்கரமொன்றைச் சாட்குணப்பிரம மாகிய சுப்பிரமணியப் பெருமான்மேல் வீசினன். அது நமதுபெருமான்மேல்வந்தது. தமதுதிருக்கரத்தில்அதையும்பிடித்தேந்தினன். சூரபதுமனேமன மிக வருந்தித் தான் விட்ட படையும் பழுதாகக் கண்டு பலவுருவங்களைக்கொண்டு மாயை யாற் போர்செய்யத்தொடங்கினன். அதுகண்ட பிள்ளையாரும் ஞானத்திரமேவி அவனரிதிற்செய்திருந்த மாயை யனைத்தும் கெடுத்தனர். கெடுக்கவே அச்சூரபதுமன் தன்னந்தனியனாய் நின்று எல்லாவிடங்களிலுஞ் சென்றான். பிள்ளையாரும் அவனுடன் தொடர்ந்து போர் செய்யத்தொடங்கினர். அதன்மேல் சூரபதுமன் மீண்டும் நிலத்தில் தோன்றித் தன் தாயாகிய மாயையை யுள்ளத்திலே நினைந்த மாத்திரத்தில் அம்மாயையும் வந்துதோன்றினள். சூரபதுமனே அவளைச்சேதாவைக்கண்டகன்றே

போல்தன்னுள்ளங் குழைந்துகண்டு இதுகாறுநடந்தவற்றை யெல்லாம்சொல்லி இறந்துபோன சேனைகள்முழுதும் மீண்டு மெழுந்திருக்க வொருசூழ்ச்சியைக் கேட்டான். அவள்சூரபதுமனைநோக்கிப் பெரும்புறக்கடலினப்புறத்தேயுள்ள சஞ்சீவி மலையிங்கு வருமாயின் யாவரும் பிழைப்பரென்றுருக்கரந்தனள். அதைக்கேட்ட சூரபதுமன் மனமிகமகிழ்ந்து அம்மலையைக்கொண்டு வருவேனெனத் துணிந்து தனக் கனுதிமல முத்தனுகிய பரமசிவன் உதவி யிருந்த சிங்கத்தின் பிடர்மேலேறி இந்திரஞாலத்தேரைநோக்கிநீசென்றுசஞ்சீவி மலையைக் கொண்டுவாவென்று கட்டளையிட்டான். அது அவ்வாறே சென்று அம்மலையைக் கொண்டுவந்தது. அம்மலைவரவே போர் செய்யத் தொடங்கிய நாள் முதலின்று வரையும் இறந்து கிடந்த பானுகோபன் சிங்கமுகாசுரன் முதலானேரெல்லாம் நித்திரை தெளிந்தெழுந்து போர்செய்யத் தொடங்கினர். அதைக்கண்டு பூதவீரர்கள் வெருக்கொண்டு தளர்ந்தனர். அதுகண்ட பிள்ளையாரோ தமது கரத்திலிருந்த வில்லில் சிவாத்திரத்தைத் தொடுத்தேவினர். அது மீண்டு மெழுந்து சிங்கமுகன் முதலிய தானவரையெல்லாமழித்துவிட்டு நமது குகப் பெருமான் திருக்கரத்தில் வந்து சேர்ந்தது. சூரபதுமனே சினங்கொண்டு தன் தேரை நோக்கி நீ சென்று வீரவாகுதேவரையுள்ளிட்டாரை யெல்லாம் மயக்கங்கொள்ள அண்டமுகட்டிற் கப்பாற் சேர்த்துவாவென்று கட்டளையிட்டனர். அவ்விந்திரஞாலத்தேரோ அவ்வாறே சென்று அவர்களை அண்டமுகட்டிற் கப்பாற் சேர்த்தது. பிள்ளையாரோ சினங்கொண்டு தமது வில்லில் ஒரு பாணத்தைத் தொடுத்தேவினர். அது சென்று அத்தேரை அவ்வீரவாகுதேவரை யுள்ளிட்டாருடன் நிலத்திற்கொணர்ந்து சேர்த்தது. அதனல் அவர்களனைவரும்மயக்கமகன்று நங்குகப்பெருமானைப் புகழ்ந்து நின்றனர். பிள்ளையாரோ அத்தேரைநோக்கி இனி இங்கேதானே நின்றுங் கிருவென்று கட்டளையிட்டருளினர். அதுஅவ்வாறே அசைவின்றி நின்றுவிட்டது. சூரபதுமன் மனந்தளர்ந்துதன்வில்லில் ஏழுபாணங்களைத் தொடுத்து ஏவினன். அவைபிள்ளையாரை நோக்கிவரவே அவற்றைத்தாமும் அவ்வாறு தமது வில்லில் பாணங்களைத் தொடுத்தேவித் தடுத்து ஆயிரம்பாணங்களையேவி அவன்கையிற்பிடித்திருந்த வில்லைத் துணித்தனர். சூரபதுமனேதன் கையிலிருந்த வில்லொடியவே சூலப்படையொன்றை விட்டேவினன். அதையழிக்க ஆயிரம்பாணங்களைப்பிள்ளையாரேவ, அவற்றையெல்லாம் கவளீகரித்துக்கொண்டுந் தம்மேல் வரக்கண்டு பிள்ளையாரும்தமதுதிருக்கரத்திலிருக்கும் வயிரப்படையையேவினர். அதுசூலப்படையைக்கவ்விக்கொண்டு பிள்ளையார் திருக்கரத்தே வந்தடைந்தது. பிள்ளையாரோஇரண்டாயிரம்பாணங்களையேவி அச்சூரபதுமனேறியிருந்த சிங்கத்தைக் கொன்றனர். தானேறியிருந்த சிங்கமிறந்துபடவே சூரபதுமன் சக்கரவாகப்புள்ளேபோ லுருக்கொண்டு பூதர்களை வருத்தத் தொடங்கினன். இவ்வாறு வருத்தத் தொடங்கியதறிந்த பிள்ளையாரும்அப்பறவையைக்கொல்லநினைந்துவில்லினின்றும்பலபாணங்களையேவினர். அதனல்வருந்திய அப்பறவை பிள்ளையாரதுதிருக்கரத்திலிருக்கும் வில்லைமுறிக்கவந்தது. அதைப்பிள்ளையாரும் தமது திருக்கரத்திலிருந்த வாட்படையா

விரண்டு துண்டமாக வெட்டித்தள்ளினர். பின்பு அச்சூரபதுமன் நிலனும் நீராயும் தீயாயும்காற்றாயும் தனித்தனியுருவங்கொண்டு போர்செய்யப் பிள்ளையாரும் அவற்றையெல்லாம் தமது திருக்கரத்திலிருக்கும்வில்லில் ஏழுபாணங்களைத்தொடுத்து நீங்கள்ஊழிவெள்ளம்போலுருக்கொண்டு அவன்மாயையையெல்லாமழிக்க வேண்டுமென்று தடுத்தும், நீருருவங்கொண்டபோது நீருருவங்கொண்டுபோர்செய்ய அதைநூறுபாணங்களையேவி யூழித்தீயுருக்கொண்டு நீருருவத்தை யழிக்கவேண்டுமென்று தடுத்தும், தீயுருக்கொண்டுஅவன்போர்செய்கையில் பிள்ளையார் தமதுகரத்திலிருக்கும் வில்லில் ஆயிரம்பாணங்களையேவிஅவற்றைப் பிரசண்டமாருத வடிங்கொண்டு போய்வெற்றிகொள்ளவிடுத்தும், பின்பு பிள்ளையார் அவன்காற்றுருக்கொண்ட காலத்தில் தமதுதிருக்கரத்திற்பிடித்தவில்லில் இலட்சம்பாணங்களைத்தொடுத்து நீங்கள்பார்தள் வடிவங்கொண்டு அம்மாயையை யழித்துவரவேண்டுமெனவிடுத்தும்போர்செய்தருளினர். இவ்வாறுபோர்செய்யவே சூரபதுமன்சாலநொந்து ஒருபால் எமன்போலவும் ஒருபாலிருள்போலவும் ஒருபால்மலைபோலவும்ஒருபக்கத்திற் பூதம்போலவும்ஒருபக்கத்தில்பஞ்சபூதம்போலவும்ஒருபக்கத்தில் ஆலவிடம்போலவும் ஒருபக்கத்தில் படைவகைகள்போலவும்உருக்கொண்டுபோர்செய்தான். அவற்றையெல்லாம்தனித்தனியேதமதுவில்லில் ஆயிரமாயிரம்பாணங்களைவிடுத்துத்தடுத்தருளினர். பின்னே சூரபதுமன்எழுகடலாகவும்நிலமேழும்பிறவாகவும்உருக்கொண்டு போர்செய்யும்படிவந்தான், அவற்றையெல்லாம் தமது திருக்கரத்திற்பிடித்திருக்கும் வில்லிற்றொடுக்கும் ஆயிரம்பாணங்களையேவ அப்பாண தேவதைகள் அவ்வுருவ மொவ்வொன்றிற்கும் எவ்வேழுருக்கொண்டு அவன் கொண்ட மாயை வடிவங்களனைத்தையுஞ் சிதைத்தன. பிள்ளையாரோ இவனாற்றலெல்லாம்கண்டு தன்னையன்றிவேறில்லாத தற்பரவடிவமாய் நின்றனர். அதுயாவரையும் மனம் குழைந்துருகும்படிசெய்தது. எங்கும்தானேயாகின்ற தன்மையைக்கண்ட இவனைப்பாலனென்றேயெண்ணிமதிமோசம்போனேனே, இவ்வுருவத்தில்எல்லாவண்டங்களுந்தோன்றுகின்றனவே, இவ்வுருவத்தைக்காணவல்லவர்யாவர், ஆயிரங்கோடிமன்மதர்கள் அழகனைத்தும்ஒருசேரத்திரண்டு நின்றாற்போலவும்ஆயிரங்கோடிஇளஞ்சூரியர்ஒருசேரத்திரண்டு நின்றாற்போலவும்விளங்கிய இக்குமரநாயகன்திருவுருவத்தைக்கண்டு தேவர்கள்ஒருபுறத்தே வணங்கித் துதித்துநிற்க, அண்டமும்பிறவும் தானேயாந்தன்மையா யிருக்கின்றவனே! இவனுண்மையை நமக்குத் தூதனாகவந்த வீரவாகுவும் சொல்லியிருந்தானன்றோ! அவன்சொன்னவற்றையெல்லாந்துணிபாகக்கொள்ளாமலிருந்துவிட்டேனே! நான் அரசுசெலுத்திவந்த ஆயிரத்தெட்டண்டமும் இவன் கொண்ட திருவுருவத்தி னோர்கான்மயிரிற்றோன்றுகின்றனவே! இவன் கொண்டதிருவுருவத்தினை முழுதுமறியவல்லவர் யாரிருக்கின்றனர்! நான்பெற்றவரத்தின் சிறப்பால் ஒருசிறிது பார்க்கவலியுடையேனாயிருக்கின்றேன். இவனைச் சாதாரணமாக எண்ணவும்போமா! அப்பரம்பொருளேஇக்குமரனாகியேபோர்செய்யவந்ததென்று என்னுயிர்போன்ற தம்பியாகிய சிங்கமுகனும் என்னிளைய குமாரனாகிய இரணியனும் பலவகையாக எடுத்துச்சொன்னார்களே,

நானதைக்கேளாமலும் போனேனே! நாம் இவன் திருவுருவத்தை எண்ணி லாதயுகமேத்தி நின்ருலும் கண்ணிஞலுமடங்காது கருதலளவையா லு மடங்காது, இவன் நம்மொடு போர்செய்ய வெழுந்தருளியது அவன் திருவரு ளாலேயென்று துணியவேண்டும். இவனேடு போர்செய்யலாமென்றுகொண்ட வெகுளி முழுதும்போய்விட்டது, போர்க்கெழுமுயற்சியு மருகிவிட்டது. உடல்புளகமரும்பியது. ஆனந்தக்கண்ணீர் பெருகுகின்றது. இவனிடத்தே யன்புபெருகுகின்றது. எனக்குநெஞ்சமும்என்றும் அழிவாய்ப்பட்டமெழுகே போ லுருகாகிற்கின்றது. அகந்தைவேருடன் கெட்டொழிந்தது; மெய்யுணர் ச்சிபிறந்தது. வலத்தோளும் கண்ணும் துடிக்கின்றன. இவன்திருவுருவத்தில் எல்லாப்பொருள்களும் தோன்ருநிற்கின்றன. விண்ணவர்பெருமாஞகிய இவ னது திருவுருவத்தை முழுதுங்கண்டேன்; இவனை அடையவேண்டுவதே கா ஸிஞற்பெற்றபயன், கையாற்பெற்றபயன்தொழுவதே, தலையால்வணங்குவேண் டுவதே, நாவிஞல் துதிக்கவேண்டுவதே, தீமையனைத்தும் நீக்கவேண்டுவதே, நானிவனுக்காளாகியென்றும் வாழவேண்டுவதே, நானுந் தேகமெடுத்தபயனி துவே என்று எண்ணிகின்ருன்.

இவ்வாறு எண்ணியிருந்த சூரபதுமனைக் குமரநாயகன் தன்றிருவருளால் மீண்டும் மயக்கிஞன். மயக்கவே கையொடுகையைத் தாக்கித் தலையயசை த்துக்குழந்தையுருக் கொண்டகள்ளன்போர்செய்யாமல்கள்ளமாயையொன்று காட்டி என்னையுமயக்கங்கண்டானே. யாரெனக்குநிகராவர்! காயமழியாத யானே கருத்தழியவல்லேன், இவனுயிர்குடித்தே என் கோபந்தணிவேனெ ன்று மனந்துணிந்து ஆலவிடம்போலெழுந்துசீறிச் சூரியனும் நிலனும் விண் ணுமறையத் தக்கதாகிய இருளுருவங்கொண்டு நின்ருன். இதைக்கண்ட தே வர்கள் அவுணமாயமென்று ஆகாயத்திற்சென்றுபார்த்துக்கொண்டிருந்தெம்மை வருத்துவான்போலுமெனத்துணித்துஎம்மை இவனைக்கொன்றுகாத்தியென்று முறையிட்டழுதனர். அம்முறையைத் திருச்செவி சாத்தியருளிய குமரநாய கன் தமது திருக்கரத்திலேந்தியவேற்படையைநோக்கிசென்று நீஇவனுடலைப் பிளந்துவாவென்று கட்டளையிட்டனன். பிள்ளையார்வேற்படையையேவவேஅ வன்செய்தமாயைகளனைத்தும்போயின. அதுசெல்லக்கண்டசூரபதுமன்இவன் ஏவியவேல்நம்மையென்னத்தான்செய்யுமென்று குறுநகைகொண்டுகோபமாய் க்கடலினடுவேசென்று கீழினர்நின்றமேற்பகைமாமரவுருவாய்நின்ருன். உலக முழுதும்கவடுவிட்டுவானளாவியதோர்மாமரமாய்க்கடலினடுவிலிருந்தசூரபது மனின்ற நிலைமைகண்டு தேவர்களெல்லாம் கலங்கினர். அனந்தனும் பாரஞ் சுமக்கமுடியாமல் தன்னுயிரந்தலைகளையுநெளித்துக்கொண்டான். உலகமேழு மிடிந்துபொரிந்தன. கீழேழுலகமும்பொடிந்தன. அட்டமாநாகங்களும் யாமை யும்புரண்டன. எழுகடலு மொன்ருவதாயிருந்தன. அட்டகுலாசலமும் வருந் தின. நட்சத்திரக் கூட்டங்களுமுதிர்ந்தன. கிரகங்களும்தத்தங்கதிமாறின, சூரி யனும் தேரிற்பூட்டியகுதிரைகளுடனும் கலங்கினன். சந்திரனும்தன்விமானத் தைவிட்டோடிஞன். தேவர்களுங் கயிலையையடைந்துஇறைவனேபுகலென்று வேண்டிக்கொண்டனர். இவ்வாறுயாவரும் எவையுமஞ்சுஞ் சூரபதுமன் வருந்

நிக்கொண்டிருந்தான். அவ்வேற்படையானது கடலினடுவே அவன் கிழேபலகவடுகளைவிட்டுப் பூத்துக்காய்த்துப் பழுத்துத் தன்வேரால்மேலுலகனைத்தையும் வருத்தும் அக்கொடியமாமரவுருக்கொண்டிருக்கக்கண்டுமனம்வருந்திஅம்மரத்தைத் தடிந்தது. வேலோ அவனைமார்பினடுவேபுகுந்துபிளந்து ஆகாயகங்கையிற் படிந்து அக்குமரநாயகன் திருக்கரத்தேவந்தடைந்தது. வேற்படை மீளவேசூரபதுமனும் சேவலுமயிலுமாகவுருவங்கொண்டு குமரநாயகனோடெதிர்க்க எண்ணங்கொண்டு தேவர்களெல்லா மிரியல்போகப் பரம்பரனருளிய வரத்தாலிறவாமல் சேவலுமயிலுமாக ஆரவாரித்துக் கொண்டுவரவே, குகப்பெருமான் கண்டு மயிலைவாகனமாகவும் சேவலைக் கொடியாகவுமிருக்கக் கருணைசெய்தான். தமக்குப்போரில் சேவற்கொடியாயும் மயில்வாகனமாயுமிருந்த அக்கினிதேவனையும் இந்திரனையும் நோக்கி உமதியற்கை வடிவங் கொள்ளுங்கோளென்றுசொல்ல அவர்களும்தத்தமுருக்கொண்டுவணங்கிநின்றனர். தேவர்களும் எங்கள் வினைவேரறுத்தருளிச்சூரபதுமனையும் வேரறுத்தாயென்றும், நாங்கள் நூறு யுகமட்டும்வருந்த ஆறுமுகங்கொண்டருள்செய்தாயென்றும், நீதிநெறியில்லாதவசுரர்செய்யுந் தீமையொழிந்து வேதநெறிபெற்றோமென்றும், எங்களுக்கின்றுபகைமாற்றிச் சென்றவுயிர் மீண்ட திறம்பெற்றோமென்று செய்யுமவனும்புலனும்செய்வித்துநிற்பவனும் எய்தவரும்பொருளு நீயேயென்றுங்காட்டியாண்டனையென்றும்உனக்கேதொழும்புசெய்யப்பூண்டோமென்றும் போர்க்களத்தேவணங்கிநின்றனர்.

சூரபதுமன்வதைப்படலம்
முற்றிற்று.

---

## மீட்சிப்படலம்.

இவ்வாறு நிகழவே மகேந்திரநகரத்தில் அவுணரிற் சிலர்விரைந்துசென்று சூரபதுமன் குகப்பெருமானுல்ஏவப்பட்டவேலா லிறந்துபட்டானென்றுபதுமகோமனைக்குத் தெரிவித்தனர். அதுகேட்ட அப்பதுமகோமளையும் தன்னுயகனிறந்ததைக்கேட்டவுடன் தலையளியால் தன்னுருயிர்நீங்கினுள். மற்றமனைவியர்ப்பாவரும் தீயில் வீழ்ந்திறந்துபட்டனர். இரணியனோ தன்தந்தையாகிய சூரபதுமன் இறந்துபட்டதும் சேவலுமயிலுமாயும் நின்றமையும் கண்டுள்ளங்கலங்கி மனநொந்து நான்சொன்னவாசகங்களெல்லாம்கேளாமற்போயினையே! என்று நான் உன்னை முன்னைப்போற் காண்பேன், அன்புடையானென்று பிறர்சொல்லத்துன்பமுடையானுய்த்துயரங்கொண்டழுகின்றேன், மாற்றலர்வலிகண்டும் உன்னைப் போர்க்களத்திற் காவாதொளித்தகடையேனன்றோ! என் கட்புலனுக்குத் தோன்றுமலொளித்தாய், யாருமகனென்றேசொல்லப்பூமியில் தோன்றிய என்னையும் கூடமனங்கொள்வாயோ, நில்லாதவுடம்பை நிலையென்று நினைத்துப் பலருங்கண்டு பழிக்கஉனக்குஞ்சொல்லாமலேயோடிப்போய் மறைந்திருந்தேனே; நீஇறந்துபட்டபின்னரன்றோவந்துவிட்டேன். நானேயோ

வன்பினனென்றின்னன புலம்பி ஆகாயத்தில் வெகுதூரத்திலிருந்துகொண்டு மனந்தளர்ந்து பெருமூச்செறிந்து நான் கண்படுவேனாயின் என்னைப் பூதர்கள் எல்லாந்தின்று கோபந்தீர்வாரோவென்று முன்போற் கடலிலொளித்துக் கொண்டான். பின்பு அவ்விடமகன்று அவன்சுக்கிராசாரியனைத்தேடிச்சென்றடைந்து போரில் இறந்துபட்ட தாதையர்க்கும் பானுகோபன்முதலிய துணைவர்க்கும் பதுமகோமளைமுதலிய தாய்மார்கட்கும் மற்றையோர்ஈமக்கடனை விதிமுறைசெய்து நாமினியிருப்பது அன்பத்திற்கோ ரங்குராமமெனத்துணிந்து அதை வெறுத்து ஆதிப்பிரானாகிய பரமசிவனைநாடிச் சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாகிய அந்தமிலின்பத்தழி வில்வீட்டையடைய ஒருசார் சென்று நோற்றிருந்தான். இதுநிற்க,

மயிற்பரியுகைக்கும் பரம்பரன் வீரவாகுவைநோக்கிச்சூரபதுமனால் சிறைகிடந்த சயந்தன்முதலிய தேவர்களையெல்லாம் மீட்டுவாவென்று கட்டளையிட்டனன். அக்கட்டளையைத்தலைமேற்கொண்ட வீரவாகுதேவர்நன்றிதென்று அப்பெருமானை மும்முறைவலம்வந்துஎட்டுறுப்பு நிலமுறப்பணிந்து விடைபெற்றுப் போர்க்களம்விட்டகன்று மகேந்திரநகரமடைந்து அவர்களைச் சிறையிட்டிருக்குமிடம்புகுந்தனர். அதைக்கண்டசயந்தன்முதலியதேவர்களெல்லாரும் விலங்குண்டு கான்விலங்கேபோற் சிறையுண்டிருந்த எங்களை மீட்கும்படி யெழுந்தருளினையோ! என்று வணங்கி இருகைகளும் சிரமேற்குவித்துத் துதிசெய்தனர். அதைக்கண்ட வீரவாகுதேவர் அவர்களை நோக்கி நமது சண்முகங்கொண்டதாணுவாகியகுகப்பெருமான் சூரபதுமனை அவன் புத்திரபவுத்திராதிகளுடன்களத்திலவியக்கொன்று களைந்து உம்மையெல்லாம் சிறையினின்று மீட்பித்தனன். அச்சொல்லைச் செவிக்கமுதமாகக்கேட்டுள்ள மகிழ்ந்த சயந்தன்முதலிய தேவர்கள் வீரவாகுதேவருடனே சென்று பிள்ளையாரைக்கண்டு மும்முறை வலம்வந்து எட்டுறுப்பு நிலமுறப்பணிந்து வாழ்த்தினின்றனர். அப்போதுகுன்றெறிந்த கொற்ற வேற்குகப்பெருமான் அவர்களைத் தமதுகருணைத் தடங்கண்ணாற்பார்த்தருளி மனக்களிப்புடன் இனித் துறக்கச் செல்வம்பெற்றிருப்பீரென்றுதிருவாய்மலர்ந்தருளினான். பின்புசயந்தன் தன்னையீன்ற தந்தையாகிய இந்திரனை வணங்கினின்றான். அதுகண்டு இந்திரனும் தன்மகனை வாரியெடுத்துமார்புறத்தழுவி யுச்சிமோந்து முத்தமிட்டான், அதுபோது மற்றதேவரும்முறைமுறையேவந்து இந்திரனை வணங்கினின்றனர். அவர்களையுந் தனித்தனியே மார்புறத்தழுவினான். பின்னர் சூர்க்குலங்கடிந்த சுடர்நெடுவேலண்ணல்போர்க்களத்திற் போரில்அதுவரையிலும் இறந்துபட்ட பூதரையெல்லாம் வருகவென்றருள அவர்களும் அவ்வாறே வந்து குகப்பெருமானைவணங்கினின்று சூழ்ந்தனர். பின்னர் குகப்பெருமானே வருணனையழைத்துச் சூரபதுமன் இதுகாறும் அரசுபுரிந்திருந்த மகேந்திரநகரத்தை யழித்துவிடென்று கட்டளையிட,அவன் அக்கட்டளையைத்தலைமேற்கொண்டுஅந்நகரத்தைமுழுதும் கடலுக்கிரையாக்கினான். கடவுட்பெருமானாகிய குகப்பெருமானேமகேந்திரநகரைக் கடந்துஇலங்கையைநீங்கிக் கடலையுந்தாண்டித்திருச்செந்தூரையடைந்துமயில் வாகனத்தைவிட்டிழிந்து பிரமன்மால்முதலியதேவர்களும்வீரவாகுதேவர்முத

வியஇலக்கணத்தொன்பதின்மரும் பூதரும் தன்னைப் புடைசூழத்தனது திருக்கோயிலையடைந்து சிங்காசனத்திலெழுந்தருளினான். அப்போது பிரமன்மால் முதலிய தேவர்கள் அறுமுகங்கொண்ட ஆதிப்பிரானை மும்முறைவலம்வந்து எட்டுறுப்பு நிலமுறப்பணிந்து வாய்பொத்திக் கைகட்டிக்கொண்டெம்பெருமானே! துரும்பினும் பற்றுச்சிறியேம் தேவரீருடைய பொற்பாத புண்டரீகங்கட்கு அருச்சனை செய்யவேண்டுகின்றோமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டனர். அவ்வாறே செய்கவென்றுநம்பெருமான்பணிக்க, அக்கட்டளையைத் தலைமேற்கொண்ட அப்பிரமன்மால்இந்திரன்முதலிய தேவர்கள்நறும்புனல்நறுமலர்கனி வகைமுதலியவற்றைச் சேகரித்துக்கொண்டு குமாரதந்திர நெறியிற் கும்பத்தாபன முதலியவற்றைச் செய்துபரிவாய்ப் பூசிக்கத்தொடங்கி அர்ச்சனையுஞ் செய்துமுடித்து வணங்கிநின்றனர். அவர்களை நோக்கி உமது குறையாதென்றுதிருவாய்மலர்ந்தருள சூரபதுமனைவேரொடுங்கெடுத்த தேயாங்கள் பெறும்பேறு, எங்களுக்குமது திருவருள் பூரணமாயிருக்க யாங்கள் பெறவேண்டுவதென்னவிருக்கின்றது, உமது கருணைக்கடைக்கண் எம்பால் எப்போது நீங்காதிருக்க வேண்டுமெனக் குறையிரந்தனர். பின்பு குகப்பெருமானே பரம்பரனாகிய பரமசிவனை யருச்சிக்கத் திருவுளங்கொண்டு தானுவையமைத்துச் சிவார்ச்சனை செய்யத்தொடங்கிச் சிவாகமவிதிப்படிமுடித்து இறைவனையும் வழிபட்டிருந்தான்; இதுகிடக்க.

மீட்சிப்படலம்

## யுத்தகாண்டம்.

முற்றுப்பெற்றது.

---

உ

வேலுமயிலுந்துணை.

ஐந்தாவது

# தேவகாண்டம்.

## தெய்வயானையம்மை திருமணப்படலம்.

கண்ணுதற்பிரானுதல்விழித்தோன் றியேகமலத்
தண்ணலுக்கருமறைப்பொருடெரித்தருள்விளையாட்
டெண்ணிலாதனசெய் துசூர்முதறடிந்திமையோர்
நண்ணவான்பிடிமணந்தவனடிமலர்நயப்பாம்.

முத்துக்குமரப்பெருமான் இவ்வாறு சிவார்ச்சனைசெய்தபின்னர் அவ்விட மகன்று மாலேபிரமனேமுதலிய தேவர்களும் முற்றத்துறந்த முனிவரும் வீர வாகுதேவரை யுள்ளிட்ட இலக்கத்தொன்பதின்மரும் பூதவீரரும் பூதப்படை இரண்டாயிரவெள்ளமும் தன்னைப் புடைசூழ்ந்துவர மயில்வாகனத்திலெழுந் தருளிமாலேபிரமன்முதலிய அத்தேவர்களைநோக்கிநீங்கள் உங்களுக்குரியவா கனங்களின் மேலேறிவாருங்களென்று கட்டளையிட, அக்கட்டளையை மேற் கொண்ட பிரமன்மாலிந்திரன்முதலிய தேவர்களும் வீரவாகுதேவரை யுள்ளி ட்ட இலக்கத் தொன்பதின்மரும் பூதவீரரும் தத்தம் வாகனங்களின் மேலே றிப் புடைசூழ்ந்து சென்றனர். இவர்கள் இவ்வாறு புடைசூழ வடதிசையை நோக்கிச் சென்று சந்தனப்பொதிகைச் செந்தமிழ்முனிவனும் சவுந்தரபாண் டியனெனுந் தமிழ்நாடனும் சங்கபலகையுந் தழைத்தினிதோங்கு மங்கலப் பா ண்டிவளநாட்டின்முக்கண்முதல்வன்மூவிருபத்துநான்குதிருவிளையாடல்செய் தமுத்தித் திருப்பதியெனப்படும் துவாதசாந்தநகரமாகிய மதுரைக்குக் குடக் கண்ணுள்ள திருப்பரங்குன்றினை யடைந்தான். அதைக்கண்டதெய்வத் தச்சன் அம்மலையையடைந்துஅளவிலாவீதிகளும்தேவகுலமும்கோயில்களும் சோலையும் வாவியும்படைத்து முடித்து விண்ணப்பிக்கக் குமரநாயகனும் தா னேறியிருந்த மயிலினின்றிழிந்து பிரமன்மாலிந்திரன் வீரர்முதலானோர் புடை சூழ்ந்துவரத் தனக்கமைத்த திருமாளிகையிலே சென்று மற்றதேவர்கள் முத லானோர்களையும் தத்தமக்கமைத்திருந்த விடுதிகளிற் செல்லக் கட்டளையிட் டனன். வீரவாகுதேவரை யுள்ளிட்ட வீரர்கள் இலக்கத் தொன்பதின்மரும் பாரிடவீரரும் இரண்டாயிரவெள்ளம் பூதப்படையுடன் குமரநாயகனைப் பிரி

யாமலிருந்தனர். இவ்வாறு அவர்களுடன் எழுந்தருளியிருக்கையில் பராசர முனிவன் மக்களறுவரும் முன்னே நம்பெருமான் கட்டளையிட்டிருந்த வண்ணம் அப்பெருமானது சிபாதபுண்டரீகங்கட்கருச்சனைசெய்து துதித்துநின்றனர் அவர்களைக் கடைக்கணித்தருளிப் பெருமானருளிச்செய்த வேதசிவாகமமுடிவாகிய மெய்ப்பொருளை அவர்கட்குபதேசித்தருளினன். இதுநிற்க.

இந்திரனே தன்பகைவனாகிய சூரபதுமனை வேருடன்களைந்த வெற்றிவேற்கை விசாகப்பெருமானுக்குத் தன்னருமந்தப் பெண்ணமுதமாகிய தெய்வயானையாரையழைப்பித்துத்திருமணஞ்செய்விக்க வெண்ணித் தான்கொண்ட கருத்தைப்பிரமன்மால்முதலிய தேவர்கட்கறிவித்தான். அவர்களோநீகொண்டகருத்தேசாலச்சிறந்ததென்று மிகமகிழ்ச்சியுடன்பேசிக்கொண்டனர். அத்தருணத்தில் இந்திரன் தன்னருகேநின்ற தூதனைநோக்கி நீ விரைந்துசென்று மேருமலையை யடைந்து என் மனைவியைத்தெய்வயானையாருடனழைத்துவாவென்றுகட்டளையிட்டனன். அக்கட்டளையைத் தலைமேற்கொண்ட தூதனும் மேருமலையையடைந்து புலோமசையென்னும் சசியையடைந்து அவள் கணவனாகிய இந்திரன் சொன்னதை யெல்லாமெடுத்துச் சொல்லி விரைவாகப் புறப்பட வேண்டுமென்று விண்ணப்பித்து, சூரபதுமன் மாண்டதும் சயந்தன் முதலியோர் சிறைமீண்டதும் குமரநாயகன் திருப்பரங்குன்றத்தில் வந்திருப்பதும் தெரிவித்தான். அதைக்கேட்ட இந்திராணி சாலக்களிப்புடன் விரைந்து தன்மகளுடன் அயிராவதமாகியயானையின்மேலேறிக்கொண்டு திருப்பரங்குன்றமடைந்து இந்திரனிருக்கும் விடுதியையடைந்தனள். அவள் வரவையறிந்த தெய்வமாதர்கள் இந்திராணியை முறைமுறைவந்து வணங்கினர். பின்பு சயந்தனும் சேதாவைக் கண்டவேணயும் கன்றேபோல வந்துவணங்கினன். அவனைக்கண்ட இந்திராணியோ தன்மகனாகிய சயந்தனைக் கருணையால் தழுவிக்கொண்டு தன்கொங்கையிற்பால்சுரக்கத் தன்கவலையனைத்துநீங்கி வறியோனுக்குப் பெருநிதிகிடைத்தாற்போல மகிழ்வடைந்தனள். இந்திரன் தன்காதலியாகிய சசியைக்கண்டு மகிழ்ச்சியடைந்த பின்பு தன்மகளாகியதெய்வயானையாரைத் திருமணஞ்செய்விக்க நினைத்து ஒப்பாருமில்லாத வுத்தமனாகிய வெற்றிவேற்கைக்குமரநாயகன் சிபாத புண்டரீகங்களிற் பூமலர் கொண்டர்ச்சித்து மலைபோலும் தோளையுடைய அவுணர்களைக்களைந்து தேவர்கள் சிறைமீட்டனை! எனக்கும்வேண்டியசிறப்புஞ்செய்தனை? அதைமுழுதுநாடிச் செய்ந்நன்றியாகச் சிறியேன் செய்யத் தக்கதுமுண்டோ? முன்னே யான்பெற்றமாது இம்மலையினிடத்தே யமர்கின்றனள். அவளைத் திருமணஞ்செய்து கொடுத்து என்பிறவிப்பிணி நீங்கவெண்ணி யிருக்கின்றேனென்றான். இவ்வாறு சொல்லவே இந்திரனை எம்பெருமான் கடைக்கண்சாத்தியருளி அம்மாதும்எம்மைநோக்கிமுன்னே தவஞ்செய்திருக்கின்றாள். ஆகையால்நீ எண்ணியபடியே நாளையே திருமணஞ்செய்துகொள்கின்றேன்என்றான். அதைக்கேட்ட இந்திரன்சாலமகிழ்வெய்திஎம்பெருமானுடையதிருப்பாதமலர்களைத்தன்முடிமேற்கொண்டுநாங்கள் கிருதார்த்தரானோமென்றுசொல்லிவெளியேவந்துதூதரைநோக்கினின்றான். அத்தூதரும்அவனடியைத்தாழ்ந்துவணங்கினர். அவர்களை நோக்கி இந்திரன் சொல்லலா

யினன். நீங்கள் சென்றுமுசுகுந்தமகாராசன்முதலிய அரசர்கட்குந்தேவர்கட்கும்மற்றதிசையுளார்க்கும் முற்றத்துறந்தமுனிவர்கட்கும் எமதுபெருமானுகிய குமாரசற்குருமூர்த்தி திருமணநாளை யென்றுதெரிவிக்க வேண்டுமென்முன். அப்படியேதிருப்பரங்குன்றத்தில் எம்பெருமானுக்குத்திருமண நடக்கப்போகின்றதென்றுதெரிவிக்கின்ருேமென்று விடைபெற்றுச் சென்றனர். இதுநிற்க;

இந்திரனே தெய்வத்தச்சனை வருதல்வேண்டுமென்று நினைக்க அவனும் வந்துசேர்ந்து வணங்கிநின்ருன். அவனை நோக்கி நமது சாட்குணப் பிரமமாகிய குகப்பெருமானுக்கு நடத்தவேண்டியதற்குச் சிங்காரமானகல்யாணமண்டபம்வகுக்கவேண்டுமென்றுசொல்லிக்கொண்டான். அதைக்கேட்டதெய்வத்தச்சனே இந்திரன்சொல்லைத்தலைமேற்கொண்டுநவமணிமயமானமண்டபமொன்றமைத்துமேலைநிலமுற்றுறவிதானவகைபோக்கிமாலையொடுபல்கவரிதுகில்களொடுதூக்கிஅவ்வாலயத்தினடுவிற்சண்முகப்பெருமான் எழுந்தருளியிருக்கச் சிற்பநூல் முறைசொல்லிய வண்ணம் ஒருசிங்காதனத்தையு மமைத்ததன்றி விவாகமகோற்சவத்தில் வந்திருந்துதிருமால் அயன்முதலிய தேவரும் பிறரும் வீற்றிருக்க அனேக ஆதனங்களுமமைத்தான். அத்திருமண்டபத்தின் மருங்கே மலைபோன்ற கோபுரங்களைவகுத்தும் மணிமண்டபங்கள் பலவும் பலசபைகளையு நிருமித்துஞ் சோலைகள்வாவிகள்சுனைகள் உண்டாக்கியும் மற்றும் பலவுமுண்டாக்கி இந்திரனுக்குத்தெரிவித்தான். இந்திரனே தெய்வத்தச்சன் நிருமித்ததுகண்டு அத்திருமணத்திற்கு வேண்டுமுபகரணக்கள் எல்லாஞ் சுமைத்தான். இப்படி இந்திரன்சாட்குணப்பிரமமாகிய குகப்பெருமானதுதிருமணத்திற்காகிய உபகரணங்களெல்லாஞ் சித்தஞ்செய்து கொண்டிருக்க, அப்பெருமானது திருமணத்தைக் காணும்படி கருவூரிலிருந்துகொண்டு காவிரியாற்றுவளஞ்சால்கின்றசோணுட்டினையரசாண்டுவரும் முசுகுந்தமகாராசன்வருகின்ற தன்மைமையை யெடுத்துச் சொல்கின்றேன்.

அருவியாறு கல்லென்னு மோசையுடன் இழிகின்ற கயிலாயமலையில் முன்னளில் அம்மையு மப்பனுமாக அளவில்லாத மகிழ்ச்சியோ டிருப்பக்குரங்கினங்கள் வில்வமரத்தின் கிளைகளிலெல்லாம் ஏறிக்கொண்டிருந்தன. முழுதொருங்குணர்ந்தமுற்றத்துறந்த முனிவர்கள்போல அவ்வம்மையு மப்பனுமாகிய இருவர்மேலுமொன்று அளவில்லாத வில்வத்தழைகளைச்சொரிந்தது. அவ்வாறு சொரிந்தமைமையைக்கண்டு ஆளுடைய பிராட்டியாகிய பராபரை பொருமல் கோபிக்க அச்செய்கையை இறைவன்பார்த்து நம்மை அம்முசுவோவழிபாடுசெய்தது, அதை நீ கோபமுண்டாகிச் சீறுவது நன்றன்று. நீ கொண்ட கோபத்தைத் தணியவேண்டுமென்று சொல்ல, அதைக்கேட்ட சர்வலோகநாயகியாகிய ஆளுடையபிராட்டி அக்கோபந்தணிந்து நின்ருள். அம்மையப்ப ரிருவோரும் அவ்வில்வத் தழைகளை அதுவனையும் தம்மேல் தூர்த்த அம்முசிவினுக்கு மெய்யுணர்ச்சி யுணர்த்த அம்முசுவும் அக்கிளையினின்று மிழிந்து அம்மையப்ப ரிருவோரையு மன்புடன் தாழ்ந்து பொயயடியேன் பிழைபொறுத்தருள வேண்டுமென்று வணங்கியது, அதைக்கடைக்

கண்ஞேக்கி இறைவன் எம்மைவில்வங்களால் வழிபாடு செய்தனை, அவ்வாறு செய்தமுதிர்ந்தபூசனைக்குத் திருவுள்ளமகிழ்ந்தோம், உனக்குமும்மையுலகமும் புரக்கும் பெரும்பாக்கிய மளித்தோமென்று சொல்லதற் கிறைவனே! உம் மிருவோரையும் இங்கேகண்டு தெரிசித்துக் கொண்டிருக்கும் பெரும்பாக்கிய மிழந்து நான் செல்வவலைப் படுவேனேயாயின் 'செல்வமென்னும் அல்லலிற் பிழைத்தனை' என்ற ஆன்ஞேர் வாக்கின்படி துன்பந்துய்த்து வருந்துவே னே! யானென் செய்வேன்! எவ்வாறு பிழைப்பேனென்று விண்ணப்பித் தது. அதைத் திருச்செவி சாத்தியருளிய பரமசிவன் நீ சிறிதுமஞ்சவேண் டாம். நீநன்றுகருதியேகேட்டனை! நீ அக்கிலவுலகிற்சென்றுமீண்டுவரக்கடவா யென்றனன். அதைக்கேட்ட அம்முசுயான்பொய்ம்மறைந்த புலாலுடம்பைப் பாதுகாத்து நின்றிருவருட் செல்வத்தைப் பெற்றிருப்பதன்றிஇம்முகத்தோடு பிறந்திருக்கவும் வரந்தர வேண்டுமென்று விண்ணப்பிக்க; அவ்வாறே யாகுக வென்று திருவாய் மலர்ந்தருள நீர்காட்டினை யாண்டுவந்த அரிச்சந்திரனென் னும் சோழமகாராசன் மகனாய் முசுமுகத்துடன் பிறந்து கலைகளெல்லாம் பயின்றுலகமெல்லாம் பொதுக்கடிந்து செங்கோலோச்சித் தனக்குக் கருவூ ரைத்தனக்கிராசதானி யாக்கிக்கொண்டு சூரபதுமன் ஆணையைக் கடவாமலி ருந்தான். ஆயினும் அச்சூரபதுமன் படைத்திருந்த நிலவுலகத்தில்ஓர்பால் ஓரி ளம்பிறைவைகியதுபோலிருந்தனன். அம்முசுகுந்தன்முத்துக்குமரப்பெருமான் சூரபதுமனைக் கொன்றதுகேட்டுவப்படைந்து துன்ப நீங்கியருஞ் சிறைபெற்ற மேருமலையேபோல வன்மைபெற்று அரசாண்டு வந்தான். இவன் இவ்வா றிருக்கையில் இந்திரனனுப்பிய தூதர்கள்சென்று இந்திரதிருவனாகிய முசுகுந் தனை யடைந்து உனக்கு நண்புடையனாகிய இந்திரன் அனுப்பிய தூதர்கள் யாம்! நீ நீடூழிவாழக்கடவாய், நாங்கள் சுபச்செய்திசொல்ல இங்கே யடைந் தோம். அடாதகாரியங்களை யெல்லாம்செய்து தேவர்களையெல்லாம் படாத பாடெல்லாம் படுத்தியசூரபதுமனைக்கொன்றுகளைந்த வெற்றிவேற்பெருமான கிய முத்துக்குமரப்பெருமான் வடதிசையைநோக்கிப்புறப்பட்டுத்தென்றமிழ்க் கூடற்றிருநகர்க்குப் பச்சிமதிசையிலிருக்கும் திருப்பரங்குன்றத்தை யடைந் தனன். இந்திரனே அப்பெருமானுக்குத்தான் அருமருந்தாகப்பெற்றதெய்வயா னையாரைத்திருமணஞ்செய்விக்கப் போகின்ருன். அத்திருமணநடக்குந்தினமு நாளையேயாகும். அத்திருமணங்காண நீ உன் நால்வகைப் படையுடன் அத் திருப்பரங்குன்றடைய வேண்டுகின்ரேமென்று தெரிவித்தனர். அதைக்கே ட்ட முசுமுகுந்த மகாராசன் சாலவுமுள்ளக்கிளர்ச்சியடைந்து மயிர்க்குச் செறியத் தூதர்களைத்தழுவிச் சோபனம்பாடி யான் உங்களுக்குயாது தரப் போகின்றேன். என்பண்டாரத்திலுள்ள பொருளையெல்லாம் கொடுப்பது வோ, என்குடையும் கவரியும் கொடுப்பதுவோ, யானாண்டுவரும் அரசைக் கொடுப்பதுவோ! யாதுகொடுக்கவேண்டும் சொல்லவேண்டுமென, அதைக் கண்ட தூதுவர் அரசர்பெருமானே; தூதர்களாகவந்த நாங்கள் பெறும் பரிச ன்று, இதுவும்தகுதியாமோ! என்று சொல்லிவிட்டுத் தாம் பலவரசருக்கும் குகப்பெருமானுடைய திருமணஞ் சொல்லப்போயினர்: அவர்கள் அவ்வாறே

அரசர்களுக்குஞ் சொல்லிவிட்டு முற்றத்துறந்த முனிவர்களுக்குஞ் சொல்லி விட்டுத் திருப்பரங்குன்றமடைந்தனர். இவ்வாறிருக்க முசுகுந்தமகாராசனே வள்ளுவனைக் கூவியழைத்து நமது குகப்பெருமானது திருமணத்தைத் திருப்பரங்குன்றமடைந்து காண நமது நகரமாந்தரனைவரும் புறப்படும்படி பறை யறையென்று கட்டளையிட்டான். அந்நகரமாந்தரும் அங்ஙனமே புறப்பட்டனர். நால்வகைச்சேனையும் கோட்டைவாயிலைக்கடந்து சென்று அரசனோடும் புறப்பட்டு நடந்தன. அரசனும் தன்னகாத்திலுள்ளவர் யாவரும் புடைசூழ்ந்துவரத் திருப்பரங்குன்றமடைந்தனன். அரசர் பலரும் தூதரால் திருமணச் செய்தியைக்கேட்டுத் திருப்பரங்குன்றமடைந்தனர். இவ்வாறு வந்த அரசர்கள் இந்திரனைக்கண்டு அவனால் விடப்பட்ட விடுதிகளிலிருந்தனர். அரசமாதரும் இந்திராணியைக்கண்டுதெத்தங்கணவரிடமேபோய்ச்சேர்ந்தனர். பின்பு இந்திரனே பிரமனைநோக்கி யாவரும் வந்துசேர்ந்தனர்; இனி நம்பெருமானுக்குத் திருமணஞ்செய்யும் காலம் யாதென்று சொல்ல, இதுதான் சமயமென்று சண்முகங்கொண்ட குகப்பெருமானையணைந்து அப்பெருமானது சிபாதபுண்டரீகங்களைவணங்கித்துதித்துத் தேவரீர்தெய்வயானையாரைத் திருமணஞ்செய்துகொள்ள வெழுந்தருளவேண்டுமென்று விண்ணப்பிக்க, அதைத் திருச்செவிசாத்தியருளிய குகப்பெருமான் சிங்காதனத்தைவிட்டிழிந்து மயில் வாகனமேறினன். அப்போது பிரமன்மால்முதலிய தேவர்கள்பணிந்து மலர் மழைபொழிந்து அப்பெருமானோ டணுக்கராய்ச் சென்றனர். சந்திரன் சந்திரவட்டக்குடைநிழல் செய்தனன். சூரியன் கவரிவீசினன், வாயுவும் வருணனும் ஆலவட்டமெடுத்து வீசினர், தென்றிசைக்கோமான் வாட்படையேந்திச் சென்றனன். வேதியராரவாரித்தனர். வேதமுமாரவாரித்தன, அரமகளிர் மங்கலம்பாடினர். மாதவர்களாரவாரித்தனர். குறளராரவாரித்தனர். பேரிகை தண்ணுமை சல்லரி திமிலை குடமுழா காகளம் தொண்டகம் துடி துந்துபி வலம்புரிமுதலிய வாத்தியங்களுமாரவாரித்தன. வித்தியாதரரும் கந்திருவரும் வீணைவாசித்தனர். ஊர்வசி திலோத்தமை அரம்பை மேனகைமுதலியதெய்வ மாதர்கள் பாடிநடனஞ்செய்தனர். இவ்வாறு அவர்கள் வீதியிடம்பெறுமல் நெருக்குண்டுவரக் குகப்பெருமான் திருமணக்கோலமாகப் புறப்பட்டுத் தான் அம்மணஞ்செய்ய நியமித்த இடத்திற்சேர்ந்தனன்.

முத்துக்குமரப்பெருமான்மயிலினின்றுமிழிந்து வேள்விசெய்கிறசாலையிற் சென்றனன். அரமகளிர்புடைசூழ இந்திராணி அவனைத் தொழுதடைந்துபசுவின்பால்கொண்டு பாததாமரைகட்கு அபிடேகஞ்செய்து மலர்மாலை சூட்டிப் பணிந்து தீபங்காட்டி மும்முறை சுற்றிவந்து தன் மந்திரநாடிச்சென்றாள். அவள் சென்றபின்பு எம்பெருமானே தன்பக்கமாய் பிரமன்மாலிந்திரன் முதலிய தேவர்கள் நெருங்கிவர அம்மணிமண்டபத்தில் எழுந்தருளித் தனக்கென்றே இந்திரனிட்டிருந்த சிங்காதனத்தில் வீற்றிருந்தான். இறைவன் இவ்வாறு வீற்றிருந்தபின்பு தேவர்களும் இலக்கத் தொன்பதின்மரும் இறைவனேவலால் தத்தமக்கேற்ற பீடத்திலிருந்தனர். அந்தச்சமயத்தில் நிலவுலகத்தை யாளும்முசுகுந்தமகாராசன்முதலியமன்னர்கள்முறைமுறையாகவந்து

வணங்கித் தத்தமக்கிட்ட ஆதனங்களில் அமர்ந்திருந்தனர். அவர்கட்குக் கரு ணைபாலித்துக் கருணைக் கடலாகிய முத்துக்குமரப் பெருமானிருக்க, உலக ன்னை யொருபாகத்தில் விளங்கச் சாரதப் படைசூழச் சந்திர சேகரனாகிய பரமசிவன் வான்வழியே யெழுந்தருளினன். அம்மையு மப்பனு மெழுந்தருளி யதுகண்ட பரம்பரனாகிய குமரநாயக னன்பினால் விரைந்தெழுந்து கள்ளமா மாயப் பிரானே முதலிய தேவரும் முற்றத்துறந்த முனிவரு மெம்மையா ளுடையா னிங்கெழுந்தருளினான். இனி நாமுய்ந்தோ முய்ந்தோமென்றுரை த்துக்கொண் டெழுந்து தொழுது நின்றனர்.

அப்போது ஆதிபகவன் தாமேறிவந்த விமானத்தினின்று மிழிந்து பூத கணங்களுடன் அத்திருமண மண்டபத்திற் கெழுந்தருளவே, சண்முகங்கொ ண்ட சரவணன் அப்பெருமானுடைய எவ்வுயிர்க்கும் போகமாம் பூங்கழல்க ளைப் போற்றித்துதித்து அம்மாலயனுங்காணாத சிபாதபுண்டரீகத்தைத் தன் முடிமேற் சூடினான். அதைக்கண்ட அம்மையப்பனும்உலகன்னையோடும் கந்த னை யன்பொடுமோர்பினிடத்தேதழுவிக்கொண்டுச்சிமோந்து முத்தமிட்டனன். பின்பு மாலு மயனும் இந்திரனும் மற்றதேவரும் முற்றத்துறந்த முனிவரும் மும்முறைவலம்வந்து பணிந்து எங்கள் குறை யனைத்து நீக்கிய கோமானே! யென்று வேதமந்திரங்களால் துதித்தனர். எம்பெருமானோ உலகன்னை யுடன் தன்னருமந்தமான காதற்புதல்வனாகிய முத்துக்குமரப் பெருமானைத் திருமணமண்டபத்திற் கழைத்துக்கொண்டு சென்றான். அங்கே எம்பெரு மானது திருவருளால் தெய்வத்தன்மை பொருந்திய சிங்காதனமொன்று வர அவ்வாதனத்தின்மேல் இறைவியுடன் வீற்றிருந்தருளிப் பின்பு முத்துக் குமரப்பெருமானைத் தங்கள்நடுவேயிருக்கச் சோமாஸ்கந்தமாக வெழுந்தருளி ருந்தனர். அப்போது தாமரைத்தவிசுகந்த பிரமன் தாணுவாகிய பரமசிவனை நோக்கி முன்னொருநாள் நாங்கள் வருந்துவதறிந்து இக் குமரநாயகனை யசு ரப்படை தடியும்படி விடுத்தாய்! அவ்வாறே யவுணராவாரை வீட்டி நே ற்றுச் சயந்தன்முதலிய தேவரையும் சிறையினின்றும் விடுவித்தனை. முடிவில் லாத இரக்கத்துடன் எவ்வகையாருயிரையுமளித்த இமய முதல்வியுட னெழு ந்தருளி இங்கே எங்களுக்குத் தரிசனம் பாலித்தீரென்றால் எங்கள் செயல் சிறப்படைந்தது போலுமென்று சொல்ல, அதைக்கேட்ட பரம்பரன் இன்று நன்றாக மகிழ்வடைந்து நாமு மித்திருமணக்கோலங் காண்பதற்கே யுமையோடு மிங்கே எழுந்தருளினோம்! இனிச் செயத்தக்க காரியங்களைச் செய்யவேண்டுமென்றான். பரமனும் இந்திரனைநோக்கி வேதமுறையால் முத் துக்குமரப்பெருமான் திருமணஞ்செய்தருளத் தெய்வயானையாரை இங்கே யழைத்துக்கொண்டு வரவேண்டுமென்றான். அத்தருணத்தில் அதற் கிசை வுகொண்டு மாதர்களிருக்குமிட மணைந்து எங்களையெல்லாங் காத்தருளும் அம்மே வருகவென் றழைத்தான். தெய்வயானையாரும் புறப்பட்டு சேடியர் கள் புடைசூழ வன்னம்போல நடந்து யாவருமகிழத் திருமகளு நாமகளு மேத்த எமது முத்துக்குமரப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருமணச் சாலையை யடைந்தான். உலகமுழுது மீன்ற முதல்வியாகிய உமை யன்னை

யும்அத்தெய்வயானையாரைமுத்துக்குமாரப்பெருமானிருக்குமிடத்திருத்தி அவ் விருவரும்ஆதனத்திலிருந்தனர். அதைக்கண்ட தேவர்கோமானாகிய இந்திரன் அக்கோலங்கண்டு மகிழ்ந்து கைதொழுது மகிழ இந்திராணியும் மஞ்சனநீரு மற்ற வேண்டு முபகரணங்களுங் கொண்டுவரமுத்துக்குமாரப்பெருமான்சீபாத தாமரையை இந்திரன்பற்றி விளக்கி மணமலர்சூட்டிப் பூசனைசெய்து தெய்வ யானையாரையும்அம்முத்துக்குமாரப்பெருமான்திருக்கரத்திட்டுத்தாரைவார்த்த ளித்தான். அதைக்குமரநாயகனேற்று அத்தெய்வயானையார் திருக்கழுத்தில் மங்கலநாண்சூட்டி மாலையையுமணிந்தான். அத்தருணத்தில் முப்பழம்கருப்பி ரதம்செந்தேன் பசுவின்பால்இவற்றைஅப்பெருமான் நுகரும்படி இந்திரன்செய் வித்தனன்; அப்போதுமத்தளம்தக்கைவலம்புரிபேரிகைமுதலியவாத்தியங்களு முழங்கினஅக்குகப்பெருமானைத்தேவர்களும்வந்தனைசெய்தனர். குகப்பெருமா னேதெய்வயானையார்கையைப்பற்றிஅக்கினியை வலம்வந்துஅம்மியில்அன்னை யின்காலைவைத்து அருந்ததியைக்கண்டு எல்லாவுலகங்கட்குமுதல்வராகியஅம் மையையும்அப்பனையும்பணிந்துநின்றனன். அம்மையுமப்பனும்குகனையும்குஞ் சரியையும்அன்போடணைத்தருள்செய்துமுருகனைநோக்கி இனிஉனக்கெம்முத ன்மையையளித்தோமென்றருளிச்செய்ய, அத்திருமணச்சாலையிலிருந்தபிரம ன்மாலிந்திரன்முதலியதேவரும்பிறரும்யாவரும்அப்பெருமான் மலரடி வணங் கினர். பின்பு முத்துக்குமாரப் பெருமானும் தெய்வயானையாரும் தமது திரு மாளிகையைநோக்கிப் பற்பல மங்களவாத்திய முழங்க வெழுந்தருளினர். பிர மன்மாலறியாப் பெற்றியோனாகிய சிவபெருமானும் உலகன்னையும் திரு க்கயிலையையடைந்தனர். பின்குமரநாயகனும் குஞ்சரியும் எழுந்தருளி இன்ப நுகர்ந்துஇனித்திருக்கஇந்திரன் தன்பரிசனருடன்தன்னிருக்கையையடைந்து முசுகுந்தமகாராசன்முதலிய அரசர்களுக்குக் காமதேனுவின் பயனையளித்து ஆடையாபரண மணிப்பூண்முதலன வளித்து அவரவர் தஞ்சேனைக் கடலு டன்செல்லக் கட்டளையிட, அவர்களும் விடைபெற்று நால்வகையாகிய சே னைக்கடல் புடைசூழத் தத்தம் நாட்டிற்குச் சென்றனர். இந்திரனே அவர் களையெல்லாம் தத்தநாட்டிற் கனுப்பிவிட்டுத் தன்மகள் குமரநாயகனோ டெ ழுந்தருளியபின் இந்திராணியுடன் பெரும்போக மனுபவித்திருந்தனன். இவ்வாறு சிலநாள்கழிந்தன; இதுநிற்க.

தெய்வயானைத் திருமணப்படலம்.

முற்றிற்று.

---

## விண்குடியேற்றுப்படலம்.

---

குமரநாயகனே இந்திரன் குறைநீங்க வெண்ணங் கொண்டெழுந்தருள இலக்கத்தொன்பதின்மரும் பூதவீரரும் தெய்வநாயகியாரையும் குகப்பெருமா னையும் வணங்கிநின்றனர். பூதவீரர் இளையபிள்ளையாரெழுந்தருள்வதுகண்டார வாரித்ததுகேட்டுப் பிரமன்மாலிந்திரன்முதலிய தேவர்களும் முற்றத்துறந்த

முனிவர்களும்யாவரும்விரைந்துசென்றனர். அப்பெருமானை வணங்கிநிற்கவாயு தேவனும்வணங்கிநின்றான். அவனைநோக்கிமதுதேரைநடத்தவேண்டுமென்று கட்டளையிட அவனுமனோவேகத்தினும் விரைந்துசெல்லும் அத்தேரைக்கொண்டுவந்துநிறுத்த அதன்மேலெழுந்தருளினான். அத்தேரின்மேல்தெய்வநாயகியாருடன்குகப்பெருமான் கவுரியும்கண்ணுதற்பெருமான்போலு மெழுந்தருளியதுகண்டு தேவர்களும் மலர்மாரிபெய்தனர். தன்னைத்தேவர்களெல்லாம் ஒவ்வொருவராகவந்து சேவடியில்விழ அவர்கள் முடிமேல் தன்செய்யவடிமலர் சூட்டிப் பின்னர்ப் பிரமன்மாலிந்திரன்முதலிய தேவர்களை நோக்கி நீங்களும் உங்கள் வாகனங்கள் மேலேறிவாருங்கோளென்று கட்டளையிட, நான்முகன் அன்னத்தின்மேலும் கள்ளமாமாயப்பிரான் கருடன்மேலும் இந்திரன் ஐராவதத்தின்மேலும் மற்றதேவர்களு முழுதொருங்குணர்ந்த முனிவர்களும் தத்தமூர்திகள்மேலு மேறிச்சென்றனர். நமது பெருமான் இந்திரலோகத்தைநாடிச் செல்கின்றானென் றுணர்ந்துகொண்டு பாரிடவீரரனைவரும் குடமுழா புள்ளாங்குழல்கொக்கரைமத்தளமுதலியவாத்தியங்களைமுழக்கினார்கள். பின்பு பிள்ளையாரோஇந்திரலோகத்தை நாடி ஒருகணத்திற்றிருப்பரங்குன்றத்தினின்றும்அமராவதியையணைந்தான். அந்நகரமோசூரபதுமனாலேவப்பட்டபானுகோபனாலழிந்ததென இந்திரன் கொண்ட கருத்தையறிந்து அச்செல்வமிழந்து கிடக்கின்ற அவ்வமராவதியைமறுபடியும் புதுப்பிக்கநினைந்து தெய்வத்தச்சன் வரக் கருதினான். அப்பெருமான் எண்ணியவெண்ணமறிந்த தெய்வத்தச்சன் விரைவில்வந்து வணங்கி அவ்வமராவதி முன்போலிருக்க மனத்தானிருமித்து மீண்டும்அம்மாநகரமுடிந்ததைத்தெரிவித்தான். அந்நகரைக்கண்டதைஇந்திரன் கண்டுஅத்தெய்வத்தச்சனை மார்போடிறுகத்தழுவிக்கொண்டுனக்குநிகராவார் யாரென்று புகழ்ந்தான். குகப்பெருமானோ தன்னைவணங்கிநின்றதெய்வத்தச்சனுக்குக் கண்ணருள்செய்து கணங்களோடு மெழுந்தருளினான். இந்திரனோ அரம்பையரோடு மொருபொன்னாலாகிய விமானத்தில் ஏறி இந்திராணி மாளிகை நாடிவந்தான். குகப்பெருமானோஅவ்வமராவதியின்கடைப்புறஞ்செல்லப் பிரமன்மால்முதலிய தேவர்களும் தத்தம் விமானத்தைவிட்டிழிந்தனர். அதன்பின்னர்இளையபிள்ளையாரோ தன்னைத் தேவர்களெல்லாம்சூழ்ந்துவரத் தெய்வயானையாருடன் தன்தேரைவிட்டிழிந்து சுதர்மமென்னும் பேரவை நாடிவந்தான். அவ்வாறு அங்கே யெழுந்தருளித் தேவர்களை நோக்கிநீங்கள் இந்நகரினுக்கரசனாக இந்திரனைமுடிசூட்டுங்கோளென்று கட்டளையிட, தேவர்களும் அதற்குரிய பொருள்களையெல்லாம்சேகரித்து அவ்விந்திரனை முடிசூட்டினர். நமது சண்முகங்கொண்ட முத்துக்குமரப்பெருமானும் இந்திரனருகே யணைந்து நீ இன்றுபோல் அரசாண்டிருவென்று கட்டளையிட்டான். இவ்வாறு இந்திரனுக் கருள்செய்து மற்றதேவர்களையும் அவரவர் இருக்கைக் கனுப்பிவிட்டுத்தான் தெய்வகுஞ்சரியாருடனே தம்மிருக்கையடைந்தனன். இலக்கத்தொன்பதின்மரும் பூதவீரரும் அங்ஙனமே குகப்பெருமா னிருக்கையை யடைந்துஅத்திருவாயிலைக் காவல்கொண்டிருந்தனர்.இவ்வாறுமுத்துக்குமரப்பெருமான் எழுந்தருளியிருக்கையில் பிரமனுமாலும் முறையே சத்தியலோக

மும் வைகுந்தவளநாடுமெடைந்து இன்பமார்ந்தனர். பின்னர்த் தேவர்சேனுதி பதியாகியமுத்துக்குமாரப்பெருமானேவீரவாகுதேவர்தமதுதேனைச்செலுத்த மற்றவீரரும்பூதரும் புடைசூழ்ந்துவரக் கயிலைவெற்பையடைந்து தேனைவிட்டிழிந்து முக்கட்பெருமான் முளரியடிதொழுதுவணங்கி விடைபெற்றுக் கந்த வெற்பையணுகி இலக்கத்தொன்பதின்மரும் பூதவீரரும் தம்பணியினிற்பத் தெய்வகுஞ்சரியோடு மணிப்பீடத்தி லெழுந்தருளினன்.

துய்யதோர் மறைகளாலுந் துதித்திடற்கரிய செவ்வேள்
செய்யபேரடிகள் வாழ்க சேவலுமயிலும் வாழ்க
வெய்யசூர் மார்புகீண்ட வேற்படைவாழ்க வன்னன்
பொய்யில்சீ ரடியார்வாழ்க வாழ்கவிப்புவன மெல்லாம்.

விண்குடியேற்றுப்படலம்

முற்றிற்று.

---

## இந்திரபுரிப்படலம்.

காசினி வியத்தகு கந்த வெற்பிடைத்
தேசுடை முருகவேள் சேர்ந்த செய்கையைப்
பேசின னிங்கினிப் பிறங்கு பொன்னகர்
வாசவ னியற்கையு மற்றுங் கூறுகேன்.

அவுணர் பூண்டறக் களைகளைந்தெறிந்த வெற்றி வேலாயுதமேந்திய முருகப்பெருமான் பூரணகடாட்சத்தினல் அரசுரிமையைப்பெற்று முப்பத்துமுக்கோடிதேவர்கள் எல்லாப் பணிவிடைகளையும்செய்து போற்றிவரவும் நாற்பத்தெண்ணுயிரம் முனிவர் ஆசிகளைச்சொல்லித் துதித்து நெருங்கியிருக்கவும் கின்னரர் கிம்புருடர் சித்தர் வித்தியாதரர் மங்களங்கள் பாடியேத்தவும் சகலசாத்திரபண்டிதனுய்த் திரிகாலவர்த்தமானங்களை உள்ளங்கை நெல்லிக்கனியேபோல் உணரவல்ல மெய்யுணர்ச்சியைப் பெற்றுக் குலகுருவாகவிருக்கின்ற பிருகற்பதி அருகிலிருக்கின்ற ஆதனத்தில் வீற்றிருந்து மந்திராலோசனைகளைச்சொல்லிவரவும் அரம்பை ஊர்வசி திலோத்தமை மேனகைமுதலாகிய அரமகளிர் அபிநயங்களைக் காட்டிச் சதிமுறையிற் பாதங்களிற்கட்டியிருக்கின்ற சிலம்புகள் கலகலவென்றொலிக்கப் பெயர்த்துப்பெயர்த்து வைத்து மயிலையொப்பப் பாதநாட்டியவியல்பின்நடித்தும் குயில்கள்நாணும்படிசிரவணனந்தமாகப்பாடவும் கின்னர காந்தருவர் தேவயாழ்களைமீட்டி மதுரமாகிய கீர்த்தனங்களை வாசிக்கவும் அமரர்பலர் பயபத்தியுடன் அருகிலிருந்து வெண்சாமரைகளைவீசவும் அருகுகளைப்பிடிக்கவும் ஆலவட்டம்வீசவும் கட்டியக்காரர் எச்சரிக்கைசொல்லவும் பட்டுவர்புகழவும் மற்ற அரசச்சிறப்புகளனைத்தும் குறைவறநடந்துவருகையில் தேவதுந்துமிமுதலியவாத்தியங்கள் தாம்தாமென முழங்க நவரத்தினகசிதமாகவிளங்கும் காம்புகளினுச்சியில் வெண்பட்டினு

லும்ஆணிமுத்துகளினுலும்அலங்கரித்திருக்கின்ற பூச்சக்கரதவளக்குடைகளை இருபக்கங்களினும் சந்திர சூரியனையொப்பக் கவிக்கவும் அவற்றின் கீழ்ப் புறத்தில் நவரத்தினமயமாக அலங்கரித்து விளங்குகின்ற சிங்காதனத்திலெழுந் தருளி மும்மையுலகத்தும் தன் ஆணைகளைச்செலுத்திப் பாதுகாத் தரசுசெலு த்திவரும் இந்திரன் ஒருநாள் சடுதியில் மனத்தின்மிக்க துயரமெழுந்தமையால் இதனைநினைக்கலாயினன். மும்மையுலகத்துக்குமிறைவனாக வாழ்ந்திருக்கின்ற யான் பகைவராகவிருக்கின்ற சூரபதுமனுக் கடிமைப்பட்டு அவன்கட்டளைக் கடங்கித் தகாதனவாகிய மிக்க கொடுந்தொழில்களை வெகுகாலஞ்செய்து அளவற்ற யுகங்களைக்கழித்தேனே! இதனிடையிற் பாதகராகிய அவுணரால் நே ர்ந்தவருத்தங்களையும் இடையூறுகளையுஞ்சொல்லி முடியுமோ! பிள்ளையொரு பக்கம், மனைவியொருபக்கம், நானொருபக்கமாயிரிந் தொதுங்கிப்படாதபாடுகளை யனுபவித்தேன், அவற்றை இக்காலத்தில் நினைப்பினும் மனம்நடுங்குகின்றதே; ஐயையோ! இவ்வகையான துன்பங்களிற்பட்டவர்க ளொருவருமிருக்கமாட் டார்களெனப் பலபலவெண்ணியெண்ணித் துன்பமிக்க மனமுடையானாய்த் தன்செல்வத்தை வெறுத்துக்கொண்டு இந்திராணியின் பொற்கலசங்களையொ த்த கொங்கைகளை யிறுகப்புல்லியணையும் சுகத்தையுமறந்துகயேந்திரச்செல்வ வளங்களையுஞ்சற்றும்மதியாமல் அரசுசெலுத்துவதையுமிகழ்ந்து எக்காலத்தும் சலனமில்லாமல் நன்னெறிகளை யடைவிக்கும் சிறந்த தவங்களைச்செய்து சிவ பெருமானது பரிபூரணகடாட்சம்பெற்று நித்தியமாகிய மோட்சசாம்பிராச்சிய த்தையடைந்து பேரானந்த மனுபவித்திருப்பதே யொழிய வேறுநலமொன்றி ல்லையென்றே மதித்து அவ்வாறே துறவறத்தை மேற்கொண்டு வனத்திற் போய்த் தவங்களைச்செய்யத் துணிவுகொண்ட இதுநிற்க; இப்படிஇந்திரன் உத்தேசித்த துணிவை ஆசிரியனாகவும் மந்திரியாகவும் புரோகிதனாகவும் தலை வனாகவுமிருந்து தேவர்கள் சவுக்கியங்களுக்குவேண்டும் உதவிகளைத்தேடிக் காத்துவரும் பிருகற்பதி தெரிந்தமாத்திரத்திற் றிடுக்கிட்டுமோசநேர்ந்தது; இவன்கொண்ட கருத்தின்படி வெளிப்படுவானாயின் தெய்வலோகத்துக் காவ லில்லாமல் தலைவிரிகோலமாய் அலைந்துபகைவருக்கிடமுண்டாய்விடும்; ஆத லால் இனித்தாமதப்படாமல் இதற்கொரு நிவாரணத்தைத் தேடவேண்டு மென்றேகருதி ஒருதந்திரத்தை மனத்திற்றீர்மானித்துக் கொண்டவனாய் இந் திரனுக்கருகில் நெருங்கி இதனைப் பேசத்தொடங்கினன்.

மலைகளைச் சிறகைக்கண்டித்து உலகங்களை வருத்தமின்றிக் காத்து வரும் வச்சிரதரனாகிய இந்திரனேகேள்! சிவகாருண்ணியம் நடுவுநிலைமைசற் கருமங்கள்முதலிய நன்னெறிகளெவ்வளவு மற்ற கொடியபாதகனாக விருந்து கொடுங்கோல் செலுத்திவந்த சூரபதுமனாலடைந்த துயரத்தையும் அபகீர்த் தியையும் பெரிதாகவெண்ணி நூறு அசுவமேதகங்களையுங் குறைவறச்செய்து முடித்தபயனாற் சிவபெருமான் கடாட்சித்திருக்கின்ற சிறப்பையுடைய இவ் வரசுரிமையையும் மும்மையுலகையு மாண்டுவரும் சாம்பிராச்சியங்களையும் வெறுத்து ஏதோசில வெண்ணங்களைக்கொண் டிருக்கின்றனைபோற் காணு கின்றதே; ஐயையோ! உன்னறிவினையென்ன சொல்லுவேன்! இவ்வகையாகிய

பெருவாழ்வை நீங்கி இனிமேன் முக்கியமாகிய தவ விரதங்களைச்செய்து நீ பெறவிருக்கும் பயன் இன்னதெனத் தோன்றவில்லை, வெய்யில் குளிர் பனி இவற்றினாலும் பலபல இடையூறுகளினாலும் அல்லலடைந்து தேகமும் மனமும் வருந்திச்சிறந்தநோன்புகளைச் செய்தவரன்றோ மேம்பாடாகப் புகழவல்ல இப்பெருவாழ்வைப் பெற்றுக்களிப்பர்; இஃது உன்னளவேயன்று, மதித்துப் பார்க்குமிடத்தில் இம்மும்மையுலகங்களினுஞ்சாதாரணமாகநடந்துவரு மியற்கையாகும்; பலதுன்பங்கள்பொறுத்துஇடைவிடாது அருந்தவஞ்செய்துவரும் பேற்றினைவாய்ந்த முனிவர்களினும் சிவபூசனைமுதலிய நற்கருமங்களை நெஞ்சொருமைப் படநடாத்திவந்த மகிமையினாற் பொன்னுலகவாழ்வைப்பெற்றுத் தேவனைப் புகழக்களித்திருக்கின்ற சொர்க்கவாசிகளினும்கடல்புடைசூழ்ந்த காசினியிலிருக்கின்றபுண்ணியசிலர்களினும் பாதலவெல்லையில்வாழுமனந்தன் முதலிய நாகராசர்களினும் சிருட்டி திதி சங்காரமென்னும் முத்தொழில்களை நடாத்திவரும் மகிமையையுடைய மும்மைப் பெருந்தேவரினும் பொற்பிதிர்வைப்போல அழகிய தேமல்பரந்து தங்கக்கலசத்தையொப்பப் பூரித்து விம்மித்ததும்பி நீலரத்தினத்துண்டத்தினும் சுந்தரமுள்ள மணிக்காம்புகளைப் பெற்றிருக்கின்ற கொங்கைகளைப்படைத்து மிக்க அழகுவாய்க்கப் பெற்றுக் கலாபமயிலேபோன்ற சாயலையும் அன்னமேபோலு மெல்லியநடையினையும் கிள்ளையையும் குயிலையும் யாழினோசையும்பழித்துத் தேவாமுதத்தினும் மதுரமாகக்கொஞ்சி வார்த்தையாடும் தருணமங்கையரைக்கலந்து பேரானந்தம் பெறச்செய்யவல்லஇன்பரசங்கைத்துய்த்திருப்பவர்களொருவருண்டோ? முற்பகல் மனமொருமித்துச்செய்த தீயகருமங்களுக்குத் தக்க தண்டனைகளைச் சிவபெருமான் கட்டளையின்படி யனுபவித்துச் சூரியன்முன் பனிப்படலமே போற் கழித்துவிட்ட காரியங்களை யிகழ்ச்சியாகநினைந்து கவலையிற்பட்டுழலு மனத்தனாய் அரிதிற் கிடைத்திருக்கின்ற இச்சிறந்த பெருஞ்செல்வத்தை யூனமென்றெண்ணித் துறந்துவறியனாய்த் தனிமையிற்றவங்களைச்செய் துழலுங்காலத்தில் நீபெறவிருக்கின்ற கொடியவருத்தங்களுக்கொரு அளவையுமுண்டோ; கோடைகாலத்திற்றோற்றுங் கானல் நீரைக்கடக்கவறியாதுபயமிகுதிகொண்டு வாடுகின்றவன் ஆழ்கடலில் விழுந்து நிலைபெறுமலைந்து வாடநினைக்கக்கூடுமோ? ஊணுறக்கமின்றிப் பனி வெயில் குளிர் மழைமுதலிய கொடுமையிற் படச்சரீரம் வாடிவருந்திச் சத்தம் பரிசம் உருவம் இரதம் கந்தமெனச் சொல்லப்படுகின்ற பஞ்சேந்திரியவிடயங்களில் ஐம்புலன்கள் மீறிச் செல்லவொட்டாமலடக்கிக் காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியமென்னும் அறுபகையினைப்போக்கிச் சித்தத்தைசிவன்பால்வைத்து யோகசாதனைகளைச் செய்யவல்ல மகத்துக்கள் பெறும்பயனை மும்மையுலகாளும் செல்வத்தைப்பெற்றிருக்கும் சதமகனே நினைக்குமிடத்திற் போகமல்லது வேறுமுண்டோ; என்சொல்லைக் கடைப்பிடியாக நம்பு, இஃதல்லாமலும் பொறிபுலன்களையடக்கிஅவைகளைப்போக்கிச் செய்கைகளழிந்துவினைக்கீடாகிய தேகவாதனையை நீக்கி நித்தியத்தைத்தரவல்ல பேரின்பவீடொன்றிருக்கின்ற தென்றுஞ்சிலர் சொல்லுவர். அதனைக்கண்டவர்கள் காட்டவல்லரோ ; இம்மை

யிலே உள்ளங்கைநெல்லிக்கனிபோலக்கண்கூடாகவேஅநுபவிக்கும்போகங்க ளையே உண்மையாக உலகமானது சாதாரணமாய்க் கூறிக்கொள்ள விரும்பு கின்றது. ஆதலாற் பொய்மையாகிய கானலை மதுரமிகுந்த தெளிவுள்ள நீரென்றேகருதி அதிலிச்சைகொண்டு கையி லகப்பட்டிருக்கின்ற சிறந்த வமுதத்தைக் கமரிற்கவிழ்த்துவிட்டு மோசம்போவாரையொத்துச் சிலர் நித் தியமெனச் சொல்லும் வீடுபேற்றைப்பெற நினைந்து இம்மையிற்கண்ட பல னுகக் கிடைத்திருக்கின்ற பயனை யிழந்துபோம்படி சம்மதித்திருக்கின்ற உன் னெண்ணம் மிகநேத்தியாக விருக்கின்றது. தேவராசனே தன்மனத்துக் கினிய சுந்தரமுள்ள மடந்தையரை அம்சதூளிகாசயனத்திற் சரசசல்லாபங் களினுற் சுரதலீலைகளைச் செய்து பெறும்பேரின்பமே மோட்சசாதனமாம். அவர்களுடன்கலந்து வாழ்வதே இல்வாழ்க்கையாம்; நடைநொடிபாவனைக ளிற் குறைவின்றிக்கற்புத்தன்மையைப் பெற்றிருக்கின்ற கன்னிகையொருத்தி கிடைக்கப்பெறுதலேசெல்வங்களிற்சிறந்ததாம், அவ்வகைத்தருண மங்கையர் தங்கக்கலசத்தையொத்தவனப்புள்ள கொங்கைகள் மார்பிலிறுகக்கட்டி யணை ந்து இன்பநலம் பெறுதமையினும் மிகக் கொடிய தரித்திரம் வேறுண்டோ; மறுவற்ற சோடசகலைகளை வாய்ந்த பூரணசந்திரரோதயத்தைப் பழித்துவிள ங்கும் அழகியமுகமலர்களைப் படைத்த மடமங்கையர் புணர்ச்சியைச்சிலர் சிற்றின்பமென்றே பேசி யிகழ்கின்றனர். அதன்சிறப்புத்தெரிந்தால் அதைப் பேரின்பமாகவேயெண்ணி, எப்போதும் பிரியாதாராய்க் கூடியிருப்பர். மேற் குறித்தமேம்பட்டவின்பம்முன்னைநாளிற்செய்த தவப்பேற்றினுற்கிடைக்கவல் லதல்லதுநினைந்தகாலத்து, இலேசாகப்பெறவும்போகுமோ, மேகவாகனனே! அதன் பெருமிதங்களைச் செவ்வையாகக்கேட்க மனமிருக்குமாயின் சொல்ல வல்லேனென்று தனக்கரணுகவிருக்கின்ற ஆசிரியன் குறித்தவாக்கியங்க ளைச் செவிகளுக்கமுததாரையைப் போற்கேட்டவுடன் வச்சிராயுதபாணியா கிய இந்திரனுக்குச் சரீரம் பூரித்து நகைமுகமுடையானுய் ஓமக்கனலிற்பட்ட வெண்ணெயைப்போல மனங்கரைந்து காமக்கவலையின் முயற்சிகொண்டவ னுய்க் குலகுருவைச் சேவித்து மனக்கவலையைப்போக்கி நற்காட்சியைப்பெ றச்செய்யத்தேவாமுதத்தைப்போல் அருகிலிடைவிடாமலிருக்கின்ற குருநாத னே தேவரீர்கருணையால் இப்போது போதித்தமங்கையர் சிறப்புகளையும் குணதிசயங்களையும் பேரானந்தத்தைத் தரும் இன்பநலத்தையும் அடியேனு க்கிதுகாறும் தெருட்டாமலிருந்த காரணமென்னே வெனத் தேகமுழுதும் விழிகளைப்படைத்திருக்கின்ற சிற்றறிவையுடைய மகவான் வினவியபோது இவன் மனத்திற்கொண்டிருந்த கருத்தழிந்து மருண்டு மோகவாதனையி லகப் பட்டுக்கொண்டானெனத் தெரிந்துகொண்டானுய் வேதாகமபுராணசாத்திர வகைகளைப் பூரணமாகப் படித்து அவற்றின் நிச்சயங்களைத் தெரிந்திருக்கி ன்ற பண்டிதனுகிய பிருகற்பதி மும்மையுலகத்துக்கு மரசனைப்பார்த்து அரச னே! நீவீடுபேற்றை எளிதிற்றரும் சிறப்பையுடைய மங்கையர் பெருமிதங்களை யும் அவர்களாற்பெறவிருக்கின்ற இன்பநலத்தையும் தெரிக்கும் மதனசாத்தி ரத்தின்நிச்சயப்பொருள்களையும் மேம்பட்டதாகச் சிந்தித்தறியும் ஆசைப்பெரு

க்கேயில்லாதபருவத்தில் மேலையோராகவிருப்பவர் போதிக்கமாட்டார்கள். அவ்வாறே ஐயனே! உனக்கிந்நாள்வரையில் அனுக்கிரகஞ் செய்யாமற் ருழ்த்தேன், இதுதருணமாகத்தெரிந்தமையால் சந்திரனைக்குடையாகப் படைத்திருக்கின்ற மன்மதன் சாத்திரமாகிய கடலை விசாலமாகியகூரியவறிவால் அளந்து ஆராய்ந்து நிச்சயித்திருக்கும் உண்மைகளனைத்தையும் சொல்லுவேன். பாராமுகமின்றி மனத்தையும் செவிகளையு மொருமித்துக்கேள்; முன்னாளில் இந்நூலைத் திருக்கயிலாயமலையைக் காவல்கொண்டிருக்கும் பெருமையினையுடைய நந்திபெருமான் கணக்கிறந்த விரிவாயருளினன். சிலகாலத்திற்குப் பின்பு மேலையோரதை நூற்றெட்டுச் சாகைகளாகக்குறுக்கினர். இக்காலத்திற் பத்துப்பிரகாரணங்களக ஏற்படுத்தி யிருக்கின்றது. பூர்வாசிரியர்கள் இதற்குரிய சமையங்கள் அறுவகையாகப் பிரித்தனர். அவைகளில் அமுதத்தினுமினிய இன்பத்தை யனுபவிக்க விருக்கின்ற ஆன்மாக்களுக்கு இம்மையில் அளவுபடாத போகத்தைப்பெற்றுக் களித்தலே முத்தியெனப்பேசுகின்ற உலோகாயதமெனச் சொல்லப்படுகின்ற சமையத்துக்குரிய சரித்திரங்களை விசாரணைசெய்து அம்மார்க்கத்தை யனுசரித்துச் சுகாதீதப் பேற்றையடைந்து வாழ்பவரே புருடராவார், அவ்வகையான சிறந்தமுத்தியின் நலங்களைத் தரவல்லவர் வேலையொத்த கூரியவிழிகளைப் படைத்திருக்கின்ற மங்கையரேயாகும். அவர்களாற் பெறுமின்ப சாதனங்களுக்கடுத்த கிரியைகளையும் அவைகளைக் கருவியாகக்கொண்டு கிரீடிப்பதற்கடுத்த தன்மைகளையும் பெறவல்ல ஆடவர் செய்கைமுதலியவற்றைச் சாத்திரோத்தமாகவே உனக்குப் போதிக்கின்றேன், அஃதென்னையெனின் மக்களுக்கடுத்தசாதி இயற்கை அங்கம், குணம், சத்துவம், தேசவியல்பு, புணர்ச்சிப்பருவம், இத்தன்மைகளைச் செவ்வையாகத்தேர்ந்து கருத்தில் அமைத்துக்கொண்டு நடப்பதாம். மேற்குறித்தகாரணங்கள் மதனுகமத்திற்சொல்லும் சிறந்தபொருள்களின் தொகையாகவிருக்கும். ஆயிரங்கண்ணனே இவைகளின் வரன்முறையை இனி விரித்துக்காட்டுவோம் பாராமுகமில்லாமற் கேட்டறிந்துகொள்; மாதர்சாதியிலக்கணமாவன பத்மினி சித்தினி சங்கினி அத்தினியென்னும் நாற்கூறாய் விளங்கும் அவற்றுள் ஆடவர் கணப்பிரிவுகளாவன முயல், இடபம், குதிரையெனப்படும், இவற்றுள் முற்குறித்திருக்கின்ற கணத்தின் குறியினளவையைக் குறிக்குமிடத்தில் நான்குமுதல் ஆறங்குலமாம், இரண்டாவது கணத்துக்கு ஏழுமுதல் ஒன்பதங்குலமாம், மூன்றுவது கணத்துக்குப் பத்துமுதல் பன்னிரண்டங்குலமாமென்று சொல்லப்படுகின்றது. இனி மங்கையர்களுக்குரிய கணப்பிரிவுகளைக்கேள். மான், பெண்குதிரை, பெண்யானையெனப்படும். இம்மூன்று மரபுக்குரிய குறியினுழப்பிரமாணமும் மேற்படி ஆடவருக்குச் சொல்லியுள்ள கணிதங்களைக்கொண்டிருக்கும். இவற்றுள் ஆண்பெண்குறியினளவைப் பிரமாணம் சரிப்படச்சேர்ந் தின்பத்தைப்பெறுவது இயற்கைப் புணர்ச்சியெனப்படும். பேதித்திருப்பவை மாறுபட்டகலவியாகமுடியும், கன்னியர் அங்கமாவனதேவர், மக்கள், நாகர், இயக்கர், காந்தருவர், பைசாசம், அசுரர் கார்த்தபம் எனப்படும். மேற்குறித்திருக்கின்ற இனப்பிரிவுகளை நிதா

னமாயறிந்து வாத-பித்த-சிலேட்டுமமெனச் சொல்லப்படுகின்ற மும்மைத் திறங்களுக்குரிய குணம், குறி, பருவங்களையாய்ந்தறிந்துகொண்டபின்பு கன்னியைப்புணர்வது இசைக்கலவியாம். இஃதல்லாமலும் உருவம் வண்ணம் செயற்கை நாள்முதலியவற்றைச் சீர்தூக்கிப்பார்த்துக் கன்னியர்மரபுமுதல் குணவனாயில் கவனித்துத் தெரிந்தணைவது சிறப்புக்கூடலெனப்படும். வானத்தில்நின்று மேகங்கள் ஏககாலத்திற்பெய்யுமாயினும் நிலங்களின் குணத்தின்படி மதுரம்,உவர்ப்பாக நீர் திருந்துமாறுவதுபோலவே தேசங்கடோறுமுள்ள மங்கையர்கள் நீதி உள்ளம் செய்கையாதிய குணவகைகளைப்பகுத்தறிந்தணைவது தேசவியற்கைப்புணர்ச்சியெனப்படும். இவைகளன்றியும் பாலை தருணி இரவுனா விருத்தையென்னும் பருவங்களுக்கடுத்த காலகியதிகளையும் சித்தவியல்பையும் மகிழ்ச்சிக்கிரமங்களையும் பிரித்தறிந்துகலத்தலே அங்கமெனப்படும். மேற்குறித்த முக்குணங்களையும் மும்மரபையும் நான்குசாதிகளையு மற்றஎண்வகைச்சத்துவங்களையும்பெற்றிருக்கும் கன்னியர்பருவங்களையாய்ந்து காலத்தைத்தெரிந்து சேர்தலே காலபருவமெனப்படும். பட்சங்கடோறும் தினமுறையாக மங்கையர்தேகத்திற் பொருந்தியிருக்கும் அமுதநிலை யிழிந்தும் ஏறியும்வரும், அதுநின்றநிலையைக் குற்றமறநாடி இருவர் உடலும் மனமு மொன்றுபட்டு மகிழக்கலத்தலே புணர்ச்சியிற் றலைமையாகப்பேசப்படும், அன்புள்ளவர் இல்லாதவர் குறியளவையொத்தவர் ஒவ்வாதவர் கூடாவொழுக்கமுடையவர். இவ்வகையான காரணங்களைப் பெற்றிருப்பவனாக் குணங்குறிகளினுற் பகுத்தறிந்துகொண்டபின் மங்கையனாத்தழுவி இன்பநலத்தைப்பெற்றனுபவித்தல், இந்நூலைப் பூரணமாகக் கற்றறிந்த மேலையோருக்கழகு மாண்மையுமாம். இதுகாறும் ஆடவர்மகளிரியற்கை குணாதிசயங்களைப் பகுத்ததாகும். இனி சுரதலீலைகளினுல் அவ்விருதிறத்தவரும் கலந்தின்புறுதலும் அதற்கு நடத்தவேண்டும்முயற்சிகளாதியாகச்சொல்லுவோம், அவை ஆலிங்கனம் சும்பனம் நகக்குறி பற்குறி குட்டல் தட்டல் புள்ளொலி கரணபேதமுதலிய செய்கைகளாம். அவைகளை விரித்துக்காட்டுவோம்; இருவகைக்குறிகளில் ஒன்றுக்கொன்று உயர்ந்தும், சமமாகவும், தாழ்ந்துமிருப்பது உச்சம் சமம் நீசமெனப்படும், அவற்றினைக்குறித்தறிந்து ஐவகைக்கரணங்கள்,அவற்றினுட்பேதமாகியசத்தப்பிரகாரணங்களினுலும் அவைகளுக்குரிய புறத்தொழில்களினுலும் களிப்பித்து மங்கையனாப் புணரக்கலந்தின்புறுதலே மதனசாத்திரோத்தப்புணர்ச்சியாம். இஃதல்லாமலு மகளிர் ஆடவனா மேலிட்டுக்கலத்தல் உபரிசுரதமெனப்படும்; இதேனுமன்றி எண்வகை ஆலிங்கனபேதமுண்டு, அவை கற்பகத்தருவைச்சுற்றிப்படரும் காமர் வல்லிக்கொடிபோலவும்மரத்தினிடத்தி லேறுமாறுபோலும் எள்ளும் அரிசியுங் கலந்து காட்டுவதுபோலும் பாலும் நீரும் பொருந்தியிருப்பதுபோலும் தொடைகளுடன் தொடைகள் நெருங்குதலும் இருகுறிகள் சேர்ந்தொன்றவும் கொங்கைகள் மார்பிலழுந்தவும் நெற்றியுடன்நெற்றி பொருந்தவும் கரங்களினுல் தேகங்களைக்கட்டித் தழுவிக்களித்தலாம், மேலும் எண்வகைச்சும்பனங்களுண்டு; அவற்றினைச்செய்யுந் தானங்களேதெனின் நேத்திரத்தானம்

கபோலத்தானம் கொங்கையினிடம் கரங்களின்மூலம் நிதம்பத்தானம் அதர த்தானம் உந்தியினிடம் எனப்படும். இவையல்லாமல் நகக்குறியிடுமிடம் பதினெளன்றுண்டு; அவைகளேதெனில் கைம்மூலம் மார்பு தோள் பிடர் கழுத்து விலாப்புறம் கபோலம் கொங்கை அல்குல் வாய் தொடை இத் தலங்களாம். மேலுந் தந்தக்குறி ஐந்துண்டு, அவை மூடிகம் அனுசூகம் பிர வாள மணிபந்து மணிவிந்துமாலை கோரசாவிதம் என்பனவாம். இக்குறிகள் சும்பனத்துக்குரிய தானங்களில்மேல் அதரம் நா விழி இம்மூன்றிடங்கள் நீங் கலாக மற்றையதலங்களில் அழுத்தவேண்டும். தாடனவகை எட்டுண்டு, அவையாவையெனிற் கரங்களில்விளங்கும் விரலினைக்குவித்துத் தட்டல்குட் டல் அகங்கையினாற்றட்டல் கரத்தினைப் பிடித்தமாக்கிக்கொண்டு மெல்ல மெல்லக்குத்தல் ஆள்காட்டிவிரலினாலூன்றல், அவ்விரலினாலும் நடுவிரலினா லும் நெருக்கல், அவ்விருவிரல்களையுமடக்கிப் பற்றுக்குறடுபோலப்பிடித்தல்- ஆள்காட்டிவிரலைக்கொண்டு துழவலாம். இத்தொழில்களைச்செய்யுந் தானங்க ளாவன கொங்கைகளின்மத்தி உச்சி நெற்றி கன்னம் சகனம் முதுகு பிடர் தொடை எனப்படும். இஃதன்றியு மர்த்தனம் அறுவகையாகும், அவை கரிகரம்-காமாயுதம், காமௌஷதம்மதனாங்குசம், மன்மதபதாகை,தோத்திரம் என்பனவாம். இதுவுமல்லாமல் புள்ளொலி ஏழுண்டு; அவை மயில் புறா அன்னம் காடை வண்டு குயில் கோழி செம்போத்து என்பனவாம். இவற் றுள் தலைவன் சுரதலீலையின் பிரகரணப்படி இரண்டு தேகங்களுமொன்று படக் கட்டியணையுங்காலத்திற் புணர்ச்சிக்களிப்பினாற் றலைவியினதுகண்டத்தி னின்றெழும் ஒலியினைச் சீர்க்காரமெனச் சொல்லப்படும்மேற்குறித்த காரண ங்களனைத்துக்கும் ஆதாரசத்தியாக நின்று நடிப்பிக்கவல்ல பஞ்சகரணங்க ளுண்டு. அவை உத்தானிகம் திரியக்கு ஆசீதகம் ஷிதகம் ஆன்மில மெனப் படும். இவைகளின் பேதங்கள் கிராமியம் புவுத்திகம் நாகபாசம் நாகரீகம் இந்திராணிகம் கூனம் இதமாயதம் ஊர்த்தம் சங்கிராணிகம் மாண்டூகம் பாரிசம் பீடிதம் சூலம் சுரும்பிதம் பதுமபீடம் பாரசம்புடம் வெட்டிதம் விசம்பிதம் உற்புல்லம் பிண்டிதம் கடிபீடிதம் பிரேதுகை அனுபாதம் பண்டதம் கடகம் அத்தம் பதுமாசனம் சமூர்த்தம் நண்டகம் அளிதம் வேணுசாரிதம் சமவேசனம் ஆடவும் உத்தானசம்புடம் பரிவத்வம் சங்கா டகம் தேனு மாகடம் ஐம்பதம் சானுகூர்ப்பாங்குலிலம் பீனமாத்திரம் கூர்ப் பன்னம் பீடிதொருகம் பீதம் பீடிகை விக்கிரமம் எகோயூக்கம் இங்ஙாற்பத் தெட்டுமாம். இவையன்றிப் பலகாரணங்களினாலும் பரிமளமிகுத்த கூந்தலை யுடைய மாதர்புளகிக்குமாறுசுரதநூல்வல்லோர்கள்கிரீடிக்கு முறைகளனைத் தும் சித்திரகரண மெனப்படும். மடந்தையருடைய பாவமு நிலையும் அவைக ளின் திறங்களுஞ்சேரும் பதக்கிரமமேம்பாட்டையும் சீர்தூக்கிப்பார்த்தாகித் தறியவல்ல ஆடவராயினும் கற்புடையமடந்தையாரன்றிக்காமுகராகவிருக்கும் வாலிபனைமயக்கும்வேலையொத்த கூரியவிழிகளையுடைய பரத்தையர் காமக் கன்னியர். இத்தன்மையர்களைப் புணர்தலும் கலவித்திறங்களைத் தேர்ந்தின் புற்று மகிழ்தலும் மதனாகமத்தை வரையறக்கற்றறிந்த மேலையோர்கள் கட

னும். இவ்வொப்பற்ற நூலை வரன்முறையாக ஆராய்ந்து சோதனைகளினாற் சங்கையறத்தெளிந்து தருணமடந்தையரைத் தழுவவல்ல குணமுடையார் பெறகின்ற வின்பமுத்தியை ஒருவரால்கணித்துச் சொல்லவும்போது மோ வென்று மேற்குறித்ததொகை வகைவிரிவாக மதனகமமுறைக ளனைத்தை யும் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல் மனத்திலுணர்ந்துகொள்ளப் பிருகற் பதி போதித்தவுடன் இந்திரன் அக்காரணகாரியங்களை நன்றாகத்தெரிந்து மடந்தையரைச் சுரதலீலைகளினாற் றழுவி இன்பலம்பெற்றுக் களிக்கும் காம க்கவலையில்மனத்தைச் செலுத்தியவுடன் சிங்காதனத்தை விட்டுத்திடுக்கென் றெழுந்து ஆசிரியன் பாதாரவிந்தங்களிற் பணிந்து ஐயனே! அடியேன்பாற்கிரு பையாய்த் தெருட்டிய மதனகமப் பிரகரணங்க ளனைத்தையும் வேதமொழிக ளாக நிச்சயித்துக்கொண்டேன்; இனி மற்றொருபொருளினிடத்தினு மிச்சை வைத்துக் கழியேன், அளவுபடாத வின்பலத்தைப்பெற்றுக் கிருதார்த்த னாவேனென்று மனவெழுச்சியுடன் குரவனை மீட்டும்வணங்கிச் செலவுபெற் றுக்கொண்டானாய்ப் பொன்னுலகாதிபத்தியத்தைச் செங்கோன்மைமுறைப் படி அரசுசெலுத்திவருவதாகத் தன்றிருக்குமாரனாகிய சயந்தனிடத்தொப் பித்துக் குளிர்ந்த சோடசகலைகளைவாய்ந்த சந்திரவிம்பத்தைப்யொப்ப விளங் கும் முகாரவிந்தத்தையுடைய இந்திராணி வாசஞ்செய்யும் அந்தப்புரத்தைச் சேர்ந்து நினைத்தற்கரிய போகங்களை அவள்பாற்றுய்த்துமனங்களித்துத்திருப் பாற்கடலினிடத்தேதோன்றிய அமுதத்தை யிதுகாறுமினிதென்றிருந்தேன், அது இக்காலத்தில் பயனற்றதாகக் காணுகின்றதென்றே வெறுத்து எல்லா வாபரணங்களையுமணிந்தசசியின் சிவந்தவிதழூறலாகிய அமுதம் மிகவும் மதுர மாக விருக்கின்றதெனக் களித்துண்ணேன், வெள்ளியங்கிரியைப்போலத் தா வள்ளியமாகப்பருத்ததேகத்தைப்பெற்றுநவரத்தினமயமாகிய பூண்களணிந்து கூர்மையாகவிருக்கின்ற நாற்கோட்டினாற் பகைவர்களை யதஞ்செய்யவல்ல வலிபெற்ற அயிராவதத்தையுமறந்து முத்துமாலைகள் மோகனமாலைகள்புர ளும் இந்திராணி பருத்தோங்கிய கொங்கைக்குவடாகிய களிற்றின்மீது இடை விடாதவன்புடன் ஆலிங்கனஞ்செய்து தேகம்பரவசனாய்க்களித்து தேவர் கள்முதலிய யாவரையும் வெல்லத்தக்க வலிபெற்றிருந்த விருத்திராசுரன் மேற் போர்க்குச்செல்கையில் ஆரோகணித்திருந்த இந்திரபட்டத்துக்குரிய இரதத்தைத்துறந்து அதனினுஞ்சிறந்ததாய் மின்னற்கொடியைப்போல் தோ ற்றி மறைந்தசையும் மெல்லியவிடையையுடைய இந்திராணி அல்குற்றேரி னிடத் தின்பமும் பிரியாமல் வசித்தின்புற்றும் கருங்கடல்சூழ்ந்த பூமண்டலம் நடுநடுங்கித் தத்தளிக்கத் தக்கதாக முழங்கும் இடியைவெறுத்துப் பகைவர் கள் ஆருயிரைவாட்டியலைக்குங்கணையைப்போல ஆகரணாந்தபரியந்தமோடிச் சேற்கண்டைக்கொப்பாகப் பிறழ்ந்திருக்கும் விழிகளைப்படைத்த அம்மாதின் வல்லிசாதக்கொடியினும் சிறுத்தவிடையாகிய மின்னற்கொடியி னிடத்தின் புற்றுக்கொண்டாவென், தவங்களிற்சிறந்த ததீசிமகாமுனிவன் முதுகுத் தண் டெலும்பினாற் செய்யப்பட்டு மலைகளின்சிறகையரிந்து பகைவர்களுக்கு வயிரி யாகவிருக்கின்ற வச்சிராயுதத்தைக் கரத்திற்கொள்ளவெட்கி யெறிந்துபோட்

டுக் கலாபமஞ்ஞையையும்பழித்த சாயலையுடைய இந்திராணி கண்களாகிய வேற்படைக்காற்றுமற் சோர்ந்து பிராணனைத்தாங்கிக் குலாவிபும் மேகத்தினிடத்திற்றோன்றும் இந்திரவில்லைமறந்துதிருமகளைப்போன்ற சுந்தரவதியாகிய நாயகியினது புருவமாகியசிலைகளைமதித்து வெற்றியனைத்துமே தரவல்லதென்றெண்ணிப் புகழ்வான். தனக்குரியவாகனமாகிய மேகங்களைப்பழிகூறி யியற்கையாகிய மணமமைந்த கற்பகமலர்களைச் சூடிக்கொண்டிருக்கும்இந்திராணி கரிய கூந்தலென்கின்ற புயல் கலவிப் போரிற்சோர்ந்தலைவதைச் சேர்த்துக் கோதிவாரிமுடித்துப் பூச்செருகிக்களிப்பான்; பஞ்சதருக்களினிடத்தில் துவண்டசைகின்ற காமவல்லிக்கொடியைச் சினங்கொண்டு கனதனங்களைத் தாங்கப் பொறுமல்வாடிவருந்தும் இடையின் வருத்தத்துக் காற்றமாட்டாதவனாய்க் கிலேசித்துத்தழுவி மனச்செருக்கைப்பெற்றும் பஞ்சணைமெத்தையினும் புட்பப்படுக்கையினும் அன்னத்தூவிகளிற் புனைந்த மெத்தைவிரித்திருக்கும் பொன்மஞ்சத்தின்மேலும் மதனாகம விதிப்படி சும்பனம் தாடனம் புட்குரல் நகக்குறி ஆலிங்கனமுதலிய லீலைகளைச்செய்து களித்துவருங்காலத்திற் சகலவிதமான ஆபரணமுதலியவைகளைத் திருத்தியும் பூந்துகிலையுடுத்தும் அளகத்தைமுடித்தும் புதியநறுங் கற்பகமலர்களைச் சார்த்தியும் அடிக்கடி இதழூறலாகிய வமுதையருந்தி யிளைப்பாறியும் காதளவோடியிருக்குங் கண்களுக்கஞ்சனமெழுதியும் அனிச்சமலரினு மெல்லியபாதங்களுக்குச் செம்பஞ்சுக்குழம்பினாற் சித்திரங்களெழுதியும் புதியபட்டாடைகளையுடுத்து மாற்றியும் மலர்கள்பரப்பிய போர்வையைச் சார்த்தியும் இவ்வகையாக இந்திரன் இந்திராணியினிடத்தில்முழுமனத்தையுஞ்செலுத்தினானையாற்கிடைத்தற்கரியபரமபதம் இலேசாகப்பெறவரினும் கைப்பாகவெண்ணத்தக்க கருத்தைக்கொண்டு மதனநூலிலக்கணங்களைநாடிக் காமவின்பலத்தையே சிறந்ததாக மதித்துப் பலநாள் இடைவிடாமல் இந்திராணியைக் கலந்தனுபவித்திருந்தான். அத்தருணத்தில் மாறிமாறிமோதும் அலைகள்மிகுந்த கடலைப்போல ஆசைப் பெருக்கினாழ்ந்தணைந்துகளிக்கும் இன்பநூலை இந்திரனுக்குப்போதித்து அவன் கொண்டிருந்த மனவுறுதியைக் கலக்கி மாறுபடச்செய்து மங்கையர் புணர்ச்சியிற் கவலைபெற நாட்டியனுப்பி மனவெழுச்சியுடனிருக்கும் பிருகற்பதி அருகிலிருந்துபோதிக்கும் நீதிகளின் உதவியைக்கொண்டு சயந்தன் இந்திரபட்டத்துக்குரிய வயிரமுடியைச்சுமந்து செங்கோலோச்சி முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிர முனிவர் கருடர் கந்தருவர் சித்தர் வித்தியாதரர் முதலிய விண்ணாடர் இந்திரசபையில் நெருங்கித்துதித்து வாழ்த்தத் தக்கதாய்க் கோடிசூரியரொருமுனையிற் றோன்றினாற்போல் விளங்கிக்கொண்டிருக்கும் அரியணையில்வீற்றிருந்து மும்மையுலகத்துக்குரிய அரசாட்சியைச் செலுத்தி வந்த இந்திரன்குமாரனாகிய சயந்தன் தன்னைச் சூழ்ந்திருக்கின்ற அகத்தியர் முதலிய முற்றத்துறந்த முனிவர்களுக்கும் கின்னரர் கிம்புருடர் கருடர் கந்தருவர் சித்தர்வித்தியாதரர்களாகிய முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் முன்னே எழுந்தருளியிருக்கின்ற தன்னுடைய ஆசிரியனாகிய பிருகற்பதியைப் பார்த்து வணங்கி எம்பெருமானே! அரிப்பிரமேந்திராதி தேவர்களும் அள

வில்லாத தவசிகளும் மற்றையமுதியோர்களும் மிகுந்த வலிமைபொருந்தியுள்ள சூரபதுமனாற் கொடியதுன்பத்தை யனுபவித்து, தங்களுக்குத் தொன்றுதொட்டு நீடித்துவந்த பெருமையுமிழந்து வருந்தவேண்டிய காரணமென்ன, அதனை எனக்கு நன்றாகத்தெரியச்சொல்லவேண்டும், எங்கள் குலகுருவாகிய பிருகற்பதி பகவானே யென்றுசொல்ல அதனைக்கேட்ட பிருகற்பதி சொல்லுகின்றனர்: சயந்தமகாராசனே? தேவர்களுக்கும் மேன்மையாகிய தவத்தையுடைய முனிவர்களுக்கும் கொடியவனாகிய சூரபதுமனால் நேரிட்ட துன்பங்களெல்லாம் திரிபுரதகனராகிய பரமசிவனை யொழித்துத் தக்கன்செய்த யாகத்திற்போய் அவனுக்குத் துணைசெய்திருந்ததீமையினாலும் போலும் என்றுசொல்ல, அதனைக்கேட்ட சயந்தன் இப்படி பரமசிவனையன்றிச் செய்த யாகத்திற்சேர்ந்திருந்த தீமையினால் இவ்வகைத்துன்பங்களை யனுபவித்திருந்தாரென்றான் அக்கொடியசெய்கையையுடையவனாகிய தக்கன் புராந்தகனாகியபரமசிவனையொழித்துச்செய்த யாகத்தின்வரலாறும் அங்குநடந்த மற்றசெய்திகளையும் ஒன்றேனும்விடாமல் அடியேனுக்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று சொல்லப் பிருகற்பதிமிகுந்தசந்தோஷத்தையடைந்து சயந்தனைமிகுதியாக வாழ்த்தி அப்பா இந்திரகுமாரனே! மிகுந்த அலங்காரத்தினால் பிரமபுத்திரனாகியதக்கன் செய்தயாகத்தின் வரலாறனைத்தும் எம்மாற் சொல்லக்கேட்க வேண்டுமென்று இனியவார்த்தைகளினாற் சயந்தனுக்குப் பிருகற்பதி சொல்லலாயினன்.

இந்திரபுரிப்படலம்

முற்றிற்று.

---

## தேவகாண்டம்முற்றுப்பெற்றது.

---

உ

வேலுமயிலுந்துணை.

ஆறுவது

# தட்சகாண்டம்.

## உபதேசப்படலம்.

மாயையின்வலியோனுகிமான்முதலோரைவென்றே
யாயிரத்தோரெட்டண்டமரசுசெய்துகநூற்றெட்டுங்
காயமதழிவின்றாகிக்கடவுளர்க்கலக்கண்செய்த
தீபசூர்முதலைச்செற்றகுமரன்றாள்சென்னிவைப்பாம்.

உலகங்களிற்சிறந்து கோடிசூரியப்பிரகாசமாகவிளங்கும்பிரமலோகத்தில்
தவத்தரும் தேவர்குமாரவருக்கங்களுஞ்சூழப் பொன்மயமாகவிளங்குஞ் சபா
மண்டபத்தின்முகப்பி லிரத்தினமயமாயோங்கியசிங்காதனத்திற்பிரமன்வீற்றி
ருந்தான். அதுபோது அவன்மக்களிலொருவனுகிய தக்கன் தன்பிதாவைநோக்கி
மும்மைப்பெருந்தேவரிலுயர்ந்து தேவாதிதேவனுய்ச் சகலமங்கள குணங்களு
முள்ளவனுய் வந்தனை யோக்கியனுய்விளங்கிப்பிறப்பிறப்பில்லாதானுய்ச்சராச
ரங்களனைத்தினும் பொருந்தி ஆட்டவல்ல மூலகாரணனைத்தெரிவிக்கவேண்டு
மென்றான். அவனைநோக்கிப்பிரமன்நகைத்துகுமாரனே, விண்டுவும்! யானும் மு
ன்னாளில் அஞ்ஞானவலையிற்பட்டுநாமேபிரமமென்றகந்தைகொண்டுபகைத்து
அதனைத்தாபிக்கமுயன்று அளவில்லாத காலம்போருதோம். அக்காலத்தில்
உலகமடையும் துயரினைத் திருவுளத்தடைத்து அக்கினிவடிவாய் எங்கள்நடு
விற்றோன்றிப் பரத்துவ நிச்சயத்தைத்தெரிவித்து அடியோங்கள் மையலை
யகற்றிக் காத்த பரமபிதாவாகிய பரமசிவன் யாவருக்கும் ஆதியாயும், மூல
காரணனுயும், விளங்கப்படுகிறான். இதைத்திடமாகக்கொள் ளென்றருளக்
கேட்ட தக்கன் மீண்டும் பிதாவைக்குறித்து நீர் அறிவித்த துண்மையே
யாயினும், முதன்மையாகிய சிருட்டி-திதி-கிர்த்தியங்களை நடத்திவருகின்ற
நீங்கள் தாழ்க்கடைப்பட்ட தாமதகுணத்தினுற் சராசரப்பிரபஞ்சங்களனைத்
தையும் முடிவிற் சங்கரிக்கும் பரமசிவன் உங்களுக்குக்கர்த்தனுகிய காரண
மென்னை? அதை அடியேனுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று வினவினுன்.
அதற்குப் புன்முறுவல்பூத்துகுமாரனே! நீ வேதசாத்திரங்களைப் பூரணமாகக்
கற்றும் பரத்துவநிச்சயமறியாமல் மயங்கினை? சங்காரகிருத்தியத்தை நடத்தும்

பரமசிவன் முதன்மையாகுந் தன்மையாதெனின், என்னையும் கேசவனை யும் மற்றதேவருடன் எண்பத்துநான்கிலக்கஞ் சீவபேதங்களையும் ஊழிகா லத்தினெடுக்குகின்றவன் அவனுதலான் முதலிற்சிருட்டிப்பவனும் அவனேயன் றோ, சர்வசங்காரகாலத்தி லொருவனய்விளங்கி அண்டாண்ட சராசரங்களையு மழித்துப் பின்பு பிதாவாய்நின் றென்னைப்படைத்தபரமசிவத்தினது குணாதி சயங்களை இவ்வகையென் றளவிடப்படுமோ. மேலும் விண்டுவையும் என்னை யுந்தன்தோள்களிலுண்டாக்கி உலகங்களையளித்துக்காக்குந்தொழிலை அடி யோங்களுக்குக் கட்டளையிட்டு உங்களிடத்து நீக்கமின்றி வசிக்கின்றோ மென்றருளினன். அவ்வாறே எங்கள் மூலமாக எறும்புமுதல்யானையீறாகக் கிடக்கும் எவ்வகையுயிர்களையுந் தோற்றுவித்துக் காப்பான். அவ்வான்மாக்க ளிடத்தினிலிருந்து ஆட்டுவதைப்போலவே எங்கள் மனத்தினும் அந்தரான்மா வாயிருந்து முறைவழுவின்றிப் பாதுகாத்துக்கண்ணினொளியேபோலவிளங்கு வானுயின் ஒருகாலம்யாம் அகந்தையுறுவேமேனுங் கருணைசெய்தருளி அவ்வா ணவமலத்தை நீக்கிக்காக்குந் தயாநிதியாகிய பரமசிவன் தானுமொருகிர்த்திய கர்த்தாவையொத்து எங்களுடன்கலந்து மும்மைப்பெருந்தேவரி னொருவனு யும் விளங்குவான், அவ்வாறே எள்ளினெய்யைப்போன்றும்மணியினொளியை யொத்தும் பூவின் மணத்தையேய்ந்துஞ் சலாகையிற் காந்தியை நிகர்த்தும் உலகங்களனைத்தினுள்ளும்புறம்புமுலாவுவான். இதல்லாமல் ஆதியில் வேதாக மங்களை உண்டுபண்ணி எங்களுக்குப்போதித்தவனவனே, இஃதே வேதத் துணிவு. இவ்வகையான மங்கலகுணநிதியை அடியோங்களுடன் ஒப்பாகப் பேசுவது அறிவின்மையாகும். எங்களிலொரு அணுவுமசையவறியாது, இத னைச் சுருதிகளின் துணிவாகக்கருதி வாழெனவிடையினையருளிய தந்தையை வணங்கிப் பரமசிவத்தினல் நிருமிக்கப்பட்ட வேதங்கள் பூதபேதப் பிராணிக ளனைத்தையும் பிரமமெனப் பேசுவதென்னை? இதனையுமறிவித்து அடியேன் மனக்கவலையைநீக்கவேண்டுமென்றுதக்கன்கேட்கப் பிதாமகனருளிச்செய்வா னுயினன். யாவராலும் அறியவொண்ணுத அக்கடவுளின் பெருமையினைக் கேள். பரமசிவன் வெளியிட்ட வேதங்களின் துணிபாவன அழிவின்றிவிளங் கும் மூலகாரணனுக்குரைத்த வுண்மையினை மற்றவருக்கும் உரியனவாகப் பேசுவது முகமனுகும், அவ்வாறே மற்றசீவராசிகளையும் அவற்றிற்குக்காரண மாகிய பஞ்சபூதங்களையுந்துதிக்கும். அதற்குச் சில திருட்டாந்தங்காட்டு வோம். பிராமணரை பரமெனத்துதிப்பாருமுளர். இதனல் நீதெளிந்துகொள்; இதல்லாமலும் யாவராயினும் எவ்வெவரை எவ்விடயங்களில் துதிக்கினும் மூலகாரணனுகிய பரமசிவனையேசேரும், அவ்வாறே வேதங்கள் துதிப்பதனை த்துஞ் சிவபிரானுக்கேற்கும், அதெப்படியெனில் நதிகளெவ்விடங்களி னுதிக் கினுங் கடையிற் சமுத்திரத்திற் சேருந்தன்மையனவேயாம். இனிப்பலபல சொல்லவேண்டுவதில்லை. வேதாகமங்களின் துணிபாவது பரமசிவன் எல்லாவுல கங்களையும் படைத்தும் காத்துஞ் சங்கரித்தும் மீளவுஞ் சிருட்டித்து அவை களுக்குரிய வினைப்போகங்களை நுகர்வித்தும் நடிப்பிக்கவல்ல கடவுளாயும், ஆதியந்தமில்லாததாயும், பெருஞ்சோதியாயும், அம்மையப்பனுயும், விச்சுவ

நாதனும், உருவமாயும், அருவமாயும், நின்மலனும், நிராமயனும், சுயம் பிரகாசனும், சர்வேந்தரியாமியாயும், நித்தியத்தைப்பெற்றவனுயுஞ், சித்த னுயுஞ், யாண்டும் பரிபூரணனும், இராசத தாமத சாத்துவிதமென்னு முக் குணங்களையுடையவனும், விராட்வெடிவமாயும், ஏகனுயுஞ், சகலமங்கல குணதிசயனும், எங்கள் இருவராலும் தேடிக்காண்பரியனும், பெண்ணு ணலியென்றறியப்படாதானும், ஆன்மாக்கள் வேண்டிய வேண்டியாங்கு அருள்பவனுபு மிருப்பதல்லாமலும், எவ்வெவற்றிற்குங் காரணப்பொருளா யும் விளங்குவதை யாவருந்தேறச் சர்வசங்காரகாலத்தில் தன்னெற்றிமேலு ள்ள ஒற்றைநாட்டத்தால் எம்போல்பவருடம்பைச்சுட்டபொடியையும் என் பினையும் அணிந்து தூலதேகராயிருக்கின்றவரையுந் தன்சத்தியிலடக்கிப் புறம் பினின்றும் யாவர்செய்கையினு முட்படாமலிருப்பவனும் தன்மகிமைகளிவ் வகையென் றெவர்களினுலுங் காணவரிய பரமாயுஞ் சர்வகாரணகர்த்தாவாயு மிருப்பான், எவனே அவனே பரம்பொருளென யாவருமறிய முறையிடுகின் றன. இதல்லாமலும் அச்சுதனையும், மற்றபூதராதி பிரபஞ்சங்களையுஞ்சாம் பராக்கித் தானேதானுய்நின்ற தற்பரமூர்த்தியாகிய அப்பரமசிவனுடைய பாதகமலங்களைத் தொழப்பெற்றவருக்கே முத்தியுண்டென்று சுருதிகள் கூறு மாயிற் பரத்துவமாவார்யாவர்? அப்பரமசிவனருளில்லாமற் சீவகோடிகள் சனனமரணமான துக்கசாகரத்தைக்கடந்து முத்தியெய்தப்பெறுமென்பது உருவமில்லாத வானத்தின்றோலையுரித்து உடுத்தற்கொக்குமென்று வேதங் களேசொல்லுமாயின், வேறுசான்றும்வேண்டுமோ. அவ்வேதங்கள் பரமசிவ னைக்குறித்துப்புகழ்ந்தது அளவில்லனவாம், அதைவிரித்துச்சொல்லஎன்னுல் முடிவதுமன்று, நாளும்போதா. அப்பா! இவைகளை நீ முன்னமேதெளிந் திருந்தும் அவன்மாயையிலகப்பட்டு உழல்கின்றனை, அதனையொழிப்பதாக இன்னமுமோருறுதிசொல்லுவேன். சகல புவனங்களுக்கும் ஆதிநூலாய்விள ங்கும் வேதாகமங்கள்சிவனைப்புகழ்ந்ததைப்போலஒருவாய்மையாவதுஎன்னை யும் விண்டுவையும் மற்றவரையுந்துதித்ததுண்டோ? அப்படி எங்களைக்குறித் துச்சொல்லியது முகமனுமென்று ஆதியந்தங்களில் விளக்குகின்றன. மேலும் அவ்வேதங்களில் ஒருபாகம் பரமசிவன் பெருமைகளையே ஓதும்; மற்றபாகம் என்னையும் விண்டுவையும் மற்றதேவரையும் பலபொருள்களையும்பேசும். இத னைச் சோதிப்பையாயின் தெளிவுபெறக்காட்டும், சிவனைப்போலவே எங்களை யும் பரத்துவமாகக்கருதிப்பூசிக்கின்ற கொடியோர் எக்காலத்து மீளாதநரக வேதனையில் அழுந்தித் தேறவறியாதுழல்வர். அக்கடவுளையும் எங்களையுஞ் சமமாகப்போற்றுவதனுல் நம்மையுந் துக்கசாகரத்திற்படுத்துவர். புலியதளை யாடையாயுடைய பரமசிவனுக்குத் தொண்டுசெய்யும்பத்தரை எங்களைப்பூசி த்ததாகவேகருதி வேண்டும்வரங்களைத்தந்து மற்றையரைப் பகைவர்களாகப் பாவிப்போம். எங்களைப் பரமசிவனுடைய மாயையிற்பட்டு அலையும்பிராணிக ளென்று அவ்வேதங்களின் நடுவிற்சொல்லும். இதற்குச்சான்றுவன யாங் களித்தொழிவினைப்பெறுவதாக மணிமிடற்றெம்பெருமானுடைய பாதகமலங் களையருச்சித்த சிவாலயங்களே அளவில்லனவுள. இதனுற் கண்டுகொள்.

அவன் அனுக்கிரகம்பெறாமல் முத்திபெற்றாரொருவருமிலர். அவன் கருணையைப்பெறாமல் வாழ்ந்த தேவரைக்காட்டவல்லமோ. அவன் அருட்டிறத்தைப்பெறுவானாயிற்கிடையாதபொருளொன்றுமில்லை;இதனையுண்மையாகவே சொல்லுவேன். அவனையன்றி வேறொரு கர்த்தனில்லை. ஆதலால் அவன் பாதகமலங்களிற் சரணமடைந்து வாழென்று பிதாமகன் போதித்தான், அதனால் தக்கன் ஐயம்நீங்கி முதன்மையாகிய முத்தியைப்பெறவிரும்பாமல் ஊழின்பாலாய்த்தவத்தைச்செய்து சிவானுக்கிரகத்தினால் விண்டுமுதலாகிய தேவரனைவருக்கு முதன்மையெய்தக்கருதிப் பிதாவைவணங்கி தேவரீர் குறித்த பரமசிவத்தை மூலகாரணமென்றறிந்தேன் ; இனி அவனைநோக்கித் தவங்களைச்செய்து இட்டகாமியங்களைப்பெறுவேன், அதற்குத்தகுதியாகிய இடமொன்றைக்காட்டி விடைதரவேண்டுமெனக்கேட்க, தாம் ஆதியில் மனத்தினாற்சிருட்டித்தமானதவாவியின்பெருமைகளைத்தெருட்டி அவ்விடஞ்சேர்ந்துதவத்தைச்செய்யென்றோதினான். அதுபோதுதக்கன் தன்பிதாவைத்துதித்துப் பரமசிவத்தின்கருணைக்கடலே போற்குளிர்ந்த சலப்பெருக்கையும் பொற்றாமரைகளலர்ந்துவிசாலமாய் விளங்கும் மானதமடுவைக்கண்டு அதன்கரையை அடைந்து காற்றுமழை வெய்யில் பனி இவைகட்கு வருந்தாமல் தேக இச்சையை நீக்கிப் பரமசிவன்பாதகமலங்களையேஇதயகமலத்தினிறுத்திச்சுவாசத்தையடக்கிச் சுழிமுனையிற் செலுத்தி மூலாக்கினியை எழுப்பிப் பஞ்சேந்திரிய விடயங்களை வாட்டிப் பத்தியென்னும் அபிடேகமாட்டி வயிராக்கியமென்னும் மலரைச்சூட்டி அறிவென்னுந் தூபத்தைக்காட்டி இவ்வகையானமானதபூசையினைச்செய்து பரிசுத்தனாய்த் தன்மனத்தை யொருவழிப்படுத்தி வேதாந்தத்திற்கும் அதற்கரிய கர்த்தன் திருநாமங்களை விதிப்படிதுதித்துப் பதினாயிரம் ஆண்டுகள் அகோரதவஞ் செய்திருந்தான். அதைப் பரமசிவன் திருவுளத்தடைத்து பொன்மலை வெள்ளிக்குன்றின்மீது விளங்குவதுபோல் இடபவாகனத்தில் உமையொருபாகனாய் எழுந்தருளக்கண்டு பின் ஆனந்தக்கூத்தாடி விழிகளிலானந்த பாஷ்பம்பெருக இருவர் தேடற்கரிய பரம்பரன்பாதாரவிந்தங்களிற்சேவித்து வேதவாக்கியங்களினாற்றுதித்துக்கரங்களைச் சிரத்திற்கூப்பி நிற்கின்ற தக்கனிடத்துக் கிருபாநோக்கம் பாலித்து, உன்தவத்தைமெச்சினோம், வேண்டும் வரங்களைக் கேளென்றருளப் பிறவித்துயரத்தினை நீக்கும் மோட்ச சாம்பிராச்சியத்தை நினையாமல் ஊழின்வசப்பட்டுசுவாமி! மும்மையுலகங்களினும் என்னாணைசெல்லவுந் தேவர்களைவந்திப்பவர்அனைவரும் என்னைப்பணிந்துபோற்றவும் எம்மையல்லது மற்றதேவதைகளை மனத்தினுங் கருதாமலும் விண்டுமுதலானோர் அடியேன்கட்டளையில் அடங்கிநடக்கவும் மனத்துக்கினிய புதல்வரைப்பெறவும் அகண்ட சாம்பிராச்சியங்களை யடையவும் அழிவில்லாத நித்தியங்கிடைத்து எக்காலமுங் களித்திருக்கவுங் கருணைசெய்யவேண்டும், இதுவல்லாமலுஞ் சகலபுவனங்களையும் ஈன்று உமதிடப்பாகத்தமர்ந்த பராசத்தி என்பெண்ணாகவும் நீர்பிராமண வடிவாயெழுந்தருளித் திருக்கலியாணஞ் செய்யவும் வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய மகிழ்ந்து உன்கருத்தின்படி எண்ணந்தந்தோம், ஆனால் உன்மனம் நமதுமெய்ப்பத்தியில்

திரியுமாயின் நம்வாமுந் திரியுமென்றருளிச் சிதாகாசமாகிய கனகசபையில் நடிக்கும் சிவபெருமான் திருக்கயிலைக்கெழுந்தருளினார்.

பின்பு தக்கன் மகிழ்ச்சி சிறந்தவனாய்ப் பிதாவை நினைக்க அதனைப் பிரமனறிந்து தக்கன்வருந்தி நோற்றுப் பெற்றபேறு வெகுநேத்தியெனப் பெருமூச்செறிந்து நமதுகுமாரன் திரிபுராதிகளை நகைத்தெரித்த பரமசிவனைக் கருதப்யோகித்துச் சனனசாகரத்தைக்கடந்து முத்தியினைப் பெறத்தக்கதாகத்தவஞ்செய்யவனுப்பினோம், அதைமறந்து அகந்தையினா லாணவமலத்துக்கேதுவான செல்வத்தையேபெற்றான்; ஐயோ? இனிச்செய்யவேண்டுவதென்னை? வேம்புக்கு அமுதத்தை வார்க்கினும் அதன்கைப்பறாதுபோலாயிற்று. நீலகண்டத்து நின்மலன் ஆதிதேவனென்றுணர்ந்தும் வருந்திநோற்றும் இவ்வுலகிலெக்காலமுந் தீராப் பழிபாதகத்துக்கேதுவானபேற்றையேவேண்டினான். ஆகையால் பிராரத்தவினைக்கீடாகத் தொடர்ந்துவருந்துன்பத்தை மகத்துக்களாலும்நீக்கவொண்ணாதென்பதை இதனளவிலுறுதியாகக் கண்டேமென்று அழலிடைப்பட்ட மெழுகேபோலமனமுருகிவருந்தித்தன்மகன் பெற்றதவத்துக்கஞ்சித் துரிதமாக அன்னவாகனமேறி விருப்படைந்துநிற்கின்ற தக்கனெதிரில்எழுந்தருளிஆசீர்வதித்தான். அதையங்கீகரியாது பிதாமகனை நோக்கிநாமிருக்க இவ்விடத்தில் யோக்கியமான நகரமொன்றை விதிப்பாயென்ன உடனே தன்னகரினுமேலாகிய சிறப்பினைவாய்ந்து பொன்னுலகமுநாணும்படி வானளாவியமதிலும் மேருமலையையொத்த கோபுரங்களும்பெரும்புறக்கடலைநிகர்த்துச்சூழ்ந்தஅகழியையுஞ் சொர்ணமயமாய் இரத்தின காந்தியைவீசும் மாடமாளிகை மண்டபமுதலிய சகலவிதமான சிறப்புக்கள்வாய்ந்த பட்டணத்தை நிருமித்துத் தக்கமாபுரமென்று பெயரிட்டுத்தன்மகனுக்கறிக்கையிட்டபின் அதன் சிறப்புக்களை நோக்கிக்களித்துப் பிதாவின் செய்கைக்குமெச்சினவனாய் உடனே தேவர்முதலானவரனைவரும் வருவதாக நினைக்க அவ்வாறே சத்தசாகரங்களும் பெருகினாற்போலச் சொர்க்கமர்த்திய பாதலத்தின்கணுள்ள யாவரும்வந்துவந்து நெருங்கிப்போற்றத்தவளக்குடை வெண்சாமரைமுதலாகியஇராசசின்னங்களைப்பலதாங்கிச் சூழ்ந்துவரச்சென்று நவரத்தினமயமாய் விளங்கியிருக்குஞ் சபாமண்டப முகப்பிற் சிரோரத்தினங்களினால் அமைத்து விளங்குஞ் சிங்காதனத்தினமர்ந்து தோற்கருவி தொளைக்கருவி நரப்புக்கருவி கஞ்சக்கருவி மிடற்றுக்கருவி எனப்படும் பஞ்சவாத்தியங்களு முழங்கத் தேவர்கள் கற்பகமலர்களையிறைத்துத்துதிக்கத் தபோதனர்வாழ்த்தத்தும்புருநாரதர்யாழிசைபாடக்கருடகந்தருவர் வீணைகள்வாசிக்க அரம்பைமேனகை ஊர்வசிமுதலாகிய தேவகன்னியர் சதிமுறையே அபிநயங்காட்டி நடிக்கக் கொலுவீற்றிருந்தான். அக்காலத்தில் இச்சந்தோடச் செய்தியை இராட்சதராசனுக்கறிவித்து இன்றுடனுன்கவலையைநீங்கிநன்மையினைப்பெறுவை, அதென்னவென்றால் தக்கனிந்திரனுக்கரசனானான். அவனைக்கண்டு உறவாடிக்கலந்திருப்பையாயின் உன்காரியங்கள் சிறப்பாகவேநடக்குமென்றான்; அவ்வசனங்களை அவன்செவிக்கமுதமாகக்கேட்டுக்களித்துப் புயங்கள் பூரித்து வானையளாவச் சந்தோடமேலிட்டுப் பொங்குவதைப்போல நகைத்துச் சரீரம்புளகித்து மயிர்க்குச்செறிய அவன்

கொண்ட களிப்பை இன்னவகைத்தென் ஞெருவராலுஞ் சொல்லிமுடியாது. உடனே மேருகிரிக்கருகிலிருக்குந் தன்பதியைவிட்டு இரதமேறி மதயானையை பொத்தவலியுடையஇராட்சதசேனைகள்பஃதுவருக்கங்கள்புடைசூழத்தக்கமா புரிக்குவந்து தக்கனைக்கண்டு நண்புகொண்டு துயரற்றிருந்தான், அத்தருண த்தே இந்திரன்முதலாகிய திசைக்காவலருஞ் சூரியன்முதலிய நவக்கிரகங்ளும் வந்து நெருங்கிச் சேவித்துப்புகழ்ந்து புடையினிருந்தனர். அத்தினமுதல் யாவருந் துதிக்கப் பூச்சக்கரக்குடை நீழலினிருந்து தன்செங்கோலெங்குஞ் செல்லத்திரிபுவன சக்கிரோசனாக அரசுசெய்திருந்தான்.

சிலநாளைக்குப் பின்புகற்புக்கருந்ததியையொத்தும்வனப்பினிலக்குமியை யிரதியைநிகர்த்தும் உடுக்கையைப் போன்ற யிடையினையும் அனம்போன்ற நடையினையும் மயிலையொத்த சாயலினையுங் குயிலைப்பழித்த சொல்லையும் பெற்று நற்குணநற்செய்கைகளைவாய்ந்தாளாய்ப் பிரமன்பாதத்தினுதித்தவேத வல்லியென்னுங் கன்னிகையை மணந்து புவனங்களனைத்தினுக்கும் நாயகி யாக இந்திராணிமுதலிய தேவகன்னியர் வாழ்த்திவணங்கி இட்ட ஏவல்களை ச்செய்ய வாழுகின்றபோது தக்கனவளிடத்திற் சேடன் சிரோரத்தினங்களை வெளியிட்டாற்போலும் ஆயிரம் பிள்ளைகளைப்பெற்று அவர்களுக்கு உபநயன முதலான சடங்குகளைமுடித்து வேதசாத்திரங்களைப் போதித்துப் பருவகால த்தில்மக்களைப்பார்த்து நீங்கள்மானதமடுக்கரையிற்சென்றுபரமசிவனைக்கருதிச் சிறந்ததவங்களைச்செய்து சிவகோடிகளைப்படைக்கும் பேற்றையடைந்துவரக் கடவீரென்றருள அவர் பிதாவைவணங்கி விடைபெற்றுப்போய் மானததீர்த் தக்கரையிற் சிவத்தைத் தியானித்தரிய தவங்களைச்செய்துவருகையில் இதனை நாரதரறிந்து அவ்விடத்தினெழுந்தருளி அக்குமரரைநோக்கி நீவிர்துக்கசாகர த்தழுந்தி இத்தன்மையாகிய அரியதவத்தை என்னபேற்றைவிரும்பி செய்கின் றீர்களென்றுகேட்க சுவாமி பிரவஞ்சங்களைச் சிருட்டிக்கவேண்டிப் பிதாவி னனுக்கிரகப்படி பரமசிவத்தைக்கருதித் தவஞ்செய்கிறோ மென்றார்கள். அதைக்கேட்ட நாரதர்கரங்களைப்புடைத்து நகைத்துபிள்ளைகள் இச்சிறந்த நோன்பைச் செய்கின்ற நீங்கள்பெறவிரும்பிய பேறிதுதானோ வெகுநேத்தி! ஒப்புவமையில்லாதகர்த்தாவை வழிபட்டு மூவகைப்பாச நீக்கி மோட்சம்பெற விரும்பாது அஞ்ஞானத்துக்குக் காரணமாகிய படைப்பினிடத்து மனம்வைத் தீர், அரியதவங்களை முடிக்கின்றவன் பெறவேண்டுவதைக் கேளுங்கள், பிறப் புண்டானபோதே துக்கமுமுண்டு, அதனுலிறப்புண்டாகும், அதுவுங்களுக்கு நன்மையினைத்தருமோ; நீங்கள் விரும்பிய படைப்புத்தொழிலைநடத்தும் பிர மன் ஐந்துசிரங்களிலொன்றைப் பரமன் கட்டளைப்படி யரிந்ததையும் அது காரணத்தினால் நிலைபெற்றிருக்கின்ற பழியையும் நீங்கள் கேள்விப்பட்ட தில் லையோ;மேலுஞ் சராசரப்பிரபஞ்சங்களைச் சிருட்டிப்பதினாற்றானேபரமமென் றகந்தையுற்று அளவில் காலம் விண்டுவுடனெதிர்த்துச் சண்டைதொடுக்க உலகங்களுக்குண்டாகிய உபாதியைநீக்கப்பரமசிவன் திருவுளத்தடைத்துஅக் கினிவடிவாகி அவ்விருவர்மத்தியில் நிற்கவுந் தெளிவுபெறாமல் அன்னமுமேன முமாய்த் தேடிக்காணாது அவனைவழிபட்டுக் கிருதார்த்தரான கதையினையுங்

கேட்டதில்லையோ, சிருட்டியினாற்பெறுவது வீண்பெருமையல்லது வேறொன் றுமில்லை. இது நல்லதெனத் தாமே பொன்விலங்கைப் பூட்டிக்கொள்ளத் துணிவார்களோ, இன்ப மெவ்வளவோ அதற்கிரட்டித் துன்பமுடனே நேரு மென்று சாத்திரங்களிற் சொல்லப்படித்ததில்லையோ, ஆதலாற்றத்துவஞான மெய்துதற்குரிய நீங்கள் படைக்கத்தொடங்குவீராஞற் கொடிய துன்பக் கடலில் உண்மையாகவமூழ்ந்தி வருந்துவதல்லாமல் ஆதியாகிய பரமசிவனை மறந்து நாமே இறைவனென்றகங்கொண்டு தீவினைகளைச்செய்யவரும்.

இஃதல்லாமலும், மாயையிற்பட்டுப் பேருணர்வை யிழப்பீர்கள், அரிய விரதங்களைச்செய்து மேலான மோட்சசாம்பிராச்சியத்தைப்பெற்றே இறைவ னது பாதசேவையினைக்கிடைக்கப்பெற்றவர் அனேகருண்டு, அதல்லாலும் அப்பேற்றைவிரும்பி யுழன்றுகிடவாமல் வாடுகின்றவருமுண்டு, உலகவியல் புகளின்னஞ்சிலவற்றையறிவிப்பேன்; அதென்னவென்றால், மாதாபிதா குரு தெய்வம் சுற்றம் நட்பினர்முதலியவர்களாகச் சிவனடியவரை நினைந்து அவர் பாதங்களையன்றிப் பற்றில்லாதார்களாய்ச் சாத்துவிக குணத்தைப்பெற்றவ ராய் நல்லொழுக்கங்களைவாய்ந்தவராய் யாதொரு துன்பநேர்ந்த காலத்துந் தம்மைச் சரணடைந்தவரிடத்துப் பரிவாக அவர் துயரத்தை நீக்கிக்காக்கும் பேறிவைப்பெற்றவராய்ப் பரமசிவனைப்பூசித்து எக்காலமுஞ் சுகத்திலிருப்ப வராய் மிக்கசெல்வச் சிறப்பைப்பெற்றவராய்ச் சிலரிருப்பர், அவர்களே பரம சிவனைக்காணவல்லவர். ஆதலான் நீங்களும் அவர்களைப்போலவே அவாவை நீக்கி நன்னெறிகளைப்போற்றி முத்தியைப்பெறக்கடவீர். அளவற்ற செல்வங்க ளைப்பெற்ற மகதகங்காரத்தினால் நல்லொழுக்கத்தைநீத்த தக்கன்பணித்தமை மறந்திதனைக் கடைப்பிடியாகக்கொண் டுடேறுவீரென்று நாரதர்போதித்த நிலைமைகளைச் சாசுவதமோட்சத்தைப்பெறும் பாக்கியத்தைவாய்ந்த பிள்ளை கள்ஆலோசித்து, முனிபுங்கவர் அருளியமார்க்கம் பேரின்பத்துக்குரியதென்று நிதானித்து அவர்திருவடிகளிற்சேவித்துப்போற்றித் தேவரீர்திருவுளப்படியே செய்யக்கடவோம், அதற்கடுத்த கிரியைகளையும்போதித்துக் காக்கவேண்டு மென்று இரக்கின்ற தக்கன்மக்களிடத்து இரக்கமெய்தி ஆசீர்வதித்துச் சிவபிரானது குணதிசயங்களை வகுத்துக்காட்டிப் பதவியினைத்தருந் தவநிலை களைத்தெருட்டி அவற்றிற்குரிய நடைநொடி பாவனைகளை மந்திரபூர்வகமாகப் போதித்துப் பழையவெண்ணங்களைப்போக்கித் தேவாதிதேவனைச் சிந்தித்து அரிய விரதங்களைச்செய்து அவன் சேபாதகமலநிழலைச் சேருமினென்றருளி நாரதர்மறைந்தனர். அதன்பின்னர், அக்குமரர் அவர்குறித்தவாறே பஞ்சேந் திரியவிடயங்களைநிக்கிரகித்துக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூட லிவற்றைப்பயின்றபின்னர் மௌனிகளாய் அரியதவங்களைச்செய்து பரமசிவ னதுபெருங்கருணையினால் முத்தியினைப்பெற்றனர். இப்பால் தக்கன் தன்பிள் ளைகள்செய்திதெரியாமல்வருந்தி மெய்புணர்ச்சியினை நாரதர்போதித்ததையும் அதனையுறுதியாகக்கொண்டு யோகசாதனைகளைச்செய்து முத்திபெற்றதையும் அறிந்துவாடினவனாய், மீட்டும் ஆயிரம்பிள்ளைகளைப்படைத்து அவர்களுக் குரிய கிரியைகளைமுடித்து வேதாகமங்களையுணர்த்தி, குமரர்களே, நீங்கள்

மானதவாவிக்கரையைச்சேர்ந்து பரமசிவனைக் கருதித் தவங்களைச்செய்து சிருட்டிக்க வரங்களைப்பெற்றுவருவீரென்றனுப்ப, அவர்கள் விடைபெற்றுப் போய்மானதவாவிக்கரையிற் பரமசிவனைநினைந்துஅரியதவங்களைச்செய்தனர். இச்செயல்களைநாரதர்அறிந்துவந்து தக்கன்புத்திரரைநோக்கி, நீங்கள்யார்?எப் பேற்றைநோக்கி இத்தன்மையாகிய தவங்களைச்செய்கின்றீர்களென்று வினவ, அவர்கள் ஐய! நாங்கள் தக்கன்மக்கள். அவனனுமதியினற் பரமனைநோக்கித் தவங்களைச்செய்து சிருட்டிக்க வரம்பெற்றுப்போக வந்தனமென்றனர்.

அதனை நாரதர்கேட்டு புன்னகைசெய்துமக்காள்! ஆதியுமந்தமுமில்லாத வரும் பெருஞ்சோதியைச்சிந்தித்து இவ்வருந்தவங்களைச்செய்யத் தக்கபயனை நினைந்திரன்று! நல்லொழுக்கத்துக்கு இழிவானபேற்றை யாவருமெண்ணினர் கள், சிறந்ததவஞ்செய்து மக்களையுஞ் செல்வத்தையு மடைகின்றீர், அதனல் மாயையுடனும் பிறவித்துயரமாகிய கடலையுங் கிடைக்கப்பெறுவீர், படைப் பிற்பெறும் பயனித்தியத்தைத் தரவறியாது; நீங்கள்கொண்டநிலை எத்தன் மைத்தெனின் மெய்ம்மாசுகழியத்திரிகின்றவன் தற்செயலாயொரு நன்னீர்த் தடாகத்தைச்சேர்ந்தும் அதிற்படிந்து சுத்திசெய்துகொள்ளாமற் கடைப்பட்ட சேற்றை வாரிப்பூசிக்கொண் டதனேடொக்கும். மேலும் நீங்கள் பெறவிரும் பிய படைப்புநிலைபெறுவதோ; பிறப்பிறப்புச் சுகதுக்கம் பிராணிகளுக்கிடை விடாமல் தொடர்ந்துகொண்டிருக்கும் இதனைநன்ருக விசாரித்தீரல்லீர் இத னற்கொடிதாய பிறவித்துன்பம் நீங்கவறியாது; ஞானமில்லார்சிந்தையுங் கன் னியர்பாற் காமுருத புருடர்மனமும் கல்வித்திறனில்லாத பாடலும் இவை பெறும்பயனினும் நீங்கள் யாதடையப்போகின்றீர்; ஆதலாலுமக்குப்போதித் தனுப்பிய தக்கன் மூலகாரணனை பரம்பரனைவழிபட்டு எவர்களுக்குங்கிடை யாத பெருஞ்செல்வத்தைப்பெற்றும் இக்காலத்தில் அதைத்தந்த கடவுள் பாததாமரைகளைநினையாது செல்வப்பெருக்கினழ்ந்து மயங்கியிறுமாந்து மேல் வருந்தண்டனைகளை எவ்வளவுங் கருதாதிருக்கின்றனன். அவன் மக்களாத லால் நீவிரும் அதனையே துணிபாகக்கொண்டீர்; விடையவாதனைகளைப் போக்கிமனத்தைத்தேற்றிச் சிவகதியிற்சேர்க்குஞ் சன்மார்க்கங்களைப் பிரித் துக்காட்டுங் குணதிசயங்களைப் பெற்றவனே ஞானதேசிகனென்னப்படும்.

இதுநிற்க; முன்னேநும் தமையன்மார் பிதாவாக்கியப்படி பாட்டனுகிய பிரமனைப்போலப் படைப்பைப்பெறவிரும்பி இத்தலத்தில் தவஞ்செய்திருந் தனர்; அத்தருணத்தில் நாமிவ்விடம்வந்து அவர்களஞ்ஞானவறிவைப்போக்கி மேலாகிய நெறியைத்தெருட்டிச் சாயுச்சியபதம்பெறச்செய்தோம். இவற்றை நன்ருகச்சிந்தித்துப்பிழைக்கு நெறியைத்தேடிக்கொள்ளக்கடவீரெனச் சொல் லினர். அவ்வாறு சொல்லிய அவர் பாதங்களில் அப்பிள்ளைகள் வணங்கிப் போற்றி விவேகமில்லாத நாங்களீடேறக் கருணையால் ஞானசாரியனுயெழுந் தருளினீர். ஆதலால் அடியேங்கள் முன்னவர்களுக்குப் போதித்தவாறே மேலானமோட்சநெறியையுணர்த்தி நாங்களும் ஈடேறத்தயைசெய்யவேண்டு மென்றிரந்தனர். அத்தக்கன் மக்களைப்பார்த்திரங்கி நற்குணங்களைப்பெற்ற

புண்ணியவான்களே! நுங்கருத்தின்படி காட்சிகளைத்தெருட்டும வகைமை யைப்பிறித்துப் பஞ்சேந்திரியவிடையங்களிற்சிக்கி மதிமயங்கி இன்பத்துன்பங் களின் முற்பட்டுழன்று பாதகங்களிற்பட்டலையாது நீக்குவேன் பரம்பானது திருவடிகளைக்கருதிப் பூசிப்பவர் நிலைமையைச் சரியைகிரியையோகம் ஞான மெனப்படும். இவற்றுண் ஞானபாதத்தினுக்குரியவர்பெறுவதுமுத்தியெனப் படும். அதன்மகிமையை யாவரானுமறியப்படா; இருவினையொப்புமலபரிபாக நேர்ந்து சத்தினிபாதஞ்சார்ந்து மருக்கேவணங்கும் அதைப்பெற்ற புண்ணி யர்கள் இறைவன் ஆடியபாதமாகிய குஞ்சிதபாதத் தின்பசுகங்கிடைத்துப்பிற விக்கடலைக்கடந்து சிந்தையுமொழியுஞ் செல்லாநிலைமைத்தாகிய அந்தமிலின் பத்தழிவிலா வீட்டையும்பெற் றெக்காலத்தும் ஆனந்தத்திலிருப்பர். ஆத லால் நீங்களும் அம்மார்க்கத்தை அனுட்டித்து யோகசாதனையினல் வீட டைவீரென்றருளி வேதாகமத்துணிபுகளை உபதேசித்து அவர்களையும் அந் நிலையிற்பொருத்தி நாரதர் தெய்வலோகமேநோக்கிப்போயினர். பின்பு அக் குமாரர்கள் ஓரோமனமாய்ச் சித்தத்தைச் சிவன்பால்நிறுத்தி அருந்தவங்களைச் செய்து அவனருளினாற் சாயுச்சியபதம்பெற்று இறைவனது பாததாமரை நிழ லின் வீற்றிருந்தனர்.

இக்காரியங்களைத் தக்கனுணர்ந்து வடவனலைப்போலச் சினந்து விழி களில் அனற்பொறிகள்சிதற மனம்வேகச் சரீரம்வியர்க்கப் பெருமூச்செறியுந் தோறும் புகைப்படலமெழ இக்கொடுமையாற் சூரியசந்திரர்முதலாகிய நவக் கிரகங்கள் நிலைபுரண்டோடச் சராசரப் பிரவஞ்சங்கள் மிகவும் வருந்திய பின்பு என்பிள்ளைகளை இவ்வாறு மோசஞ்செய்த நாரதனேரிடத்தி னிலையின் றிக் கலகங்களை விளைத்துழன்று அலையக்கடவனெனச்சபித்து இனிப் பெண் களைப்பெற்றுச் சிருட்டி மல்கச்செய்வது தகுதியென்றெண்ணி இருபத்தாறு குமாரத்திகளைப்படைத்துப் பிருகு மரீசி புலத்தியன் ஆங்கீரசன் புலகன் வசி ட்டன் அத்திரிமுதலான தவத்தருக்களித்தான்; இவர்களிற்சுபுத்தி புத்தி சுர சை திருதி துட்டை காயை கீர்த்தி சிரத்தை இலச்சை மேதா சுத்தி சாந்தை வபுவைஇக்கன்னிமாரைத் தருமன்கலியாணஞ்செய்து பதினேழுபிள்ளைகளைப் பெற்றான்; பிருகு கியாதியைமணந்து விதாதா தாதாவென்னு மைந்தரை யும் இலக்குமியையுந்தந்து அக்கன்னிகையை விண்டுவுக்களித்து அதன்பின் னே தவத்தனின்றான். மரீசிசம்பூதியைக்கூடி நான்கு மாதர்களைப்பெற்றான். அவர்கள் மரபிற்பலருதித்தனர்புலத்தியன் நாரிசன்னதியைக்கலந்து அளவற்ற புத்திரராயீன்றான். ஆங்கீரசு ஸ்மிருதியைப்புணர்ந்து ஆங்கீரசன் பரத னென்னும் பிள்ளைகளையும் நான்குமாதர்களையும்பெற்றான். இவர்களால் அள வற்ற விருடிகளுண்டாயினர்; புலகன் பரியைத்தழுவித்தத்தாத்திரேயனைத்தந் தான். அவனிடத்திற் கும்பனுதித்தான். வசிட்டன் ஊர்வசியைமணந்து ஏழு பிள்ளைகளையும் ஒருபெண்ணையுந்தந்தான் அத்திரி அனசூயையைமணந்து சத்தி நேத்திரன் திங்கள்சனி சங்கதாவளனென்னும் பிள்ளைகளைப்பெற்று மேலும் இச்சுவாவென்பவளைமணந்துமூன்றுகுமாரரையும்பெற்றான்; கிருதுக்மையைத் தோய்ந்து மூன்றுபிள்ளைகளைப்பெற்றான்; விதாதா சவைபைக்கூடி மேனை

தாணியென்னும் பெண்களைப்பெற்முன். அவர்களில்மேனையை இமவான் திருக்கலியாணஞ்செய்தான். தாணியை மேருமணந்து மந்தாகிரியைப்பெறஅவன் அருந்தவங்களைச்செய்து முக்கட்பெருமானுகிய சிவபிரானனுக்கிரகத்தினுல் திருக்கயிலாயம்போலப் பரமசிவன் வதியப்பெற்றனன்; மேருபின்னும் வேலேயென்பவளைப்பெற்றுச் சமுத்திராசனுக்களிக்க அவளிடந்துச் சாவணியென்பவளையீன்று பிராசினருக்குத்தந்தான். அக்கன்னிக்குப் பத்துப்பிள்ளைகள் பிறந்தனர்; இவ்வகையாகப் புத்திரபவுத்திரர்களுதிக்க அவர்களாற்சிருட்டி விருத்தியாகிவருகின்றகாலத்தில் தக்கன் மீண்டும் இருபத்தேழு பெண்களைப் பெற்று அவர்கள் வனப்புக்குத் தகுதியாயிருக்குஞ் சோடசகலேகளையுடைய சந்திரனுக்கு வதுவைசெய்துகொடுத்துமருமகனைநோக்கி உன்றேவிமார் அனைவரையும் அபேதமாகவே தழுவிக்களித்திருப்பாயெனச்சொல்லிஅனுப்ப, அவ்வாறே தினமொரு கன்னியைக்கலந்து சஞ்சரிக்கின்ற காலத்திற் கார்த்திகை உரோகணி மற்றவர்களினும் வனப்புடையர்களாதலான் அவரிடத்து மிக்க மையல்கொண்டு இடைவிடாது தழுவியும் மற்றையரை நினையாமலும் பாராமலுந்திரிய அதைக்கண்ட அக்கன்னியர் மனம்பொருமற்கோபித்துவந்து பிதாவைக்கண்டு விழிகளில் நீர்பெருகத்துக்கித்துத் தங்கள்கொழுநன் செய்கையைச்சொல்லி முறையிட்டனர்.

அச்சொற்கள் செவிகளினிடத்திற் புகுந்தமாத்திரத்தில் தக்கனுக்கு மிக்ககோபம்தோன்றி விழிகள்சிவக்க மீசைதுடிக்கப் புருவநெற்றியிலேறச் சீறி நாங்கட்டளையிட்டதை யிகழ்ந்தகாரணத்தினுல்நீஇன்றுமுதல் தினமொரு கலேயாகக்குறைந்து மங்கிப்பலரும் இகழவருந்தக்கடவதென்று சபிக்க அக்கொடுமைமேலிட் டொருவருக்கும் உதவியற்ற செல்வத்தைப்பெற்றவன் புகழைப்போலச்சந்திரனது கலேகள்தினமொன்ருகப் பதினைந்துவரையிற்றேய்ந்து இவன்தான் திங்களாக வேண்டுமொன்றையுற்று அனைவருங்காண வொளிமழுங்கி ஒருகலேமாத்திரமிருக்கச் சந்திரன்வருந்தி வாடித்திகைத்துவெட்கி இனி இதற்கென்னசெய்வோமென்று எண்ணுதுமெண்ணி ஏங்கினவனுய்க் கடையில் இந்திரனிடத்துக்கோடி நண்பனே என்துயரத்தை யென்னென்று முறையிடப்போகிறேன் ஊரினெருவனே தோழனென்று உலகோர் சொல்லிக்கொள்வதைக்கருதி உன்னையடைந்தேன் என்குறைகளைக்கேட்டு இவைகளுக்கு நிவாரணந்தேடி என்துயரத்தைத் தீர்க்கவேண்டும் அதாவது எதோ தன்பெண்கள் சொல்லியதைமுக்கியமாகநினைந்து சற்றும்இரக்கமில்லாமல் தக்கன்சொல்லிய சாபத்தொடர்பினுல் என்கலேகள் அனைத்துமாறி ஒற்றைக்கலே மாத்திரம் நிற்கின்றது; அதுவும் இத்தினம்நீங்கும்போலும் அப்படிநேருமானுல் என்பெரும் பெருமையுங்குறைந்து யாவராலும்புகழுங் கீர்த்தியும்நசிக்க வசைபேசப்படும்; அப்பால்நானிருந்துஎன்னபயன்? ஆதலால்இதற்கொருவழியைக் காட்டி என்னைப்பாதுகாத்தல் உன்கடனென்றுவாடித் துக்கசாகரத்தில் அழுந்திச்சோருகின்ற சந்திரனை இந்திரன்தழுவி என்மனத்துக்கினிய நண்பனே! பயப்படவேண்டாமென்று சிலதயிரியமொழிகளைச் சொல்லித்தேற்றி அருகிலிருத்திக்கொண்டு சந்திரனேகேள் முன்னெருகாலத்தில் எமது இறைவனை

ழுந்தருளிய திருக்கயிலாயத்துக்கு நாமிருவருஞ்செல்கையில் பயற்றுண்டை வாழைக்கனி மாங்கனி பலாக்கனி கரும்புமுதலியவற்றை விநாயகமூர்த்தி திருத்தியாக உண்டு வயிறுபருத்து ஊர்த்தசுவாசம்விட்டிருப்பதை நீகண்டுநகைத்தாய்; அதைக்குறித்து அக்கடவுள்சீறி உன்னையாவரும் பாராமலிகழ்ந்து நிந்திக்கும்படி சண்டாளத்துவம். அடையக்கடவதெனச் சபித்தார் அந்நாள்முதலுன்சாயைத் தாக்குமாயிற் பாவம்நேருமென்று பலரும்வசைகூறி யுன்னைப் பாராமலிருப்பதைக்கண்டுவெட்கி நீ மறைந்ததைப் பிரமன்முதலோர் அறிந்து கயிலைக்குச்சென்று விநாயகக்கடவுளைப் பலமுறைவணங்கிப்போற்றி ஒருவராலும் அறியப்படாத தேவரீர் பெருமைகளைச் சந்திரன்தேறாத காரணத்தினால் நீசத்துவம்பெற்றுப் பங்கப்பட்டு ஒடுங்கி வருந்துகின்றான். அவனுதவி இவ்வுலகத்துக்குவேண்டும். ஆதலால்அடிகளிட்ட சாபத்தின்திறத்தைவழுவின்றி ஆண்டினொரு நாள்பெறவும் மற்றைநாட்களில் கிரமமாய் அவனதொருகலைநடாத்திவரவுங் கட்டளையிட வேண்டுமெனத் துதிப்பதற்கு இரக்கமடைந்து பிரமனே நின்வேண்டுகோளின்படி அனுக்கிரகஞ் செய்தனமென்று திருவாய்மலர்ந்து பின்னரும் அச்சாபத்தைப் பெறுங்காலமு நியமித்தனர்.

அவ்வாறே ஆண்டுதோறும் ஆவணிமாதப் பூர்வபக்கத் தமாவாசை சென்ற நான்காந்திதியில் உலகத்தார் உன்னைத் தரிசித்தால் சண்டாளத்துவமும் மகாபாதகமு நேருமெனப்பயந்து பாராமல் இகழ்ந்து, உன்சாயை பூவுலகத்திற் படுவதினால் உண்டாகுங்குற்றம் நீங்குதற்பொருட்டு, விநாயகக்கடவுளைப்பூசித்து வருகின்றனர். அந்நாள் விநாயகசதுர்த்தியெனப் பிரசித்தப்பட்டிருக்கின்றது. அப்பழி நீடித்திருக்க, மேலும் ஒருகுறையைத் தக்கனாற் பெற்று உன்பெயரும் பிரகாசமும் மேம்பாடும் அடங்கினாய்! ஆதலால் துரிதமாகப் பிரமன் சந்நிதானத்திற்சென்று அவருடன் இக்காரணங்களை முறையிட்டுக்கொள்ளுவையாயின் குமாரனுக்குணர்த்தி யல்லது தாமாவது இக்கொடுமையை விலக்கிக் காப்பாரென்று இந்திரன்சொல்ல சந்திரன் மகிழ்சிறந்து, தோழனே! நல்லமார்க்கத்தைக்காட்டினாய், அவ்வாறே செய்யக்கடவனென்று விடைபெற்றுக்கொண்டு மனோவதிக்குப்போய்த் தேவர் தபோதனர் சூழ்ந்துபோற்ற ஆயிரவிதழ்விரிந்த பொற்றாமரைபீடத் தெழுந்தருளிய பிதாமகனைச்சேவித்து மாமனால் தனக்குநேர்ந்த துன்பத்தை விண்ணப்பஞ்செய்து, தேவரீர் அடியேன் மனக்கிலேசத்தையும் இச்சாபசம்பந்தத்தினையும் நீக்கத் திருவுளம்கொண்டு உமது புத்திரனுக்குத் தெரியப்படச்சொல்லவேண்டுமென்று இரக்க, இக்கருமத்தைப் பிரமன் ஆலோசித்துச் சந்திரனைநோக்கி தக்கன் தன்மனப்படிக்கல்லது ஒருவர் சொல்லும் நற்காரியங்களையும் அங்கீகரிப்பவனல்லன், இஃதல்லாமலும் நமக்கடங்கி வார்த்தையாடவுமாட்டான், தன்னையே பரத்துவமாக நினைந்து வீறுப்படைந்து, ஆதியில் நான்போதித்த பரமசிவத்தின்பெருமைகளைக்கருதித்தவஞ்செய்திருந்த மகதைசுவரியம்பெற்று, அக்கடவுளையே மதியாமலுந் தான்வணங்குந்தேவர் முதல் தன்னைப்பணியத் தன்னாணையை எங்கு நடாத்திவருபவன் நான் சொல்லியுங்கேளான். சோதி வண்ணமுடைய பரமசிவத்தின்சந்நிதானத்திற்சென்று பலவகையாகப்போற்றி

யாவரேனும் தனக்குற்ற துன்பங்களை விண்ணப்பஞ்செய்து நிவாரணம்பெற லாம். தக்கன்முன்னின்றொருமொழியாவது பேசப்படுமோ! இவன் துரித மாக நாசமடைதற்பொருட்டு இக்கடுங்குணம்நேர்ந்தது. இவனால் யாங்கள் பெற்ற பதவிகளையும் பெருமைகளையும் இழக்கும் ஏதுவுமுண்டாம், இக்கார ணத்தைக்கருதியே பரமசிவம் இவனுக்கு இச்சிறந்தபேற்றைத்தந்தார். இவன் கொண்ட உறுதி எத்தன்மைத்தெனின், பிறவிக்குருடன் அறிவும் ஊன்று கோலுந் துணையுமில்லாது உலகை வலம்வரத்துணிந்ததற்கொக்கும். மேலும் நானவனுக் கினிமைகூறினுங் கோபித்திகழ்வதன்றியும் உன்சாபமுந்தீரான். ஆதலால் வேறொரு எண்ணமும்வேண்டுவதில்லை. வேதமுடிவாய் எம்போல் வார்க்கும் இறைவனாய் அடியார்க்கெளியனாய் எங்கும்பரிபூரணமாய் நிறைவெ ய்திநிற்கும் பரமேசுவரனைச்சரணடைந்து உன்மனக்கவலையினைமுறையிடுவை யாயின் பாதுகாத்து அருள்செய்வன். இதுவுனக்குத் தோன்றவில்லையோ? கலைகள் தேய்ந்ததைப்போலவே உன்விவேகமு மழுங்கியதோ? சிவபெரு மான் குணநிசயங்களை அறிந்திருந்தும் ஏன்மயங்குகின்றனை. இருண்ட விடத்திற்சூரியப்பிரகாசம் செலுத்த ஐயப்படுவார்களோ? நம்மையெல்லாம் மக்களாகப்படைத்த இவனிடத்து அன்பில்லாதாரையும் அப்பேற்றைக் கிடைத்தும் நற்கருமங்களைமுடித்து அவன் திருப்பாத நீழலைச் சேராதவர்க ளையும் நம்போலியர் கனவிலும் நினைக்கப்படுமோ? அதனாலுண்டாகும் நரக வேதனைகளை பேசவும்படுமோ? பத்திவயிராக்கியங்களைப்பெற்றுத் தம்மைத் துதிக்குந் தொண்டர்களைப்பரிந்து காக்குங் காரணத்தினாலன்றோ வெள்ளிமலை யிற் பரமசிவம் அருளுருப்பெற் றெழுந்தருளுவது; இஃதல்லாமலுந் தமது திருவடிகளை நம்பினவர்களுக்கடுத்த துன்பங்களைக் கனவிற்பட்ட பஞ்சைப் போல நீக்கிச் சனனசாபல்லிய மாக்கும்பொருட்டன்றோ? விடைக்கொடி யைநாட்டியிருக்கின்றது. சந்திரனே! இதற்கொருதிருட்டாந்தங்காட்டுவோம்.

முன்னாளில் தமது பாதகமலங்களைப் பத்தியுடன் அருச்சித்துச் சிக் கெனப்பற்றிய மார்க்கண்டன்மேல் எதிர்த்த எமனையுதைத்து அவ்விருடிக்கு நித்தியத்தைக்கடாட்சித்த சரித்திரத்தை அறியோமோ! திருப்பாற்கடலைக் கடையும்போது உண்டாகிய விடத்தைக்கண்டு நடுங்கி நாமனைவருஞ் சரண் புக பயப்படாதீர்களென்று ஆதரித்து அதனைக்கண்டத்தில் தரித்துக்காத்த தயாநிதியை மறக்கலாமோ? பராசத்தியினது அங்குலியினிடத்துதித்து உலக மெங்கும் அழித்துப்பெருகிய கங்கைக்காற்றுது நாமெல்லோரு முறையிட இரங்கிச் சடையிற்கரந்து நம்மோடு புவனங்களைக்காத்ததை நீயறியாயோ? சர்வமங்கள குணநிதியாகிய நமது இறைவன் தம்மடியவர்களிடத்திற் பெரு குங்கருணையைப் பேசப்படுமோ, அல்லது கணிக்கக்கூடுமோ, கருத்தினா லாயினு மறியலாமோ. சந்திரனே! பரமசிவன் திருவிளையாடல்களைக் கற்ப காலந் துதித்தாலும் முடியாது. ஆதலால் துரிதமாகத் திருக்கயிலைக்குச் சென்று மகாதேவன் பாதகமலங்களிற் சரணடைந்து இத்துயரத்தினை நீக் கிக்கொள்ளக்கடவாயென்று பிரமனருளியதைஉபதேசமாகக்கொண்டுஅவன் பாதங்களிற்றொழுது அடியேன் ஈடேறு மார்க்கத்தினைப்போதித்தீர். அவ்

வாறேமுடித்து இப்பாதகத்தை நீக்கிக்கொள்வனென விடைபெற்றுப்போய் ஞானநாயகனெழுந்தருளிய கயிலைமலையைச்சேர்ந்து நந்தியெம்பெருமானருள் பெற்றுஆலயத்திற்சென்று பரமசிவனைக்கண்டு விழிகளி லானந்தவாரி பெருக அட்டாங்க பஞ்சாங்க திரியாங்க ஏகாங்கமாக வலம்வந்துசேவித்து உபநிடத வாக்கியங்களினாற் பலவாறாகதுதித்துக் கரங்களைக்கூப்பிநிற்குஞ் சந்திரனைக் கருணையாகப்பார்த்து, நீ மிகவும் வருந்திவருங் காரணமென்னையென்று திரு வாய்மலர, சத்துருவாகிய இருள் வளைந்துகொண்டதைப்போலக் கலைகள் மாறிய சந்திரன் பரமசிவத்தைவணங்கி சுவாமி! கடினசித்தம்பெற்ற தக்க னிட்டசாப சம்பந்தத்தினாற் கலைகளனைத்துந் தேய்ந்து ஒன்றேயிருக்கின்றது. அதுவும் இன்றுடனீங்கும் ஆதலால் தீனதயாபரனே? கருணையாவிவ்வொரு கலைநிற்கவும் மற்றையவைகளுஞ்சேர்ந்து விர்த்திக்கவுங் கடாட்சிக்கவேண்டும்; தேவரீரையல்லது வேறுகதிகாணாது திருவடிகளில் தஞ்சமடைந்தேன், இறை வனேயென முறையிட்டுக்கொள்ளுஞ் சந்திரனுக்கிரங்கிப் பயப்படவேண்டா மென்று தேற்றினவராய் அவ்வொருகலையினையுந் தம்முடியில்புனைந்தவுடன் தக்கன்சாபம் நெருங்கப்பயந்தோடிற்று.

கேட்டீர்களா? சவுனகாதிமிருடிகளே? தேவர்களுக்குள்ள பல இன்னல் கலையும் நீக்கிப் பாதுகாக்க வல்ல மகாதேவனுக்கு இதுவுமொரு சிறப்பின் பாலதோ? தம்மையடுத்தவருக்கு உதவு முண்மையினை யாவருக்கும் அறிவிப் பதையொத்து அக்கலை சடைமுடியின்விளங்கியது; பின்பு சந்திரனே? இஃது நமது முடியின்கண் வதியப்பெற்ற மகிமையினால் அழிவுபடாது, இனி மற்றை யவைகளு மாறிமாறி தினமொன்றாக உன்னைக்கூடுவதல்லாமலும் இவ்வாறே பட்சங்கடோறுந் தேய்ந்தும் நிறைவெய்தியும் விளங்குமென்றருள சந்திரன் மனக்குறையினைநீங்கிமகிழ்சிறந்துஇறைவனைப்பலவாறாகத்துதித்துப்பன்முறை வணங்கி விடைபெற்றுப் போய் முன்போன்றே தன்செய்கையினை நடாத்தி னான்; இச்செய்கையை விண்டுமுதலிய தேவர்கள்கண்டு சந்திர னின்ன லைத் திருவுளங்கொண்டு தக்கன்சாபமும் வழுவாமல் தமது மகிமையினையுந் தெருட்டிய இறைவன் குணாதிசயங்களை யாவராலறியப்படு மென் றேத்தினர். பின்பு இக்காரணத்தைத்தக்கனறிந்து கோபித்துநானிட்டசாபத்தைச்சிவனோ தடுக்கவல்லானென்று நகைத்துப் பிரமன் விண்டுமுதலானோர் என்கட்டளை யைக்கடக்கவும் முன்னின்றொருகாரியத்தைக்குறிக்கவும்நடுங்குவார்கள்; அப் படியிருக்க தாய்தந்தையற்ற ஒருவனோ நீக்குவான், நல்லகாரியம்தான். பரம் பொருளென்றும் பிரமன்முதலானோரை அளித்துப் பஞ்சகிர்த்தியங்களைநடாத் திச் சர்வபரிபூரணமாயிருப்போனென்றுஞ்செருக்குவித்தானோ? அல்லதுநான் தன்னிடத்தே செல்வத்தைப்பெற்றுந் தன்னைத்தொழ வில்லையென்றிக்கருமத் தைமுடித்தானோவென்று பலநிந்தைகளைப் பேசுவதைத் தவசிரேமணியாகிய புலகர்கேட்டுமனம்பொறாமேலுப்புவமையற்ற இவனையிகழாதே இதனாற்சகல ரும்உன்னைப்புகழார்கள்; இஃதல்லாமலும் உன்செல்வமும் அழிவுபடுமென்று சொல்ல தக்கன்நகைத்துத்தவமுயற்சியினாலுண்டாகியஇப்பெருஞ்செல்வமொ ருபோது நீங்காது, இஃதொருதொழிலை முயன்றவனுக்கீந்தபரிசாகும், விண்டு

முதலியோ ரென்சொல்லை மறுக்க அஞ்சுவர். என்சம்மதமில்லாம லிதனைச் செய்யத்தகுமோ? உன்விவேகத்திற்கு மெச்சினேனென்று பழிப்புறாகூறிய பாதகனைப் புலகர்நோக்கி உன்னை யாவருமதிக்கினும் இவ்வகண்டசாம்ராச்சியம் நிலைபெற்றிருக்கினும் அவற்றையருளிய பரமசிவனை அவமதிப்பது தகுதியோ? ஒருநன்றிசெய்தவரை உயிருள்ளவரையினும்மறக்கலாகாதென்றதைத் தக்கன்கேட்டு நல்லகாரியம் அவ்வார்த்தை அனுவிப்பதற்கு முன்மாற்றவும் முடிவினல்லது ஒருகாரணத்தை நடாத்தவும் அவனாற்கூடுமோ? ஆதலால் என்னை என்னசெய்யப்படுமெனப்பேசுந் தக்கனுக்கு புலகர்சொல்லுகின்றார். நீகூறியவனைத்தும் உண்மையே, சிவனையிகழ்ந்தவர்களொருபோதும்ஈடேற அறியார்கள்; இது வேதசிவாகமத்துணிவு. இதனைக் கடைப்பிடியாகப்பற்றி அவனைத் தூறுமல இனிமுதற்பத்தியாக வழிபடவாய், தம்மைச்சரணடைந்தாரை ஆதரித்து அவர்கள்துன்பத்தைமாற்றி வேண்டும்வரங்களைத்தருவது பரசிவனுக்கியற்கையாதலான் அதையறிந்து சந்திரனடுத்தான், அவனுக்கு நேர்ந்தசாபத்தைப் பக்குவமாகவிலக்கிஉன்வார்த்தையும் பொய்க்காமல்தேயவும்வளரவும்அளித்தனர். அதற்கு மகிழ்வடையாமற் கோபிக்கலாமோ? மேலும் அச்சந்திரன் ஆர்? உன்மருமகனன்றோ? இனிப்பரமசிவனும் உனக்குமருமகனாக இருக்கின்றனன் இதனை நன்றாயோசித்து நடந்து கொள்ளுவையாயின் உன்புகழே நிலைபெற்றிருக்குமென்று பலவாறாக இறைவன் பெருமைகளனைத்தையும்எடுத்துக்காட்டத்தக்கன்கோபந்தணிந்துஇந்திரன்முதலானோர்போற்றஅரசுசெய்துவந்தான். கேட்டீர்களோ நைமிசாரணியவாசிகளே! இனிப் பராசத்தி அவன்பெண்ணாக வருங் காரணத்தையுஞ் சொல்லுவோமென்று சூதபுராணிகர் ஆரம்பித்தனர்.

உபதேசப்படலம்

முற்றிற்று.

---

## உமைகயிலைநீங்குபடலம்.

மாலுமயனுந்தேடற்கரிய சோதிமயமாகிய பரமசிவன் அடியவர்தரிசித்து ஈடேறத்தக்கதாக நிருமலமாகிய திருக்கயிலாயத்தின்கண் இடப்பாகத்தமர்ந்த பராசத்தியானவள் ஒருநினைவு கொண்டெழுந்து மகாதேவன் திருவடிகளிற் சேவித்து எம்மிறைவனே? உன்னைப்பற்ற நிச்சயஞானத்தைப்போதிக்க வேண்டுமென்றுவினவ பரமசிவனருளிச்செய்வாராயினர். பெண்ணேகேட்பாயாக? உருவங் குணஞ்செய்கை முதலியவை யொன்றுமின்றி நிர்மலமாய் எங்கு நிறைவெய்திய பரப்பிரமமாகிய சிவமானது பை முட்டை நிலம் வியர்வையென்னும் நால்வகைத்தோற்றம் தேவர் மக்கள் பைசாசு நாகர் விலங்கு பறவை செந்து என்னும் எழுவகைப்பிறப்பின் பிரிவாகிய எறும்புமுதல்யானையீறெனச்சொல்லும் எண்பத்துநான்கு நூறாயிர சிவபேதத்தினது விடயஞானமறப்பைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடலாகிய பொருளினாலும் சத்திமூலமாக நீத்தற்பொருட்டு தமது கருணையினின்றும் வகுத்ததும் அவளருளாற் கலைமகள் இலக்குமி இச்சாசத்தி கிரியாசத்தி ஞானசத்திகளை வகுத்ததும் இதற்குக்காரணமாகிய பரமசிவம் அருவுருவினைத் தாங்கியதும்

அவாருளிச்செய்த வேதாகமம் தருமசாத்திரம் புராணம் உபபுராணம் சங்கிதை மிருதிகளாதிகளால் சரியை கிரியையோக ஞான பாதங்கண்மூலமாக அதிகாரிகள் பிரயோசனங்களைப்பெற உருவாருவமாகிய சதாசிவவுருவாய் நின்றதும் ஞானேந்திரிய கன்மேந்திரிய விடயங்கள்பத்து இவை இருபதும் அசுத்தமாமென்றும் அந்தக்கரண சதுட்டயநான்காகிய மனம் புத்தி சித்தம் அகங்காரம் சுத்தாசுத்தமென்றும் அவைகளுக்கு மேலாய்க் கேவலவுருவம் பெற்ற ஈச்சுவரதத்துவத்தைச் சுத்தமென்றும் ஆக இருபத்தைந்து தத்துவ வடிவாய் அவர் நிறைவெய்திய பெருமையையும் அவாருளாற் பிரணவமுதித்த தும் அதினின்றும் முத்தொழில்களை நடாத்தும் மும்மைப் பெருந்தேவர் வடிவமாய் நிலைபெற்ற பேதங்களையும் இதுவல்லாமல் மாயாகாரண் மூலமாக முற்கூறிய முறையன்றி அசுத்ததத்துவ மிருபத்துநான்கும் காலம் நியதி கலை முதலாகிய சுத்தாசுத்த தத்துவங்களேழும் சுத்தவித்தை ஈச்சுவரம் சதாசிவம் சத்தி சிவம்என்னும் ஐந்துங்கூடிய முப்பத்தாறு தத்துவங்களைவகுத்த தும் அவைகட்குக்காரணமாகிய சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகமென்னும் பஞ்சகிர்த்தியங்களையுந் தமது கருணையினுற்படைத்ததும் மும்மையுலகங்களிற் சஞ்சரியாநின்ற மூவகை யாருயிர்த்தொகைகளைத் தொண்ணூற்ருறு தத்துவவுருவமாகவிரித்தும் காத்தும் மீட்டுந் தன்னுளொடுக்கிய காரணன் தானுயிருந்தும் மாயையாகியபடாம் அறிவைமயக்கயாவரும் அக்காரணன் பரமசிவனென்றறியாமல் மும்மைப்பெருந்தேவரினெருவனுக மயங்கச்செய்துதான் நிலைபெறநின்ற தமதியற்கைகளைத் தேவியுணரும் மார்க்கமாகா வேதகமவாய்மைகளினுன்மேற்சொல்லியவற்றைப்பரசிவப்பிரமமானது இருபத்தைந்து தத்துவவுருவமாயு நின்றதெனவே தொகையும் அவனருளால் ஆதிசத்தியாய் அவளாற் பஞ்சசத்திகளையுந்தரும்பொருட்டு அருவுருவமாகிய சதாசிவமாய் முப்பத்தாறுதத்துவங்களாக நிறைவெய்தியதெனவே வகையும் அவனருளாளனுகிய ஈஸ்வரன்குடிலை திரிமூர்த்திகளான்வகுக்காநின்றதொண்ணூற்ருறுதத்துவங்களாய் ஆன்மாக்கள்தோன்றியவழியே அடங்குதலென்ன விரியுமாக அருளிச்செய்தனர்.

அதைக்கேட்ட சுந்தரியானவள் சுவாமி தேவரீருக்கு உருவமில்லையென்றருளினீர். பின்பு பஞ்சமூர்த்திகளாகிய தோற்றங்களைக்காட்டிய காரணம் யாதென்றுவினவ கந்தனைப்பெற்ற கருணையாளன்சொல்லலாயினன். எமக்கு எக்காலத்தும் உருவமில்லை ஆயினும் முற்கூறிய பஞ்சமூர்த்தங்களும் நமதருளாற் பரசிவத்தில்தோன்றின அல்லது வேறில்லையென்று ஆதிபகவன்குறித்தவுடன் பலபுவனங்களையுமீன்ற கன்னிகையானவள் அதனையொருபிரயோசனமாகநினைந்து களித்தவளாய் அவ்வகையுருவனைத்தும் அருளினல் உதிக்கின்றதால் தேவரீர் அருள்எனதுருவென்பதை உண்மையாகக்கண்டனன்; அவையனைத்தும் என்னிடத்தில் தோன்றினவென்று மகிழ்ந்தபோது யானையுரியினைப் போர்த்த இறைவன் பெண்ணே உன்புகழை நமது சன்னிதானத்திற்பெருமையாக வியந்துகூறினுய்; மாசுற்றவுயிர்கடோறும் உலவி அவைகள் தெளிவுபெறச் செய்வதை நீங்குவோமாயின் அசைவற்றுச் சடமாயிருக்கும்; ஆதலால்

மற்றவைகள் அடையும் நிலைகளைப்பேசவும்வேண்டுமோ, மேலும் உன்னிடத்தும் யாம்பொருந்தாத காலத்து உன்னுயிரும் உணர்ச்சிபெறாது; அதனைக்காட்டுவோம் குறிப்பாயறிந்து கொள்வாயென்று பிரமன்முதலாகிய உயிர்களைப் படைக்குந் தொழிலை நீக்கினர். தேவாதிதேவனாகிய சிவபெருமானது செயலில்லாமையால் உயிர்களனைத்துஞ் சடமாய் ஓவியம்போல உணர்வற்றுச் சூத்திரதாரிபோல நின்றூட்டுவோன் அத்தொழிலைத்தவிர்த்தகாலத்து அவயவாதிகளா லலங்கரித்த பாவைகள்குலைந்து விழுமாறுபோலத் தன்னருட்டிறத்தினை நடாத்தலின்மையால் அளவற்றவுயிர்த் தொகையனைத்தும் மாய்ந்து போயின. இச்செயலைப் பகவதியார்கண்டுநடுநடுங்கி யிரக்கமாய்ப் பரமசிவனைச் சேவித்து எள்ளில்நெய்போல் எங்குநிறைந்து தேவரீரிருப்பதை யறியாமே பேசிய என்பொருட்டு உமதுகிருத்தியங்களைச் சர்வசங்காரகாலத்தைப்போற் சராசரங்கள்அனைத்தும் இருள்பட்டழியநீங்கினர். அது தேவரீருக்கு இமைப்போதாயினும் உயிர்களுக்கு அளவற்றயுகங்களாயின; அடியேன்செய்த பிழையினைப் பொறுத்தருளிப் பழையபடியே ஆன்மகோடிகளை அளிக்கவேண்டுமென்று பலமுறைதுதித்துவணங்கிநிற்க, இறைவன் திருவுளமிரங்கிச் சிருட்டிவிர்த்தியாதற்பொருட்டுத் தமதருளைப்பெற்ற உருத்திரகோடி வருக்கத்தவர்களுக்கு முன்னையுணர்வுண்டாக அவர்கள்படைப்பு மல்குவதாகப் பரமசிவத்தை அருச்சிக்கின்றபோது இறைவன் தோற்றங்காணாது வருந்திப் பூமியின்கண் அருச்சுனவட்டமாகிய திருவிடைமருதூரிற்சென்று வானிற்கதிரவனும் பூமியிற்கடலுமின்றி யெங்குமிகுந்த இருள்மூடி விளங்குகின்றதால் இந்நாள் பரமசிவத்தைப் பூசிக்கக்கடவோமென்று துணிந்து முக்கட்பெருமானை இருபத்தைந்தெழுத் துருவமாகிய காயத்திரியையுச்சரித்து வேதாகமப்படி பூசைக்குரிய உபகரணங்களை அமைத்து பிரமனும் விண்டுவும் இரவில் ஆராதித்தவாறே வழிபடக்கருதி விபூதி உருத்திராக்ஷ வகைகளையணிந்து முத்திக்குரிய பஞ்சாக்கரமுதலிய மந்திரங்களைச்சபித்து இறைவனை ஆவாகனித்து திருமஞ்சனதூபதீப வகைகளாகிய சோடசவுபசாரங்களையும் ஆகமவிதிப்படி நடாத்தி வில்வம் கொன்றை அறுகு முதலியபுட்பவகைகளினால் அருச்சித்து நான்கு சாமங்களினும் இறைவன் திருமந்திரங்களை உச்சரித்துப்பூசித்து நிரட்டுப்பால் பாற்சோறு கன்னல்முக்கனி இவைகளாற் சாமங்கடோறும் நிவேதித்துப் போற்றி வருகின்றகாலத்தில் அப்பூசையைவிரும்பி உருத்திரகோடிகளுக்குப் பிரசன்னமாய் அவர்கள் வேண்டுகோளை ஈடேற்றத் திருவுளங்கொண்டு சகல சீவராசிகளையுஞ் சிருட்டிக்கக் கருதியவுடன் பிரமன்விண்டு இந்திரன் மற்ற விண்ணவர் தபோதனர் நாகர் மானிடர் விலங்குகள்பறவைகள் ஆதியாகிய சராசரங்கள் மையல்நீங்கி நித்திரைதெளிந்தவர்களைப்போலவே எழுந்திருந்தனர். சூரியசந்திரர்முதலான நவக்கிரகங்கள் அட்டதிக்குப்பாலகர் சேடன் முதலியோர் தத்தந்தொழில்களில் முயன்றனர். இவ்வகையாகப் பரமசிவன்கட்டளைப்படி சகலப்பிரபஞ்சங்களும் முன்னைஞான்றுபோல நிலைபெற்றுவிளங்கின.

இக்காரணங்களைத் தேவர்கள் கண்டவுடன் இவையனைத்தும் பரமனுடலாமென்று அவன்மந்திரங்களைப்போற்றி வாழ்த்தினர்கள். அத்தருணத்தில்

உருத்திரகணங்கள் கர்த்தன் பெருமைகளைக்கொண்டாடியேத்தப்பரமசிவன் அவர்களுக்கு அருளிச்செய்வார்; நீங்கள் பத்திபூர்வகமாகப்பூசித்ததனாற் சகல சீவராசிகளும் உயிர்பெற்றெழுந்தன, அப்பத்திமை நமக்கேற்றதாதலால் உங்களுக்கு வேண்டியவரங்களைத்தரவிரும்பினேமென்றருள, உருத்திரர்சேவித்து அடியோங்கள் இட்டப்படி சராசரங்களைப் படைத்தீர், யாங்கள் பூசித்தவாறே இரவில் தினந்தோறும் யாவராயினும் அருச்சிப்பாராயின் மாசிமாதபூர்வ பக்கச் சதுர்த்தசியில் விளங்குஞ் சிவராத்திரிப் புண்ணியகாலப்பலனைத் தந்தருளவேண்டுமெனத் துதிக்க சிவபிரான் கிருபைகூர்ந்து உங்களைப்போலவே போற்றவர்க்கு அவ்வாறே தருவோமெனத் திருவாய்மலர்ந்தருளிக் கயிலையங் கிரிக்கெழுந்தருளினர். பின்பு உருத்திரகணங்கள் சிவத்தைவாழ்த்தி அவர்கள் பதங்களிற்சேர்ந்து தங்கள்தொழிலைச் செலுத்தியிருந்தனர். இவ்வகையாக யாவும் நிறைவெய்திய காலத்தில் பிரமன்முதலிய தேவர்கள் வெள்ளிமலைக்குப்போய்ப் பரமசிவனைச்சேவித்து தேவரீர் அனுக்கிரகமில்லாது அறிவழிந்து நெடுங்காலஞ் சடமாய்ப்பவத்தினாழ்ந்தோம், அதற்கு நீங்கள்கட்டளையிட வேண்டுமென அதற்குச் சிவபிரானிரங்கி நீங்கள் உணர்வழிந்து வேதவொழுக்கமாறி இருந்ததினால் அடைந்தபாதகம் உமையவளைச்சேரும். இதுமுதலாக உங்கள் நெறிகளில் வழுவின்றி நடந்துகொள்ளக் கடவீரென்றருள மகிழ்ந்து பரமசிவனைவணங்கி விண்டு பிரமன்முதலோர் தத்தம் பதவிகளிற்சேர்ந்தனர். அத்தருணத்தில் பராசத்தி சிவபிரானைத்தொழுது சீவராசிகளுக் கடுத்த வினைகள் என்னைச்சேருங் காரணத்தை அருளவேண்டுமெனக் கேட்க, நீயுன்னையிகழ்ந்த காரணத்தினால் யாம்விகற்பித்து உயிர்களிடத்துலவாது நீங்கினேம்; ஆதலால் அவையுணர்வற்றுப் பின்பு நமதனுக்கிரகத்தினெழுந்தால் அப்பாதகம் உன்னையணுகிற்று, மேலும்உன்னையல்லது அதனைப் பிராணிகள் தாங்கவறியுமோவென்று ஆதியில் தக்கனுக்களித்த வரத்தை நிறைவேற்றக் கருதிச் சொல்லியதைக்கேட்டு நடுங்கி அறிவில்லாதாள் பிழையை மன்னித்து அப்பாதகம் நீங்குமாறு போதிக்கவேண்டுமெனப்போற்ற, இரக்கமுற்றருளுவார். காளத்தையொப்பக்கறுத்து அமுதத்தினும் மதுரமாகிய சலசமர்த்தி பெற்ற காளிந்திமடுவில் நீ பிரணவவடிவாகிய வலம்புரிச்சங்கின் படிவமாய்த் தவஞ்செய்யக்கடவை, சிலநாளையில் தக்கன் அவ்விடம்வந்து உன்னையெடுக்கக் குழந்தையாகுவை, அதைக்கண்டு அவன்மகிழ்ந்து தன் தேவியிடத்திற் கொடுக்க, அவள் மகண்மைகொண்டு வளர்த்துவருகையில் ஐந்தாண்டு கழிய உனக்கறிவுதோன்றி நம்மைக்கருதித் தவஞ்செய்ய, காட்சியருளிமணந்து இவ்விடமழைத்து வருவோமென்றருள, அதற்குச் சம்மதித்து விடைபெற்று மனவாட்டத்துடன் உலகஞ்செய்த தவத்தாற்கடலைப்போலவிளங்குங் காளிந்திமடுக்கரையின்வந்து வேதமூலமான வலம்புரிவடிவுகொண்டு தாமரைப் பீடத்தமர்ந்து பஞ்சாக்கரத்தைச்சபித்து அளவிலாதகாலந் தவஞ்செய்திருந்தனள். சவுனகாதிகளே! இனிப்பராசத்தி தக்கனிடத்திற்சேருஞ் சரித்திரங்களைத் தெரிவிப்போமென்று சூதபுராணிகர் சொல்லலாயினர்.

உமைகயிலைநீங்குபடலம்
முற்றிற்று.

## காளிந்திப்படலம்.

அளவற்ற வளங்களைப்பெற்ற பூமிதேவியினது மலர்பொதுளிய அளக பாரத்தினையொத்துக் கமலமுதலிய புட்பங்களலர்ந்து விளங்குங் காளிந்தி யென்றொரு மடுவுண்டு அதன்பொலிவ்ாவன, தியாகிகளைப்போல இரத்தின வகைகளையுஞ் சாந்து அகில்பொற்சன்னங்களை அலைகளினுன்வழங்குஞ் சலப் பெருக்கை யுடையதாய் ஒப்பற்றுத்தோன்றும்; அதைச் சமுத்திரமென்று ஐயுற்று மேகங்களிறங்கவுஞ் சங்கினங்கள் பால்பெருகியதை நிகர்த்து ஊர்ந் திருக்க நீர் கறுத்துக்காட்டுவது பாற்கடலில் விண்டு பள்ளிகொண்டதைப் போலவிளங்கும் முதலைமச்சங்கள் பொரவோங்கியசலம் பொன்னுலகத்திற் பாய்ந்து சிதறிச் சோனைமாரியையொத்துச் சலசலவென்று உதிர்ந்தும், மதுக் குடங்க ளுடைந்ததைப்போலத் தாமரைமுகைகள் அலர்ந்து பெருகுந்தேன் அம்மடுவைக் குறைவறநிரப்பியுஞ் செங்காலன்னமுதலாகியபட்சிகள்தொனித் தும் பராசத்தி தன்னிடத்தின்வதியும் பேற்றையும் உடைய காளிந்திமடுவிற் புரசனங்க ளனைவரும் மாசிமகஸ்தானத்துக்குப்போவதைத் தக்கன் அறிந்து, நல்வினைப்பாலனுய்த தானுஞ்செல்வதைக்கருதி முந்தித்தன்தேவியைப் பல கன்னியர்சூழவனுப்பி, தேவர்போற்றத் தவத்தினர்வாழ்த்த யமுனைக்கு அரு கிலிருக்குங் காளிந்திமடுவைச்சேர்ந்து அதில் மூழ்கிவரும்போது, பராபரை தாமரைமலரில் சங்குருப்பெற்று இருப்பதைக்கண்டு களித்துக் கையினேந் தியவுடன் கோடிசூரியப்பிரகாசம்வாய்ந்த குழவியாய்த்தோற்றத் தேகபர வசனுய்ப் பிறை கங்கை கொன்றைசூடிய சிவபிரான் அனுக்கிரகப்படி பகவதி யாரே நமக்குப் புத்திரியானாளெனத்தெளிந்து, அமரர்கூட்டத்தை நீங்கித் தேவகன்னியர்வாழ்த்தக் கங்கையாடிவந்து, தருமசாத்திரங்களைக் கேட்டிருக் குந்தேவிகரங்களில் உலகமாதாவைக்கொடுக்க அவள்பரிந்துவாங்கிக்குழந்தை யின் வடிவைக்கண்டவுடன் தேகம்பூரித்துத்தழுவி முத்தமிட்டுக்கொங்கை களிற்சுரந்த பாலையூட்டித் தேவகன்னியருடன் விரைந்து தன்மாளிகையைச் சேர்ந்தனள், தக்கனும் பலருஞ்சூழ்ந்துபோற்ற அரண்மனையைக்கலந்து முறைப்படி சபாமண்டபத்தில்வீற்றிருந்து அரசுசெலுத்துவானாயினன்.

காளிந்திப்படலம்
முற்றிற்று.

## உமைதவம்புரிபடலம்.

சவுனகாதிரிஷிகளே! சந்தோடசாகரத்தில் திளைத்து அந்தப்புரத்திற் பிரவேசித்த வேதவல்லி அளவற்ற அண்டங்களுடன் உயிர்த்தொகைகளை ஆதியில் தமது உந்தியின்மூலமாகப்பெற்ற பராபரையைத் தன்பெண்ணாகப் பாவித்து எல்லாச்சிருடனும் காத்துவருங்காலத்தில் சந்திரனைப்போலத் தின மொருமேனியாய்வளர்ந்து தளர்நடைப்பருவந்தாண்டி ஞானம் அரும்பியதை யொத்துப் பலவரிசைகள்தோன்றி ஐந்தாண்டு நிறைவெய்தியபின், தமக்

கொருபாகமான பரமசிவனைச்சேரத் தவஞ்செய்யக்கருதி, தாய்தந்தையரை நோக்கி, நான் கங்கையையணிந்த இறைவனுக்கு உரியவளாகும் பேற்றை யுடையவள். ஆதலால் அக்கடவுள் என்னைத் திருமணமுடிக்கத் தவஞ்செய்ய வேண்டும். அதற்குத் தகுதியான இடமொன்றை அமைத்துத்தரக்கடவீர்க ளென்று கொஞ்சிச்சொல்லக்கேட்ட தாய்தந்தையர்மகிழ்ந்து, தங்கள் அரண் மனைக்கருகில் இரத்தினமயமாகிய கன்னிமாடமொன்றைச் செய்வித்து மும் மையுலகங்களையுமீன்ற தாயாகிய பகவதியைத் தங்கள்புத்திரியென்னும் பரிவி னாற் பலதரம் உச்சியைமோந்து முத்தமிட்டுத் தழுவிப் பெருமூச்செறிந்து அம்மா! உன்கருத்தின்படித் தவஞ்செய்யப் போகலாமென்று அளவற்ற பாங்கி யர்தோழியர் சிலதியரைக்கூட்டியனுப்ப, பகவதியும் அவர்களிடத்தில் விடை பெற்றுச்சென்ற தறுவாயில், வேதவல்லி தன்கணவனைத்தொழுது, நமது புத் திரி அதிபாலையாயிருந்துஞ் சிவபிரானைக்கருதித் தவஞ்செய்யநினைந்த காரண மென்னவென்று வினவ, கேளாய்பெண்ணே! ஆதியில்யான் மானதமடுக்க ரையிற்செய்த தவத்துக்கிரங்கி பரமசிவனெழுந்தருளிவேண்டியவரங்கங்களைக் கொடுக்கப்பெற்றகாலத்தில் இறைவனே, தேவரீர் இடப்பாகத்தமர்ந்த உமை யவள் அடியேன்பெண்ணாகவும், நீர் மருமகனாகப் பிராமணக்கோலமாய் எழுந் தருளித் திருமணஞ்செய்து கொண்டுபோகவும்வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தேன். அவ்வாறே கடாட்சித்துத் திருக்கயிலைக்கெழுந்தருளினர். சில நாள்கழிந்தபின்பு தாம் அனுக்கிரகஞ்செய்தபடி இடபவாகனமூர்த்தியான பரமன் உலகமாதாவை நமக்குப்புத்திரியாகும்பொருட்டுக் காளிந்திமடுவிற் செலுத்த யாஞ்செய்ததவமுயற்சியினாற் கிடையாதபாக்கியத்தைப்பெற்றோம். ஆதலால் அவள் எக்காலத்தும் அறிவுடன் விளங்குகின்றனள். இஃதன்றியுஞ் சிலநாள் தவஞ்செய்து பரமசிவனுக்குப் பாரியாவள். இக்காரணத்தினால் அவளை நமதுபெண்ணெனச் சுலபமாக நினைக்கவேண்டாமென்றுசொல்ல, வேதவல்லி அற்புதத்தையடைந்து களித்திருந்தாள். இப்பால் பகவதியாகிய கன்னிகை தனக்கேற்படுத்திய சாலையிற்சேர்ந்து தோழிகள்சூழ்ந்து பணி விடைகளைச்செய்துபோற்ற வேதவிதிப்படிப் பஞ்சாக்கரத்தை இடைவிடாது சபித்து பரமேசுவரனைக்கருதி அரியதவங்களைச்செய்துவருகின்ற தறுவாயில பேதைபெதும்பைக்கு மேலாகிய மங்கைப்பருவநேர்ந்து பன்னிரண்டுவயது பெற்றதருணத்தில் அடியார்கள்கோரிக்கைகளை யீடேறச்செய்யும்வண்மையை யுடைய சிவபிரான் பகவதியின் தவவுறுதியைச் சோதிக்கக் கருணைமேற்கொ ண்டு திருக்கயிலையை நீங்கி விருத்தப்பிராமணனாய்த் தருப்பைமுடிந்து விளங் குந் திரிதண்டத்தினைக் கரத்திற்பற்றி வேதங்கள் கிண்கிணியாகச் சூழ்ந்திருக் கும்பாதமலர்கள் கன்றப்பூலோகத்தார் ஈடேறத் தள்ளாடிச்சென்று தக்கமா புரத்தைச்சேர்ந்து உலகநாயகி தவஞ்செய்யும் அரண்மனைமுகவாயிலில்வர அவ்விடத்திற் காவல்கொண்டு நிற்கின்றபெண்கள் எதிர்கொண்டு வணங்கிப் போற்றுகையில் அவர்களைக் கிருபையாகப் பார்த்தருளி என்வரவை உங்க ளிறைவிக்கு அறிக்கையிடக் கடவீர்களென்று திருவாய்மலர்ந்தவுடன் அவர் களிற் சிலரோடிப் பகவதி பாதங்களில் தொழுது தாயே ஒருவிருத்த வேதி

யர் முகவாயிலில் எழுந்தருளி தமதுவரவை உமக்கு அறிவிக்கச் சொல்லி ணுரென்று விண்ணப்பஞ்செய்தனர், அம்மைமகிழ்ந்து விரைவில் அம்மாதவரை அழைத்துவருவீர்களென்று ஆஞ்ஞாபித்தவுடன் தீவிரமாகச்சென்று சுவாமீ எமதிறைவி தேவரீரைப்பார்க்க விருப்புற்றிருக்கின்றனள்; வாருமெனச் சொல்லியவுடன் உள்ளே பிரவேசித்துத் தமதுதேவிவீற்றிருக்குஞ்சாலையைச் சேருங்காலையில் சிவபிரான் திவ்வியமங்களவடிவுள்ள பிராமணனாகிவரக் கண்டவுடன் மனங்களித்தவளாய் எதிர்கொண்டு எமதிறைவருக்குஅன்பரிவனொன்று பத்திவிசுவாசத்துடன்சேவித்துத் தமது இருப்பிடத்துக்கு அழைத்துப்போய் பொற்பீடத்தில் வீற்றிருக்கச்செய்து விதிப்படி அநேகர் முக்குடிநீர் முதலான உபசாரங்களைமுடித்துக் கரங்களைக்கூப்பிநிற்கின்ற கன்னியைக்கருணையாகப் பார்த்தருளி பசியஞாயிறுருத்தவடிவினையுங் களங்கரகிதமாய்விளங்கும் பூர்ண சந்திரனைப்பழித்த திருமுகத்தையும்பெற்ற பெண்ணரசே? நாமொரு பயனை விழைந்து இவ்விடம்வந்தோம்; அதனைமறுது தருவையானுற் சொல்லுவோமென்று திருவாய்மலரக்கேட்ட பராபரை என்னால்முடியுங் கருமத்துக்குத் தடையிராது, அருளிச்செய்க வென்றலும் புன்முறுவலுடன் உம்மைத் திருமணஞ்செய்ய விரும்பிவந்தோம்; அதைத் தடைசெய்யாமல் இசையவேண்டுமென்று நயமொழிகளாற் சொன்ன மாத்திரத்தில் செவிகளைப்பொத்திப் பஞ்சாக்கரத்தைச் சபித்துச்சிந்தையும் உடலுந் திடுக்கிட்டு நடுங்கப் பெருமூச்செறிந்து கோபித்து லோகநாயகனைக் கடிமணஞ்செய்யக்கருதித் தவஞ்செயும் என்னை இச்சித்து இவ்வார்த்தைகளைப்பேசப் படுமோவென்று சிறிச்சொன்னமாத்திரத்தில் கபடவேதியன் நகைத்து குறிகுணஞ்செய்கையற்றவனுய் மகத்துக்களுக்குங் காணப்படாத இறைவனுகிய பரமசிவன் உன்னை மணஞ்செய்வது அரிது அரிது; ஏன்வீணுகத்தவத்தைச்செய்துவருந்தித் தேகமெலிய வயதை அவத்திற்கழிக்கின்றுய், நான்கேட்டுக்கொண்டபடிசம்மதிப்பையாயின் இம்மையிற் பெறும்பயன் சித்திக்கும்; ஏன்வீணெண்ணங்கொண்டு வாடுகிருய் என்று சொன்னதைக்கேட்டு மனம்பதைக்க எமதிறைவி வேதியனைப்பார்த்து பரமன் எழுந்தருளிப் பாணிக்கிரகணஞ்செய்தற்கரிய விரதங்களைச்செய்வேன் அதற்கு இறைவனிரங்கிக் காட்சிகொடுக்காமற் போவானுயின் நான் மனம் வருந்திநின்று வலிதிற்பிராணனை இழக்க நிச்சயித்திருக்கின்றேன். இதுசத்தியமாகும். நீர் பித்தனுதலால், இவ்விதபாதகத்திற்கு ஏதுவான வாக்கியங்களைப் பேசிக்கொண்டிருக்கின்றீர். உம்மைப்பார்க்கச் சகிக்கப்படவில்லை. புறம்பிற் போம்போமென்று கோபித்துச்சொல்லி, விரைந்துசென்று பக்கத்திலோரிடத்திலிருந்தாள். அம்மை குறிகுணங்களையும் புத்தியையுங்கண்ட பரமசிவன் மகிழ்ந்து, அவ்விடத்திற்சூழ்ந்திருக்குந் தோழிகளுக்குத் தோற்ருது தமது தரிசனத்தைக்காட்ட, அச்சேவையைக்கண்ட பகவதிநடுநடுங்கி, விழிகளில் ஆனந்தவாரிபெருகத் தேகம்பூரித்து, நமதிறைவரொன்று அறியாது பிராமணனென்றெண்ணி இகழ்ந்து இழிவாக வசனித்தோமென்னும் பயத்துடன்வலம் வந்து, பாதாரவிந்தங்களிற்சேவித்து, அறிவின்மையால் தேவரீர் மாயையைத் தெரியாமல் தூறினேன். உமது அனுக்கிரகமிருக்குமாயின், சகல உணர்ச்சி

களையும் பெற்றிருப்பேன். ஆதலால், அடியேன்செய்த பிழைகளையெல்லாம் பொறுத்துக்காக்க வேண்டுமென்று போற்றுந் தேவியைக் கிருபையாகப்பார்த்தருளி, உன் மனவுறுதிக்கும் அன்புக்கும்மெச்சினோம், பயப்படவேண்டாமென்று ஆதரித்த கர்த்தனை மீளவுஞ்சேவித்து, பத்தியுடன் சிவபிரான்பெருமைகளைப்போற்றி, விழிகள் இமையாது ஆனந்தவாரியில்திளைத்து மனங்குழைந்துநிற்பதைத் தோழிகள்பார்த்து, இதுஎன்ன அதிசயமாயிருக்கின்றது, இராசபுத்திரி நம்மைநோக்காள். வசனித்தவளுமல்லள், வந்த வந்தணன்மாயாவாதியைப்போற்காணுகின்றது. இனி இதன்காரணங்களை வெளிப்படையாகத்தெரிய இருக்கின்றேமெனச் சிலர்சங்கையுற்றுநிற்கவும், அரசன் இச்செய்திகளை அறிவானாயின், என்னதண்டனைகிடைக்குமோவென்று சிலரேங்கவும், இவ்வகையாகக்கலங்குகையில், சிலசேடியர் அரண்மனையைநோக்கியோடித் தக்கனைக்கண்டுசேவித்து சுவாமி! உமதுபெண் தவஞ்செய்கின்ற இடத்தில் ஒரு பிராமணன் வந்தான், அவனைக்கண்டவுடன் முன்னம்பழகினவளைப்போல அவன்மையலில் அகப்பட்டு எங்களைப்பாராள். தவஞ்செய்வதையும் மறந்து திப்பிரமைகொண்டிருக்கின்றாள். இச்செய்தி தேவரீர்சித்தம் அறிகவென்று விண்ணப்பஞ்செய்ததைக்கேட்ட தக்கன் போதவுணர்வினாற் பரமேசுவரன் எழுந்தருளினானென்றறிந்து களித்துத்துள்ளிக்கூத்தாடி என்புத்திரியை இறைவனுக்குத் திருக்கலியாணஞ்செய்துகொடுப்பேனென்று நிச்சயங்கொண்டான்.

உமைதவம்புரிபடலம்
முற்றிற்று.

---

## திருமணப்படம்.

---

அதன் பின்பு திருமணஞ்செய்யக் காலம்பார்க்குமிடத்தில் தன்பெண்ணுக்கும் பரமசிவனுக்கும் பொருத்தமுதலியவைகள் அனைத்தும் அத்தினமே சுபகரமாகக் கண்டபடியாற்களித்து, அவ்வாறேமுடிக்க நினைந்தானாய், அம்மகோச்சவத்துக்குத் தேவர்கள் முற்றத்துறந்த முனிவர்கள் முதலியோர் மிக விரைவில்வந்து சேரும்படிக்குச் சொல்லிவருவதாகப் பலதூதரைத்தூத்தி தன் பட்டணத்தை அலங்கரிக்கக்கட்டளையிட்டான். அவ்வாறேமாடமாளிகைகளைத்திருத்தி, பனிநீரினால் தெருக்களில் துகளையடக்கி, சந்தனக்குழம்பினால் முற்றங்களை மெழுகிக்கோலமிட்டு, பூர்ணகும்பங்கள் அமைத்து, மகர தோரணங்கள்கட்டி, கொடிகளைநாட்டி, கமுகுகதலிகளை எங்கும்நிறுத்தி, மற்றச்சிறப்புகளையும் அலங்கரித்து, மேலும் அரசன் வாசஞ்செய்யும் அரண்மனை முன்னிலும் பதின்மணங்கு மிக்கசிறப்புள்ளதாய்த் தெய்வலோகமும் காணும்படி நவரத்தினமயமாகவலங்கரித்து விதானங்களைத்தூக்கி, மணப்பந்தலுஞ் செய்துமுடித்து அறிக்கையிட, தக்கன் மகிழ்சிறந்து, மின்னலையொத்த இடையையுடைய பகவதி தவஞ்செய்யுங் கன்னிமாடத்திற்போய், பரமசிவத்தைத் துதித்துவணங்கிக் கரங்களைக்கூப்பி தேவாதிதேவர் தேவரீரைத்

திருக்கலியாணஞ்செய்ய அடியேன்புத்திரி அரியதவங்களைச் செய்தாள் ஆதலால் கிருபையுற்றுக் கிருகத்துக்கு எழுந்தருளி என் கன்னியைத் தத்தஞ்செய்து கொடுக்கப் பெற்றுப்போக வேண்டுமென்று துதிக்குந்தக்கனிடத்து அன்பாய்ச் சம்மதித்து பகவதியுடன் தவச்சாலையைக்கடந்து வீரகண்டை யணிந்த பாதாரவிந்தங்கள் சிவக்கநடந்து தக்கன்மாளிகை முகவாயிலுக் கருகில் வந்தவுடன் சுமங்கிலிகள் எண்வகை மங்கலஆலத்திகளையேந்தி எதிர்கொண்டு சுழற்றி மீண்டபின்பு உள்ளேபுகுந்து கலியாணமண்டபத்தில் இரத்தினமயமாய் விளங்குஞ் சிங்காதனத்தின்மேல் எழுந்தருளினர்.

அக்காலத்திற் பகவதியை வேதவல்லிகண்டு பரிவாய் வரவழைத்துத் தழுவி முத்தமிட்டு தன்னரண்மனைக்கு அழைத்துப்போய் பரிமளமிகுத்த தயிலத்தைத்திமிர்ந்து, பின்னல்களை மெல்லெனச்சிக்கறுத்து, மங்கலவாழ்த்துகளைச்சொல்லி, பலகன்னியர்கள்க லங்கிட்டு கங்காசலங்களினல் ஸ்தானஞ் செய்வித்து, பனியைப்போன்ற வஸ்திரத்தினல் ஈரத்தைப்புலர்த்தி, அகிற்சந்தனப்புகையையூட்டி, விலையுயர்ந்த பீதாம்பரத்தையுடுத்தி சிரோரத்தினுபரணங்களைப்பூட்டி, தனங்களினிடத்தில் தொய்யில்கொட்டி பிறையையொத்து விளங்கும் நுதலில்திலதந்தீட்டி, திவ்வியபரிமளக்கலவைச்சாந்துகளை யூட்டி, மணமிகுந்த புட்பமாலைகளைச்சூட்டி, திருவழகை ஆடியிற்காட்டி, தீட்டி வீட்டி, சேடியர்களைக்கூட்டி போற்றுதனுட்டி, பெண்கள்கிரீடியான அம்மையைப் பரமேட்டி யிடப்பாகத்திற் கூட்டினர்கள். அந்தச்சுப ஓரையிற் பலமங்கலவாத்தியங்களும, சமுத்திரகோட்டத்தினு மேலிட்டுத் தொனிக்கவும், வேதவாக்கியங்களினல். இருடிபுங்கவர்கள் வாழ்த்தவுங் கற்பகம் மந்தாரந் தேவதாரம் பாரிசாதமுதலாகிய மலர்களைத் தேடுந்தருணத்தில், முன்னந் தூதர்களோடிச் சோபனஞ்சொல்லக்கேட்ட விட்டுணு பிரமனுதியோர்கள் பூவினிடத்தில்தேனைக்கிரகிக்க வண்டின்கூட்டங்கள் பலதிக்கினுமிருந்துவந்து இசைகளாற்றொனித்து மொய்ப்பதைப்போல, உலகநாயகனைச்சூழ்ந்து சேவித்துப்போற்றிநின்றனர். அச்சமையத்தில் தும்புருநாரதர்யாழினிடத்துப் பரமன் புகழ்களைப்பாடவும், கருடர் காந்தருவர் சித்தர் வித்தியாதரர் கின்னரர் வீணைகளைமீட்டித் தேவாதிதேவன் பெருமைகளைக் செவிகளுக்கின்பமாகத் துதிக்கவும், இலக்குமி சரசுவதி தேவகன்னியர் உலகநாயகியைச்சூழ்ந்து கற்பகமலர்களை இறைத்து மங்கலவாழ்த்துக்களைப் பாடிக்களித்திருக்கவும், இவ்வகையாகச் சகலரும் சந்தோடசாகரத்தில் மூழ்கிக்களித்திருக்கின்றதருணத்தில், முகூர்த்தகாலம் நேர்ந்தபடியால், பிரமன்முதலானவர்கள்சூழ வேதங்கள்முழங்க, தக்கனுனவன் பரமேசுவரன் சந்நிதானத்தில்வந்து, தேவியாகிய வேதவல்லி பொற்கரகத்திற் கங்காசலமேந்திவிட, சிவத்தின் பாதகமலங்களை விளக்கி, கற்பகமலர்களினல் அருச்சித்து, தூபதீபங்கள்கொடுத்து, தேவர் இருடிகளாதியானவர்கள்போற்ற கன்னிகாதானஞ்செய்ய உத்தேசித்து, சிவபிரான் திருக்கரத்திற் பார்ப்பதி கரகமலங்களைச்சேர்த்து தேவாதிதேவனே அருமையாகவளர்த்த விக்கன்னியைத் தேவரீருக்குப் பாரியாகக்கொடுத்தோம். செல்வமாக வாழ்திருப்பீர்களென்று, தன்பத்தினி சலம்வார்க்க

கண்ணன் பிரமன் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகள் முதலானவர் துதிக்க திருமகள் கலைமகள்முதலிய மங்கையர்மங்கல வாழ்த்தெடுப்ப, கன்னிகாதானஞ்செய்தான். அக்கலியாண மகோற்சவத்தை நேத்திரோச்சவமாகத் தெரிசித்த விண்ணவர் மண்ணவர் நாகர் பூர்ண சந்திரோதயம்கண்ட சமுத்திரத்தைப்போல திசைகளெங்கும் செவிடுபட, உத்தரியங்களை வீசிச்சுபங்களைக்கொண்டாடிப்போற்றுகையில்உருவம்செயல்நாமம் நீங்கி எள்ளுக்குள் நெய்போற் சராசரப்பிரபஞ்சங்க ளனைத்தினும் பொருந்தி அவற்றின் வினைப்போகங்களை யூட்டி நடிப்பிக்குமிறைவன் இவ்வகைத் திருவிளையாடல்களை முடித்தவுடன் விரைவில் மின்னலையொத்து மறைந்தார்.

அக்காலத்தில் உமையவள் தன்பால் வீற்றிருந்த நாயகனைக் காணுமையால் அரியதவத்திற்பெற்ற செல்வத்தை இழந்தவர்களை நிகர்த்து உற்சாகம் நீங்கிவருந்தி மணப்பீடத்தி னின்றுமெழுந்து திருமகள் கலைமகள் இந்திராணி முதலிய கன்னியர் இருக்குமிடத்திற்சென்று அக்கினியிற்பட்டு உருகிய தங்கத்தைப்போற்கரைந்துகரைந்து ஏக்கமுற்று பெருமூச்செறிந்து மருண்டு சோபித்து வாடித்தேகமெங்கும் முத்துக்களைப்போல வியர்க்கவெதும்பி கணவன் திருக்கோலத்தை நினைந்து விண்டு இறை வானவர் நெருங்கிய இந்தமகாசபையில் வீற்றிருந்த முதலன் மறைந்ததாற் கள்வனோ? அன்று திருக்கயிலையைக் கடந்து பாதகமலங்கள்நோவ இவ்விடமெழுந்தருளி அடியேனை ஒருபொருளாகநினைந்து மணஞ்செய்தநாயகனைக் கள்ளனென்றெண்ணப்படுமோ! கொடியாளாகிய யான்சரீரம் வருந்திச் செய்ததவம் சிறிதென நினையாமற் பிதற்றுவதடாதென்றும் பலபல வகைகளாகப் பன்னிவருந்தும் பார்ப்பதியை மிக்க மணத்தைவாய்ந்த அளகத்தையுடைய வேதவல்லி தழுவியணைத்து தாயே வருந்தாதை உன்கணவனைச் சேருகிறவனாயில் தவத்தைச் செய்திருப்பாயென்று தேற்றும்போது பக்கத்தில்நின்ற பூமகள் நாமகள்முதலோர் அம்மனையைப்பார்த்து, லோகநாயகியேவாழி! சகலபுவன சராசரங்களையும் உண்டுபண்ணுவீர். எல்லாமுமது சொரூபமாகும் கபடநாடக சூத்திராவதாரியாகிய உமதுகணவனெங்கும்போகார். அவருக்கொருமறைவுமுண்டோ? தவத்தைத் தொடங்கக் கருதினையோ? உங்கள் திருவிளையாடல்களை அளவிடப்படுமோ? முழுதும் யாவராற் கண்டறியலாம்; மனத்தால் தேடற்கரியலாம்; மனத்தால் தேடற்கரிய உமதுகணவனையும் உம்மையுந்தரிசிக்கப்பெற்று சகலவினைகளனைத்தும்போக்கினோம். சனனவாதனைஒழிந்தோம், ஞானவாரி மனத்திற்பெருகித் தேக்கக்கண்டோம், கிருதார்த்தரானோம், நாங்கள்செய்ததவம்சிறிதன்றென்று கொண்டாடித்தேற்றினர்கள். அப்போது பரமேசுவரி அவர்களைக் கருணையாகப்பார்த்து மனக்கோட்டம்நீங்கித் தவஞ்செய்வதாகமுன்னந்தாமிருந்தஇடத்தைச்சேர்ந்தனள். இவைகள் அனைத்தையும் விஷ்ணுமூர்த்தி முதலானவர்கள் கண்டு அற்புதமெய்தி இறைவனெங்கே சென்ருர்? இதுவுமொரு மாயாவிலாசமாகும், தமதுநாயகிக்களித்த காரணமின்னதென்று தோன்றவில்லை, யாவும் பின்னுற் காண்போமென்று இவ்வகையாக ஊகித்துமயங்கிமேகத்தில் மறைந்த சந்திரனையொத்து மதிமருண்டு வருந்தினர்கள். இவைகளையெல்லாம் தக்கன்

கண்டுவடவானலம்போற்கோபித்துக்கண்களில்அக்கினிப்பொறிபறக்கப்பெரு மூச்செறிந்து பொற்கடகங்கள் தரித்தகைகளைத்தட்டி, மூக்கின்மேல் விரலை வைத்து நல்லகாரியம் நல்லகாரியமென்று தேகமெங்கும் புகையெழநகைத்து நவரத்தினமயமான கிரீடந்தாங்கிய சிரத்தையசைத்து மனவெழுச்சிபெற நாம்செய்தமணம் வெகுநேர்த்தியென்று சபையோரைப்பார்த்துச் சொல்லுவாளுயினன் வேண்டியவரங்களைச் சகலருக்குங்கொடுக்குந் திறம்பெற்றதான் என்பெண்ணைக் குறித்துவந்தவளைப் பாணிக்கிரகணஞ் செய்துகொள்ளவேண்டுமென்று இரந்தான், அதைநானறிந்து வேதவிதிப்படி தேவர்கள்சூழ அக்கினி சான்றாக கன்னிகாதானஞ் செய்யப்பெற்றும்அவன் யாவரும்நகைக்க நிரோதுவாகமறையக் காரணமென்ன! நான் அருமையாக வளர்த்தபெண்ணைத் தேடிவருவானேன், பின்பு இப்படிசெய்யத்தகாத காரியத்தைமுடிக்கஎன்னிடத்தே தேனும் குற்றங்கண்டானோ இப்படி அனைவரையும் கலங்கச்செய்து சகலபுவனங்களும் போற்றிவணங்கும் என்னையும் தீராப்பழியில் மூழ்கச்செய்து முன் பின் சிறிதாவது ஆராயாமல் திருடனைப்போல் மறைந்தான். தாய்தந்தையர் சுற்ற மொருவருமில்லாமற் சுடலையே இடமாகக்கொண்டு நடிக்கும்பித்தன் பிராமணனாகிவந்ததனால் அம்மைய லொழிகின்றதோ, அவன் நடக்கைகளனைத்தும் பொல்லாங்கென்பதை இந்நாள் திருட்டாந்தரமாகவே கண்டோமென்று அக்கினியைப்போற் பொங்கி விண்டுமுதலானவர்களை அனுப்பிவிட்டு பரமசிவன்செய்த காரியத்தை எண்ணி எண்ணி மனத்தில் வன்மத்தைப்பெற்றுத் தன் அரசாட்சியைச்செலுத்தி யாவரும் வணங்க வாழ்ந்திருந்தான்.

இப்பால் கலியாணமண்டபத்தை நீங்கிச்சென்றபராபரைமுன்போல்அருந் தவங்களைச்செய்து வருங்காலையில் ஒருசுபதினத்திற் சிவபிரான் தவவேடம் பூண்டு சிரமாலையணிந்து பவித்திரமாகிய திருவெண்ணீறு தம்முடலெங்கும் விளங்கமார்பில்கணிமணித்துண்டு முப்புரிநூலும் அசையபாதாரவிந்தங்களின் வேதநூபுரம் சத்திக்க சிவந்தசடைகள் விரிந்துதோற்றவலக்கரத்திற் சூலந்தாங்கி உமையவள் தவஞ்செய்யுமிடத்திற்கு வருவதை எம்மிறைவிகண்டவுடன் திடுக்கிட்டெழுந்து நமது இறைவனுக்கு அன்பரொழுந்தருளினானென்னும் பத்தி விசுவாசத்துடன் எதிர்கொண்டு சேவித்து உபசரித்தனள், அப்போது இறைவன் அவளன்புக்கிரங்கி மான்மழுசூலம் அபயவரதம்விளங்கிய சதுர்ப்புயங்களும்தோன்றப் பராசத்தி நீங்கிய பாகமுடையராய் இடபவாகனத்தில்தோன்ற உலகநாயகி தரிசித்து மனக்கோட்டம்நீங்கி ஆனந்தவாரியில்திளைத்து அடியேனிடத்துக் கருணையாய் இறையவனெழுந்தருளினானென்னும் மனச்செருக்குடன் பலமுறைசேவித்துப்போற்றி பத்தவற்சலா! அன்பருக்கெளிய தயாநிதியே! சிறியவளிடத்திருக்குங்குற்றங்களை மன்னித்துப் பாதுகாப்பீரெனத்துதிக்குந் தேவியினிடத்துப் பரிவாய்த் தாமரைமலரைப் பழித்துவிளங்குந் திருக்கரத்தைநீட்டி எடுத்து சத்துருக்களைச்சாடும் வெற்றிபெற்ற விடையின்மேல் தமது வாமபாகத்திலிருத்திக் கணநாதர்சூழ்ந்துபோற்ற திருக்கயிலாயமலையை யடைந்து முன்போல் தமது ஆலயத்தில் உமாமகேசுவரமூர்த்தமாய்வீற்றிருந்தனர், இக்காரணத்தைக்கண்ட தோழியர் நடுநடுங்கித் திடுக்கிட்டோடிச் சபா

மண்டபத்தில் வீற்றிருக்குந் தக்கனைச்சேவித்து சுவாமி செக்கரஞ்சடையானாகிய பரமசிவன் தவக்கோலங் கொண்டெழுந்தருளத் தேவரீர்புத்திரிகண்டவுடன் அவர்சூதை அறியாமல் தொண்டரொன்றெண்ணிச் சமீபத்தில்வந்துசேவித்தவுடன் தமது திருக்கோலத்தைக்காட்டி உமது கன்னிகையை இடபவாகனத்தில் ஏற்றிக்கொண்டு திருக்கயிலைக்குப்போய்விட்டனன். இதுவேநடந்த செய்தியென்று விண்ணப்பஞ்செய்த மாத்திரத்தில் எரியும் அக்கினியினிடத்து நெய்யை ஊற்றியதுபோற் கோபித்துவிழிகளில் அனற்பொறிசிதறப் பெருமூச்செறிந்து ஒன்றும்பேசாமலிருந்தான். அத்தருணத்தில் நித்தியப்படி தேவர்கள் வந்து சேவித்திருந்த பின்பு அவர்களைப்பார்த்து விண்ணவரோ! காளகண்டன் ஆதியில்வந்து நமதுபெண்ணை விவாகஞ்செய்துமறைந்தது உங்களுக்குத் தெரியுமே அந்நிந்தையை எண்ணி எண்ணி நான் வருந்திக்கொண்டிருக்க அக்கள்ளன் இந்நாள்கபாலிவேடந்தாங்கிவந்து,என்புத்திரியைமயக்கிக்கொண்டு போய்விட்டானாம்! இது எவர்களுக்காவது அடுக்குமோ? தாய்தந்தை சுற்றத்தார் மகிழ்ந்து மிக்க சீரும்சிறப்புக்களுடனும் அனுப்பக் கொண்டுபோகாமல் உலக விரோதமானகாரியத்தின முடிக்கத்தகுமோ?இப்படியார்செய்வார்கள்? தான் சர்வபரிபூரணனாயிருந்தாலும் அடாதகாரியத்தைச்செய்யத்தகுமோ? புகழ்பெற்றநமது மரபுக்கொரு பழியை உண்டாக்கினன். மேலும்ஆக்கினையையுங்கடந்தான் சிவன் இரந்தானென்று சகலரும் பேசுவார்கள்; அதனுடன் இம்மணத்திற் காந்தானென்பது உலகமெங்கும் பரந்ததன்றியும் பழியும்பூண்டான்; பித்தனுக் கொருகுணமும் வரன்முறைகளும் உண்டோவென்று இவ்வகையாகப் பலபலதுடணைகளையுஞ் சொல்லி செய்நன்றிமறந்த சிறுவிதி சபையிலிருந்த தேவரைத் தங்கள் தங்கள் இருப்பிடத்துக்குப் போகச்செலவுகொடுத்து அனுப்பிவிட்டு மனம்புழுங்க அத்தினமுதற் சிவனைநினையாமலும் மதியாமலும் ஐசுவரியத்தாற் கருவப்பட்டு இறுமாந்திருந்தான், இவ்வகையாகச் சிலநாள் கழிந்துவர இதனைவிட்டுணுமுதலியோர்களறிந்து கலங்கி நடக்கவேண்டுவதை யோசிக்கின்றார்கள்.

திருமணப்படலம்
முற்றிற்று.

---

## தக்கன்றிருக்கயிலைசெல்படலம்.

தக்கன் அருந்தவத்தைச் செய்துபெற்றமிக்கஅயிஸ்வரியத்தைக்கிரமமாக அனுபவியாமலும் அச்செல்வத்தையளித்த பரமசிவத்தை மதியாமலும் நிந்திப்பதால் துரிதமாக நாசமடைவான்; அதுவல்லாமல் நமக்குத்தலைவனாக வரங்களைப்பெற்ற இவன் ஏவலைமறுத்து வேதவொழுக்கப்படி நடந்துகொள்ள எண்ணுவோமாயின் நமது பதங்களை மாற்றிப்போடுவான், அதற்குப்பயந்து அவனிட்டப்படி நடந்தால் பரமனாற்பதங்களை யிழப்பதன்றியும் பிராணனுக்கிறுதியும் நேருமென்றேங்கி இனியென்செய்வோம், அதற்கோருபாயந் தேடவேண்டும்; அதென்னவென்றால் தாமதப்படாமல் நாமெல்லோரும் தக்கமாபுரத்திற்குப்போய் அகந்தையிற்பெரியவனாகிய தக்கன்மனத்தைத்தெருட்டித்

திருக்கயிலேயைச்சேர்ந்து கர்த்தனைத் தெரிசித்து வருவதாகச் செய்தோமாயின் நிலெபெற்றிருப்பான் நமக்கொருதுன்பமும் நேரிடலரிது ஆதலால் துரிதமாக இதனைச்செய்து முடிக்கவேண்டுமென்று நிச்சயப்படுத்திக்கொண்டு, பிரமனுதியாகிய தேவர்கள் தக்கன் சபைக்குப்போய்க்கண்டு. அவரவர்செய்யும் வந்தனுதிகளைநடாத்தி வீற்றிருந்தபின்பு, பிதாமகன் குமாரனைப்பார்த்துச் சொல்லுவான் ; அரிதாகப்பெற்ற உன்மகளையும் மருகனுகிய பரமசிவனையும் நினையாமலும் பாராமலும் இருக்கலாமோ ? 'குற்றம்பார்க்கிற் சுற்றமில்லை' என்பதனுல் வயிரத்தைவிட்டு, கோபமுள்ள இடத்தில் தயையுமுண்டென்பதை யோசித்து நடந்துகொள்ளாவிட்டால் உன்னிடத்து மிகுந்த நிந்தை நேரும். அதனை செவ்வையாயோசித்து வழிபடுவையானுல் மேலாகிய கீர்த்தியைப்பெறுவாயென்று சொன்னதை ஆராய்ந்து நல்லகாரியம் நாம்செய்யவேண்டுவதென்னவென்று கேட்குந் தக்கனைப் பிரமன்பார்த்து, நீ வெள்ளியங்கிரிக்குச்சென்று, உன்மகளையும் மருமகனையும்கண்டு விசாரித்துவருவது உத்தமமென்று சொல்ல, அதற்குச்சம்மதித்து; பிதாமுதலானோா அவ்விடத்திலிருத்திப் பரிசனங்கள்சூழ இரதாரூடனுய்த் திருக்கயிலேமலையைச்சேர்ந்து, ஆலயத்திற்போகவருகையில், அவ்விடத்தில் நந்தியெம்பெருமான் ஆக்கினையால் காவல்கொண்டிருக்கும் பூதகணங்கள் தடுத்தனர். அவர்களைக் கோபித்து, என் புத்திரியையும் மருமகனையும் கண்டு விசாரித்து வார்த்தையாடிப் போகவந்தால் தடைசெய்யவேண்டுவதென்னவென்று சிறிய பாதகனைப் பூதகணங்கள் உக்கிரமாகப்பார்த்து, ஆதியிற் பரமசிவத்தைத் தேவசமுகத்தில் இகழ்ந்துபேசிய நீ அதைமறந்தும் அதற்கொருபரிகாரமும்செய்துகொள்ளாமலும், இவ்விடத்தில் எவ்வகையாகவருவாய், அடாமூடா! ஆதியிற் பரமசிவத்தினுல்தகிக்கப்பட்ட திரிபுராதிகள் இராக்கதராய்த்திரிலோகங்களுக்கும் அழிவுசெய்தனராயினும், இறைவனிடத்து அன்புள்ளவராயேயிருந்தார்கள். அவர்கள் பத்திவிசுவாசங்களில் அணுப்பிரமாணமும் உன்னிடத்திற் கண்டதில்லையே, இனி எவ்வகையாகவாழ்ந்து ஈடேறுவாய். தேவர்களைக் கொல்லஎழுந்தவிடத்தை உண்டு கறுத்தகண்டத்தைப்பெற்ற விச்சுவநாயகன் அனுக்கிரகஞ்செய்யக்கிடைத்த செல்வப்பெருக்கை அனுபவித்துந்தேவதேவனென்று அறியாமலும், அஞ்ஞானத்தினுல் அவனைமறந்தாய். அவன் மாயையைக் கடந்தவருமுண்டோ? ஆதலால் நீயும் அதிலழுந்தினுய் அவன் பாதகமலங்களைக் கருதிப்பணியாத பாதகரைப் பார்க்கவும்படாது, சிவத்துரோகத்துக்கு ஏதுவாகிய நடக்கையையுடைய உன்னை நெருங்கிப் பேசவும்போமோ? இதனுல் நேரும் பாதகங்களைத் தான் கணிக்கப்படுமோ? ஆதலால் பரமேசுவரன் சன்னிதானத்திற்சென்று, பத்தியுடன் துதித்துச் சேவிக்கவிரும்புவையாயின் இவ்விடத்திலிருக்கலாம். அல்லது உன் ஊரைநோக்கிநடந்துவிடலாமென்று சொன்னவாசகம் செவியில் நுழைந்தவுடன் அரியதழலினிடத்து நெய்யை ஊற்றினதைப்போன்று தக்கன்பொங்கி, அளவற்ற பூதப்படைகள் காவல்கொண்டிருக்கும் வாயிலைக்கடக்க அஞ்சி, நிற்கவும் வெட்கித்திரும்புகின்றவன் பலியைத்தேடி உழன்றுதிரியும் பூதங்களே? கேளுங்கள். உங்க

ளிறைவனை ஒருகாலத்தும் வணங்கேன். அவன் என்மருகனென்பதை மறந் தீர்களோ! விண்டு பிரமன்முதலானோர்கள் என்னேவலில் அடங்கி நடக் கின்றனர். சகல புவனங்களினும் தக்கபிரசாபதியென்று புகழும் கீர்த்தி யும்பெற்றேன். இன்றைக்குப் பித்தனுகிய ஒருவனை வணங்குவேனோ? இதன் றியும் என்னைத்தடைசெய்ய உங்களுக்குத் தயிரியமுமுண்டோ? என் பெண் ணும் மருகனும் இட்ட ஏவலைச்செய்யும் உங்களை நோவவேண்டியதில்லை. எவ்வளவும எண்ணிக்கையில்லாமல் இவ்வவமானத்தைச்செய்வித்த உங்கள் இறைவனை யாரும் தொழுது துதியாமலிகழும்படி செய்விப்பேன். அதையுஞ் சிலகாலத்தில் அறியப்போகின்றீர்களென்று பழவினைக்குட்பட்டானுய், தன் பதிக்குவந்து பிரமன்முதலானோரைப்பார்த்துச் சொல்லுவான்; உங்கள் இட் டப்படி கயிலைக்குப்போனேன். என்பெண் பித்தன் மையலிற்பட்டுத் தகப்ப னென்றெண்ணிக்கை யில்லாமல் பாடாண்டியுடன்கூடி வாய்தல் காக்கும் அவைதிகரான பூதர்களால் என்னைத்தடைசெய்வித்த தல்லாமலும் பங்கப் படுத்தி, மானக்குறைவாகவும் பேசுவித்த தின்னமும் பலவுண்டு. ஐயோ! அவைகளைச்சொல்லவும் நாவெழவில்லை,நினைத்தாலும் நடுங்குகின்றது,இனிப் பலபலபேசி யாவதென்ன? உங்கள் வார்த்தையைக்கேட்டு அவர்களிடத் துக்குப்போன என்னை நோவவேண்டுமென்றுபெருமூச்செறிந்து தேவர்களே! என்னை மதியாத பித்தனையும் அவன் பாகத்தமர்ந்த கன்னிகையையும் இந் நாள்முதல் நீங்கள் துதிக்கவுஞ் சேவிக்கவும் வேண்டுவதில்லை, இக்கட்டளை யை மறுப்பீராயின், அக்கணத்தில் உங்கள் பிராணனை வாங்கிப்போடுவே னென்று வடவையைப்போற் கோபித்துச்சொல்ல அத்தருணம் தக்கனைத் தேவர்வணங்கி, உமது கட்டளைக்கு மாறுண்டோ? அவ்வாறே செய்யக்கட வோமென்று விடைபெற்றுத் தங்கள் பதங்களிற் போய்ச்சேர்ந்தனர்.

தக்கன் றிருக்கயிலைசெல்படலம்
முற்றிற்று.

---

## பிரமன்யாகப்படலம்.

அதன்பின்பு அளவற்றகாலம் தேவர் தக்கன் ஆணைக்கு அஞ்சி, அவன் கட்டளையிட்டபடி நடந்துவருகையில் திரிபுராந்தகனுகிய சிவபிரான் அனுக் கிரகப்படி பிரமன் அரியயாகமொன்றை முடிக்க விருப்புற்று, தக்கன் கட்ட ளையைநினைந்து நான் இறப்பதாயினும் பரமசிவனை அழைத்துவந்து, வேதவிதி ப்படி அக்கிரபூசையினையும் அவிர்ப்பாகத்தையும் அளிப்பதே காரியமெ ன்று உறுதிகொண்டு யாகத்திற்குவேண்டிய உபகரணங்கள் அனைத்தையும் சேகரித்துத் தம்பிள்ளைகளை அழைப்பித்து நாம் செய்யும் யாகச்செய்தியை விண்டுவாதியானவர்களுக்கு அறிவித்து வரக்கடவீர்களென்று கட்டளையிட் டுத் திருக்கயிலாயத்துக்குப்போய், நந்திபெருமான் அனுமதியால் இறைவன் சன்னிதானத்திற்குச்சென்று சேவித்துப்போற்றிநிற்கின்ற பிதாமகனைக் கரு ணையாகப்பார்த்தருளி, வந்தகாரிய மென்னனென்றுகேட்க; சுவாமி! அடியேன்

ஒருயாகத்தைநடாத்தநினைத்தேன். தேவரீர் எழுந்தருளி அதைப்பாதுகாத்து அருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, நகைத்து நல்லகாரியம், நமது உருவாகிய நந்திவருவான், நீ போய் யாகத்தைநடத்தக்கடவாயென்று அனுக்கிரகஞ்செய்யச்சேவித்து விடைபெற்றுக் கயிலைநீங்கித் தக்கமாபுரத்துக்கு வந்து, பிள்ளையைக்கண்டு, நானொருவேள்விசெய்ய எத்தனப்படுவதால் உன் சுற்றத்தார்களுடன்வந்து நடப்பிக்கவேண்டுமென்றுசொல்ல, நல்லகாரியம்,நீர் முந்திப்போய் எத்தனியும் நாமும் இருடிகளும் கூட்டங்களுடன் வருவோமென்று அனுப்ப, பிரமன் மனைவதியைச்சேர்ந்து, இட்டசித்திகளைத்தரவல்ல க்ஷத்திரியயாகத்தைத் தொடங்கினான். இச்செய்தி விண்டுமுதலானோர் அறிந்து, தக்கனிடத்துக்குவந்து சேர்ந்தார்கள். பின்பு பரமசிவத்துக்கு அவிர்ப்பாகங்கொடாமல் யாகத்தை நிறைவேற்ற எண்ணங்கொண்ட சிறுவிதியோ இவர்களுடன்கலந்து பிரமன் உலகத்திற்சேருங்காலையில், இவர்கள்வரவை அறிந்த பிதாமகன் எதிர்கொண்டு மரியாதைகளைச்செய்து, யாகசாலைக்கு அழைத்துப்போய், தன்னருகிலிருக்கின்ற ஆதனத்தில் தக்கனை வீற்றிருக்கச் செய்து கேசவனாதியானவர்களுக்குத் தகுதியான இடங்களைக் காட்டியபின்பு வேதமுழங்கத் தானும் பீடத்திலிருந்து, யாகச்சடங்குகளை ஆரம்பித்து நடத்திவருகின்ற தருணத்தில், திருக்கயிலையில் அமர்ந்த பரமேசுவரன் நந்திதேவரைப்பார்த்தருளி, பிரமன் நடத்தும் வேள்விக்குப்போய், நமக்குரிய அவிர்ப்பாகத்தைப்பெற்றுவரக்கடவாயென்று அனுக்கிரகஞ்செய்ய, சேவித்து விடைபெற்று தமது காவலை நீங்கி, அளவற்றகணங்கள் சூழ்ந்துபோற்றித்தொடர, யாகசாலைக்கருகில் வருவதைப் பிரமன் அறிந்து, திடுக்கென்றெழுந்து எதிர்கொண்டு சேவித்து. அழைத்துவந்து ஒருதிவ்விய பீடத்திலிருக்கச்செய்து, மற்ற கணாதிபதிகளையும் உபசரித்திருத்தி, யாகத்தைத்தொடர்ந்து நடத்தச் செய்நன்றிகொன்ற தக்கன்விழிகளிற் கனற்பொறி சிதறப்பார்த்து, பித்தனுக்காளாய் வந்தவனோ இவனென்று நெருப்பெழநகைத்து, விண்டுமுதலாகிய தேவர் இருடிகள்முதலாகக்கூடிநெருங்கியிருக்கின்ற இந்த மகா சபைமத்தியின் விடத்தையுண்டு சுடலையில் நிருத்தஞ்செய்யுங் கூத்தனுக்கு அடிமைப்பட்ட பூதங்கள் வந்திருப்பதோ! வெகுநேத்தி. முப்புரம்பொடிபடுத்த அக்கினிவிழியைப்படைத்த சிவன்வாசஞ்செய்யுங் கயிலைவாயிலைக் காவல்கொண்டிருக்கும் நந்தியும் மற்றக்கணங்களும் வரும்படிசொன்னவர்கள்யாவரொன்றுபோதவுணர் வாலறிந்து, பிதாவாகிய பிரமனைச்சீறி, நான் அன்பாய் வளர்த்தபெண்ணை என்சம்மதமில்லாமலும்வேதவொழுக்கத்துக்குஇழிவாகவும் திருடனைப்போற் கைக்கொண்டுபோன பித்தனுக்கும் நமது கட்டளையைமீறிச் சொன்னாயே, அவனோ தன்கடைவாயிலைப்போற்றும் ஒருவனை யனுப்பினான், ஆதலால் என்னெண்ணத்தையறிந்தும், எதிர்கொண்டு சேவித்து, உபசரித்து அழைத்து வந்து, சபைக்கு நாயகமாகவும் வைத்தாயே, இதனை நீ செய்யத்தகுமோ? பிதாவானதாற்பிழைத்தாய், அல்லது உன்தலையைவெட்டி நிலத்தில் உருளச் செய்துபோடுவேன். மேலும் இன்னமொன்று உனக்குச்சொல்லுவதாவது, சுடுகாடே இடமாகப்பூதபசாசங்கள்சூழப் பிணங்களைச் சூலத்திற்றூங்கி நடிக்

குஞ்சிவனுக்குப் பழையபடி அவிர்ப்பாகங்கொடுக்கவேண்டுவதில்லை. அதே னென்றால், எலும்பு சிரம் சர்ப்பமிவைகளை அணிந்து சுடலைச்சாம்பலைப் பூசிச் சுடுகாட்டை யிடமாகத்திரியும் பித்தன் வேதவிதிப்படி பவித்திரமாகாடத் தும் யாகத்தில் அவிபெறத்தகுமோ, இதுவரையிலும் வேதவிதியென் னுந்தகு தியை யோசித்துப்பாராமலும் சிறந்த அவிப்பாகத்தை அவனுக்குத்தந்தார் கள். அதையே பழமைபாராட்டத்தகுமோ? இன்றுமுதல் திருமாலைப் பர மாகக்கொண்டு, அக்கிரபூசைசெய்து, முதல் அவிர்ப்பாகத்தையுங்கொடுத் து, மற்றவர்களுக்கும் வரன்முறைப்படி நடத்தக்கடவாய். தாமதகுணம் பெற்ற சிவனே மூலமென்றுசொல்லும வேதவாக்கியங்களைப் பரிகரிப்பாய். இனி இப்படி யாவரும் நடந்துகொள்ளப்படுமென்று பிரமனையும் சபையா ரையும்நோக்கிச்சொல்லிய விசேடத்தை நந்தியம்பெருமான் கேட்டவுடன் இருசெவிகளையும்பொத்தி, பஞ்சாக்கரத்தைசெபித்து, சிவநாமங்களைத்துதி த்து, இறைவனே, இப்பாதகன்பிதற்றுந் தூடணைகளையுங்கேட்கவோ! அடி யேனை ஏவினீரென்று வருந்தி, உடனே வடவானலத்தைப்போலச் சீறியகா லையில், அக்கொடுமைக்கஞ்சினவர்களாய்த் தேவரொடுங்கிவாடவும், அக்கினி மனம்வருந்தி ஓடவும், அண்டங்களனைத்தும் நடுநடுங்கி ஆடவும், சிவாசிகள் தத்தளித்துச்சோரவும் புவன அடுக்குகள் குலைந்துமாறவும், இந்த உற்பாதத் தினைக்கண்டு விண்டுமுதலோர்திகிலடைந்து, தக்கனுக்குப்பயந்து, இவன்பேசி யதைத்தகாதென்று சொல்லாமலிருந்த நமக்கென்னதண்டனை வருகின்றதோ வென்றழுங்கினர்கள். அத்தருணத்தில் நந்திதேவர்கண்களில் அக்கினிப்பொறி சிதறத் தக்கனைப்பார்த்து, உமாமகேசுவரனை இகழ்ந்த உன்வாயைத்தொளை த்து நாவையரிந்துவிடுவேன், ஆனால் இறைவன் அனுமதியில்லாதபடியால், மன்னித்தேன், இக்காரணத்தினால் நீ பிழைத்திருக்கப்பெற்றாய், இனி ஒரு போது இகழ்வையாயின், உன்தலையை வெட்டித்தள்ளுவேனென்னக்கூறி இம் மகத்தில் முதல் அவி எமது இறைவனுக்கு இல்லையாயின், அவருக்குமேலான வர்கள் யாரிருக்கின்றார்கள், பரமசிவத்தின் கட்டளையில் அடங்கிநடக்கின்ற விண்டுவைப் பரம்பொருளாக நினைக்கின்றாயே! ஆதலால் பரம்பொருளாகிய பரமசிவனை நீக்கி யாகஞ்செய்கின்றவன் சிரமறக்கடவது. மேலும், எமது இறைவனை இச்சபையில் நிந்தைகூறியபடியால், அவரருளாற்பெற்ற செல்வப் பெருக்கனைத்தும் சிலநாளில் அழிந்துபோகக்கடவது, உன் மனோபீட்டப் படிக்குத்தந்த தயாநிதியை வசைபேசிய உன்தலையற்று, ஆட்டுத்தலையைப் பெறக்கடவாய், தேவாதிதேவனை நீ பழித்துத்திரிவதை மறாமல் விரும்பிக் கேட்கும் மனவுறுதியைப்பெற்ற இத்தேவர்கள் ஒருவிசை இறந்தும் பிறந்தும், பின்பு அளவற்றகாலம் சூரனென்னும் அவுணனால் வேதனைப்பட்டுத் துக்க சாகரத்தி லழுந்தக்கடவதென்று கொடியசாபமிட்டு, சபையாரைச் சட்டை பண்ணாமல்எழுந்து, கணங்கள்சூழக் கயிலைக்குப்போய்இச்செய்திகளை இறைவ னுக்கு விண்ணப்பஞ்செய்து, கிழக்குக்கோபுரவாயிலில் தம்மிறைமையைச் செலுத்தியிருந்தனர். எமது இறைவனாகிய நந்திபெருமான் போனபின்பு, சபை யிலிருந்த விட்டுணுமுதலானோர்கள்பயந்து, விபரீதம்விளைந்ததென்று வருந்தி

னூர்கள். பிரமன் இச்சாபங்களை எண்ணி எண்ணி ஏக்கமுற்று, பிள்ளையின் உத்தரவைக்கடக்கப்பயந்து வருந்தி, யாகத்தைமுடிக்கவும் அஞ்சி, நிறுத்தி விட்டான். இவை அனைத்தையுங்கண்ட தக்கனொன்றும்பேசாமற் கறுவி, உள்ளே பயம்வருத்த வெளிக்குச் சந்தோடித்தவனுய்ச் சபையைவிட்டு எழுந்து, தேவர்சூழ்ந்து துதித்துவரத் தன்னகரத்தை அடைந்தான்; மற்றவிண்டு முதலியோர்கள் நந்திபெருமானிட்ட சாபத்தை நினைந்து நினைந்து மனவாட்டத்தோடு தத்தமபதங்களிற் சேர்ந்திருந்தனர்.

பிரமன்யாகப்படலம்
முற்றிற்று.

## தக்கன்சாலைசெய்படலம்.

மேற்கூறிய பிரமயாகம் சிதைந்த நாள்முதலாக தேவர் முற்றத்துறந்த முனிவர் யாதொருவேள்வி விரதங்களைச்செய்யப் பயந்திருப்பதை ஊழ்வழிப்பட்ட தக்கன் அறிந்து, ஒருதினம் சபையில்வந்திருக்கும் விண்ணவராதியோரைநோக்கி, வேதாகமங்களை வரையறக்கற்ற நீங்கள் வெகுகாலமாக யாகாதி கிருதுக்களை நடத்தாமலிருப்பதற்குக்காரணமென்ன என்றுகேட்க, முன்னாள் பிரமன் தொடங்கிய மகத்திற் சிவனுக்கு அவிப்பாகங்கொடுத்து நிறைவேற்றாமையினாலும், நந்திபெருமானிட்ட சாபத்தினாலும் பயந்து ஒருகருமத்தையும் செய்யாமலிருக்கின்றோமென்று சொல்லக்கேட்டு நகைத்து, ஒருகாவலனாகிய நந்திபெருமானிட்ட சாபத்துக்குப்பயந்தோ? வேள்விகளை மறந்தீர்கள். நல்ல காரியம். முந்திநாம் ஒருமகத்தைச்செய்து முடிக்கின்றோம். அதன்பின்பு நமது கட்டளைப்படிக்கு நீங்களும் நடத்துவீரெனக்கோபித்துச் சொன்னமாத்திரத்தில், ஐயனே, அப்படிக்கே செய்துவருவோமென்று நடுங்கிச் சம்மதிக்க, அவர்களனைவரையும் போகச் செலவுகொடுத்தனுப்பிய சின்னாட்பின்னர் பிராத்தகன்மந்தாண்ட யாகத்தைச்செய்யநினைந்து, பிரமனுக்கு ஒப்பாகச்சிருட்டிக்கவல்ல மயனை அழைப்பித்து, நாம் ஒருயாகஞ்செய்ய நினைந்ததால், அதற்குவரத்தக்க தேவர் முனிவர் மன்னவர் பாதலவாசிகளனைவரும் இருக்கச்சாலைகளும், அதற்குரியபண்டங்கள் வைக்குமிடங்களாதியாக விசாலமாக வேதவிதிப்படி நிருமிக்கக்கட்டளையிட, அவன் சேவித்துப்போய், கங்கைக் கரையிற் கனகலமென்னும் பவித்திரமாகிய இடத்தில் யாகசாலைசெய்ய உத்தேசித்து, ஆயிரயோசனை யகல நிகளமுள்ளதாக மதிலெழுப்பி நான்குதிக்கினும் மகமேருவுக்கு ஒப்பான கோபுரங்களை நிருமித்து அண்டச்சுவரைப் போன்ற மதில்களினிடங்கடோறுங் கொத்தளங்கள் அமைத்து, மிகுந்த காவலையுடைய ஒருகோட்டையாக்கி, அதனுட்புறங்களில் தேவகன்னியர் இரிடிபத்தினியர் இருக்குமிடங்களும் அவர்கள் உல்லாசமாயுலாவுஞ் சோலைகளும் நந்தவனங்களும் நீராடயோக்கியமான தடாகங்களும் உண்டாக்கி, தபசிகள் பிராமணர்முதலியோர் இருக்குமிடங்களும் யாகத்துக்குவந்தவர்கள் இட்டமாகப் புசிப்பதற்குவேண்டிய பதார்த்தங்கள்வைக்கும் அறைகளும் அளவற்றவர் பசிதீர்ந்துண்ணுஞ்சாலைகளும் சுவர்க்கலோகமும் நாணும்படி உண்டுபண்ணி

விருந்தினருக்குதவியாகத் தாம்பூலம் கலவைச்சாந்துகள் புட்பவகைகள் பனி நீர்முதலானவை வைக்கும் அறைகளும் பீதாம்பரவாடையாபரணங்கள் திர வியக்குவைகள் நவரத்தினராசிகள் முதலாகிய தானத்துக்கு யோக்கிய மானவைகளைச் சேர்க்குமிடங்களும் அமைத்து சத்தியலோகமோ என்னை யுறத்தக்க வேள்விச்சாலைகள் விஸ்தீரணமாகச்செய்து, நடுவில் நூறுயோச னைப்பிரமாணத்தி விடந்திருத்தி ஓமமுடிக்கத்தக்க மூன்றுவகைக் குண்டங் கள்வேதிகைகள்விதித்து,பலவகைச்சித்திரங்களைமிறுவி, இவ்வகையாகச்சகல கருமங்களையுஞ்செய்து முடித்தவுடன் தக்கனைக்கண்டு, தேவரீர் ஆக்ஞையின் படி யாகசாலைமுடிந்ததென்று விண்ணப்பஞ்செய்ய, தக்கன்போய், அவைக ளைக்கண்டு மகிழ்ந்து, சிற்பியைக்கொண்டாடி வேதவிதிப்படி வேள்வியை நடத்தநினைந்து அருகிலிருந்த மாதவர்களைநோக்கி, யாகத்துக்குவேண்டுஞ் சமித்துத்தருப்பை மாவிலை புட்பபத்திரங்கள் பசுக்கள்முதலாகவேண்டும் உப கரணங்களைச் சேகரிக்கும்படி அனுப்பி காமதேனு பஞ்சதருக்கள் சிந்தாமணி சங்கநிதி பதுமநிதிகளை வரவழைத்து, தான்நடத்தும் யாகத்துக்கு வருகின்ற வர்களுக்கு வேண்டியவற்றையுதவக்கட்டளையிட்டு,யாசகர்களுக்கு வெறுக்கக் கொடுக்கச் சிலரை நியமித்து எல்லாப்பண்டங்களையும் வரன்முறையாகத் தகுந்த இடங்களிற்சேர்க்கச் சிலரையேவித்தன்சுற்றத்தவர் முப்பதினாயிரவ ரும்அவர்களுடன் வரத்தக்கவர்களும் தன்னுடன் பந்திபோசனமுதலானவை களை வரன்முறையாக உபசரிக்கப் பலருக்குங் கட்டளையிட்டு மற்றவர்களுக் கும்வேண்டும் பண்டபலாதிகளைக் குறைவறக்கொடுக்கச் சிலரைஏற்படுத்தி இவைகளனைத்தும் நடந்துவருங்காலத்தில் சிவன்தவிர மற்ற மகாவிட்டுணு பிரமன்முதலிய விண்ணவர் மண்ணவர் பாதலவாசிகள் அனைவரும் இவ்வேள் விக்குவரக்கடவதென்று அறிவித்து வருவீரெனப் பலகோடிதூதரை ஏவிய பின்பு வந்தபண்டங்களை அவ்வவ்விடங்களிற் சேர்த்துக்கொண்டு பசுக்களை யூபஸ்தம்பங்களிற் பந்தித்து அதற்குரிய பூசாவிதிகளை வரலாற்றுமுறைப்படி செய்யத் தொடங்கி நியமித்த முகூர்த்தகாலத்திற் குண்டமண்டல வேதிகை களையும் யாகோபகரணங்களையும் வேதவிதிப்படி சுத்திசெய்து துவாரபாலக ராதியாகியதேவாங்கங்களையும்அவ்வவ்வினங்களில்ஆவாகனஞ்செய்துஅதற்கு வேண்டிய தருப்பைமாவிலை வகைகளைக்கொண்டு செய்துமுடித்துவருகையில் முன்னர் தக்கன் அனுமதியிற்சென்ற தூதர்விரைந்தோடி சத்தவிருடிகளாகிய முற்றத்துறந்தவர்சூரியசந்திரர் திக்குப்பாலகர்முதலானவர்களுக்கு அறிவித்து மனோவதிப் பட்டணத்துக்குப்போய் பிரமனைச்சேவித்துசுவாமி!உமது புத்திர ராகிய தட்சப்பிரசாபதியாகஞ்செய்ய எத்தனித்திருக்கின்றார். அவர் யாகத் திற்குத் தேவரீரை வரச்சொன்னாரென்று விண்ணப்பஞ்செய்து வைகுந்தத் தைச்சேர்ந்து விஷ்ணுமூர்த்தியைப்பணிந்து வேள்விக்குவரும்படி தெரிவித்து இந்திரன்முதலாகிய விண்ணவர்களுக்கும் அறிவித்துமீண்டனர். அக்காலத் தில் விஷ்ணு ஸ்ரீதேவிபூதேவியுடன் கருடன்மே லாரோகணித்து சித்தர்முத் தர் சூழ்ந்துதுதிக்கப் புறப்பட்டதைப் பிரமன் அறிந்து கலைமகள் சமேதனாய் அன்னத்திலேறிப் பெரியோர்கள் சூழ்ந்துவரத் தன்னுலகத்தைக் கடந்து

போக இந்திரன் அயிராணியுடன் அயிராவதத்திற்செல்ல ஆசிரியனுகிய பிரு கற்பதி தேவர்மகிழ்ந்து விமானத்திலேறித் தொடர்ந்துவர அரம்பாமாதர்கள் தங்கள் இறைவியைக்கூடிநடக்க சந்திரசூரியர்முதலிய நவக்கிரகங்கள் நெருங் கிப் பிரயாணப்பட்டுச்செல்ல அவர்களிற் சந்திரன்தேவியராகிய தக்கன்பெண் கள் பிதாசெய்யும் யாகத்தைப்பார்க்க அதிக மகிழ்ச்சியுடன் தொடர்ந்துவர, அளகைக்கரசனுன குபேரன் தன்சுற்றத்தாருடன் விமானத்தில்வர, இவ்வா ருக யாவருஞ் சேர்ந்துவருகையில், தக்கன் தன்மருகராகிய இருடிகளுடன் எதிர்கொண்டுதழுவி, க்ஷேமங்களை வினவி, அழைத்துவந்து, விண்டு பிரமன் இந்திரன் முதலானவர்களைத் தகுதியாகிய பீடங்களில் இருக்கச்செய்தான். இவர்களுடன்போந்த இலட்சுமி சரசுவதி இந்திராணி அரம்பையர் தன்பெண் கள்முதலானவர்களை வேதவல்லி ஆதரித்துப் பீடங்களில் வீற்றிருக்கச்செய்த னள். இதுவல்லாமலும் பூமியிலிருக்கின்ற பிராமணர் தபசிகள்முதலானேர் தக்கன்யாகத்தில் திருத்தியாகப் புசிக்கலாமென்னுங் களிப்புடன் சமுத்திரம் புரண்டதையொத்து அடைந்தனர்கள். ஆதிசேடன் அட்டமாநாகங்கள் முத லானவர்கள் தங்கள் தேவிமாருடன் வந்துசேர்ந்தார்கள். இப்படி பொன் னுலகவாசிகள் பூமண்டலத்தார் பாதலவாசிகள் நெருங்கியிருக்க, தக்கன்மத்தி யில் வீற்றிருந்தான். அக்காலத்தில் வாயுப்பெருக்கினுலோங்கிய சமுத்திர வொலியைப்போல வேதகோட்டமொலிக்க இவ்வகையாகிய மகோச்சவகால த்தில், அழிவிக்கப்போன தூதர்வந்து, தக்கன்பாதங்களிற்சேவித்து, தேவரீர் கட்டளைப்படி எங்குஞ்சொல்லிவந்தோமென்று விண்ணப்பஞ்செய்தவர்களைக் கருணையாகப்பார்த்து, நீங்கள் அழைக்கையிட்ட இடங்களில் யாவராயினும் தடுத்துப்பேசியதுண்டோ என்றுவினவ, சுவாமி! அகத்தியன் சனகன் அத்திரி வசிட்டன் பிருகு ததீசி துருவாசன் பராசரன் இவர்கள் உம்முடையயாகத் தையிகழ்ந்து, தாங்கள்வரச் சம்மதமில்லாமற் சொன்னுர்கள். இவர்களல்லாம லும் மற்றவரனைவரும் சந்தோடமாக ஒப்புக்கொண்டார்களென்று விண்ணப் பஞ்செய்யக்கேட்டு நகைத்து, முனிவர்களில் இவர்கள் சிவனுக்கு உவந்த பத் தர்களோ என்று கோபித்து, இவர்கள் வாராததனுல் ஆகவேண்டுவதென்ன வென்று இகழ்ந்தான். அதைக்கேட்ட தேவர்கள் வாட்டமுற்றிருந்தனர்.

தக்கன்சாலைசெய்படலம்
முற்றிற்று.

## ததீசிப்படலம்.

இவ்வகையாக யாவரும் நெருங்கியிருக்கின்ற தருணத்தில் பரமசிவன் மேற் சமருக்கெழுந்த விட்டுணுவைவென்ற ததீசிமுனிவர் மனம்பொறுமல் அளவற்ற சிடர்கள்சூழ யாகசாலையிற் புகுந்து வருவதைத் தக்கன்கண்டு, இவ ன்சிவன் பட்சத்தானல்லன், நம்மாணைக்குப்பயந்து வந்தானென்று அவர் மேலிருந்த கோபந்தணிந்து, வாரும்வாருமென்று அருகிலிருந்த ஆதனத்தி லிருக்கச்செய்தவுடன், ததீசிமுனிவர் தக்கனைப்பார்த்து, என்னைவரவழைத்த

காரியமென்ன, இவ்விடத்தில் நீ நடத்துங் கிரியையாது, உன்னெண்ணமென்னென்றுவினவ, முனிவனே! சிவன்தானேவந்து, என்பெண்ணைத் திருக்கலியாணஞ்செய்து, என்மனம்வருந்தவும், பெண்மயங்கவும், மறைந்துபோனதும் தெரியுமே,பின்னர்மற்றொருநாள்என்னை அறியாமலும் என்னுடைய அனுமதி பெறாமலும் அக்கன்னிகையைக் கூட்டிக்கொண்டு போய்விட்டனன். அதையும் நினையாமல் அவர்களைப்பார்த்து வரலாமென்று கயிலைக்குச்சென்றேன். அப்போது மரியாதையில்லாமல் தயைதாட்சணியமற்று என்பெண்ணைத் தன் வயப்படுத்திக்கொண்டு, வாயில்காக்கும் பூதவீரரால் தடைசெய்வித்து, அவமானப்படுத்தினன். என்பெண்ணைப்பற்றி அதையும் பொறுத்துக்கொண்டு என்னிடத்தைச்சேர்ந்தேன். அதன்பின்பாவது என்மனக்குறையை நீக்கினவனல்லன். பெண்ணாவதுவந்து விசாரித்தாளில்லை. அவளென்செய்வள், அவன் போதனைக்குட்பட்டுத் தாய்தந்தையைநினையாமல் மறந்துவிட்டனள்போலும். இப்பால்சிலகாலத்திற்குப்பின்னர் என்பிதாஒருயாகஞ்செய்யத்தொடங்கினர். அதிற் சிவனுக் கவிகொடுக்காமல் தடுத்தேன். அப்போது அவ்விடத்தில்வந்திருந்த நந்திபெருமான் கோபித்துச் சபித்துப்போயினன். அதற்குப்பயந்து யாகத்தைப் பூர்த்திசெய்யாமல் நிறுத்திவிட்டனன், அதுமுதல் என்னுணைக்கும் நந்திபெருமான் சாபத்துக்கும் அஞ்சி யாகமென்பதை யாரும் நினைந்தார்களல்லர். ஆதலால் சிவனுக்கு அவியில்லாமல் ஒரு யாகத்தைச்செய்து முடித்து அவ்வாறே இனிமேல் நடப்பிக்க எத்தனித்துச்செய்கின்றேன், மாலயன் முதலானோர்கள் வந்திருக்கின்றார்கள். அதுகாரணமாக உங்களுக்குஞ் சொல்லி அனுப்பினேன், இதுசெய்தியென்று முடித்தவுடன் ததீசிமுனிவர் இனிப்புண்ணியமடங்கப் பாவமேலிடும் காலம்நேர்ந்தது, இக்கொடியவன்செயலும் இறைவன்செயலும் ஒத்திருக்கின்றதென்றெண்ணி நகைத்தனர். அக்காலத்தில் ஊழிகாற்றின்மேல் சீறியெழுந்த வடவையைப்போலத் தக்கன் ததீசிமுனிவரைப்பார்த்துக் கோபித்து, என்மொழிகளைக்கேட்டிகழ்ந்து நகைத்த நீ சிவனுக்கன்பனோவென்றுகேட்க, ததீசிமுனிவர் சொல்லுவாராயினர்.

மாலயன் முதலான அளவற்ற சீவராசிகளை ஆதியிலுண்டாக்கிய பிதாவாய்ப் பின்பு காத்து மாற்றி எங்குந்தானாய், ஏகனாய், உயிர்க்குயிராய், பரப்பிரமமாய் விளங்கிய விச்சுவநாதனை நீக்கி யாகத்தைச்செய்யத்தொடங்கினாய்; சகலவேள்விகளினும் தேவர்களுக்குக்கொடுக்கும் அவியைக்கொள்ளப்பட்டவனும், அதற்குக்காரணனாகிய அக்கினிதேவனுக்கும் காரணகர்த்தனும் அவன் முதலியோரைப் பாதுகாப்பவனும் சங்கரனென்றே வேதாகமங்கள் முறையிடுகின்றன, வேறுகடவுளருளராயின் காட்டக்கடவாய். பிரமன் விட்டுணு அக்கினி முதலானோர் இச்செல்வத்திலிருக்க முன்னாளி லனுக்கிரகஞ்செய்தவனாய் யாவருக்கும் மூலகாரணனாய்த் தனக்குமேலொருவருமில்லாதானாய்இருப்பவன் எங்கள் நீலகண்டனல்லது, விண்ணவர்களில் யாவரிருக்கின்றனர், தேவாதிதேவனாய் எப்பொருட்குமிறைவனாய்ச் சர்வஞ்ஞனாய் மும்மைப்பெருந் தேவர்கட்குநாயகனாய்ச்சோதியாய் ஆதிக்காதியாய் அந்தத்துக்கந்தமாய்ச்

சர்வபரிபூரணனாய் இருப்பவன் சிவபெருமானென்று அவ்வேதங்களிற்சொல்லும், பிரமன் முதலானோர்களுக்குப் பதியாகப்பட்டவன் சிவபெருமான், அவன் அசையாம லணுவுமசையாதென்னும் சுருதிகளின் துணிவும் இவையனைத்தையும் கற்றுணர்ந்த நீ மறக்கலாமோ? அநித்தியத்தை நித்தியமாக வெண்ணி, விருதாவாக புத்திமயங்கி, தீராதமாயையிற்பட்டுக் கவலையுற்றும். வேதவிதிக்கும் பிறழ்ந்துநடப்பது பிதாவைநீக்கி மற்றொருவனை தேடுவதற்கொக்கும். ஆதலால், சகலதேவர்களுக்கும் ஆதியாகிய இறைவனை இகழ்வது பேதமையல்லது பெருமிதத்துக்கடாதே, தான்கெட ஒருவனும்எண்ணுவனா. வேதாகமவொழுக்கத்துக்குப் புறம்பாய் யாகஞ்செய்பவன் உன்னையொருவனையேகண்டோம். நீ நினைப்பது தகுதியானதன்று, ஆதலால், பழயவழக்கப்படி ஆதிதேவனாகிய பரமசிவத்துக்குமுதல் அவிர்ப்பாகங்கொடுத்து வேள்வியைமுடிப்பாயானால், இச்செல்வத்தை அநுபவித்து நீடித்திருப்பாயென்று தயையாய்த் ததீசிமுனிவன் சொன்னதைக்கேட்டு நல்லகாரியம், சிவபெருமானுக்குரிய பாகத்தை விட்டுணுவுக்குத்தந்து யாகத்தை முடிக்கின்றேனென்று தக்கன் மாறுத்தரங்கொடுத்தான். இவன் தகாதகாரியத்தைக் குறித்தானென்று ஆலோசித்து யாவராலும் பூசிதப்படுத்திப் புகழவல்ல சீரியனை நிந்தித்துப் பூரியனை வந்திப்பது உன்போல்வார்களுக்கு அடுக்குமோ? வீணாக உன்சுற்றத்தா ரனைவருக்கும் முடிவை விளைக்கின்றாய். இதனை நன்றாயோசித்து நடந்துகொள்ளென்றுசொல்ல, தக்கன் நகைத்து உன்னுடைய உருத்திரனைப்போன்றவர் ஏகாதசருண்டு, இவர்களல்லாமல் ஈசானமூர்த்தியுமுண்டு. அவர்களுக்காவது முதலவியைத்தந்து வேள்வியைநடத்துவேன். சிவனுக்குத் தரமாட்டேனென்றுசொல்ல, ததீசி நகைத்து புவனங்கள் அனைத்தையும் நாசப்படுத்தித் தம்மிலொடுக்கி மீளவும் பிதாவாய் உண்டுபண்ணி யாவருந் துதித்துவணங்கும் உருத்திரமூர்த்திக்கு அவன் வடிவையும் பெயரையும், அவனனுக்கிரகத்தினாற் பெற்றவர்கள் ஒப்பாவார்களோ? உருத்திரமூர்த்தி சர்வாந்தரியாமியாயிருந்து நடப்பிப்பான். அவன் பாதபூசையைச் செய்தவர்கள் அவனுருவும்பெயரும் பெறுவார்கள். அத்தொகையை இவ்வளவென்று கணிக்கப்படுமோ? அவர்களைக்கர்த்தவியமாகவும் பேசப்படுமோ? ஆனால் பிரமன்முதலானோர் துதிக்கவிரும்பார்கள், எல்லாச்செல்வப்பெருக்கையும் அனுக்கிரகஞ்செய்த இறைவனிடத்தில் நேயமில்லாதகாரணம் திரோபவமென்பதை நீ நினைத்தாய் இல்லையென்றுதெளிவித்த ததீசியைத் தக்கன் பார்த்து, சிருட்டி திதிசெய்யும் பிரமவிட்டுணுக்களாகிய நீங்களிருக்க கடைத்தொழிலாகிய சங்காரத்தொழிலை நடாத்தும் உருத்திரன் ஆதியாகவிருக்க வேண்டியகாரணமென்ன என்றுகேட்க பிரமசிரத்தாழ்வடமணிந்த இறைவன் பாதகமலங்களைச்சிந்திக்கும் ஞானவானாகிய ததீசி மாறுத்தரஞ்சொல்லுவார். இருவரோடொருவனாக நினைந்த உருத்திரமூர்த்தியை ஆதியென்றறியாதவனே! அவன்பெருமைகளைச் சொல்லக்கேள். ஆதியந்தமில்லாத எமது கடவுளுக்கு உருவம் நாமக்கிரியைகளில்லை. இதனை வேதங்களே சொல்லும். அஞ்ஞான இருளில்மூழ்கிய சீவராசிகள் வினையைநீக்கக் கருணையால் மேற்

கூறிய முக்குணங்களையும் மேற்கொண்ட ஆத்துமாக்களுக்குப் பழைய உணர்வைவிளக்கி பிரமன்முதலானோரைச்சிருட்டித்து, அவர்களுக்குரியபணி களைக்கட்டளையிட்டு சங்காரகிருத்தியத்தைத் தானேமேற்கொண்டான். அதே னென்றால், கணக்கிறந்த சிவராசிகளைச் சிருட்டிக்கவல்ல பிதாவாகிய தனக் கல்லது மற்றவர்களுக்குமுடியாது. ஆதலால், சர்வசங்காரகிருத்தியத்தைத் தானேமேற்கொண்டான். முன்னொருநாள் தேவர்கள் இறைவன் பாதகமலங்க ளிற்சேவித்து,இப்பணிவிடைகளைஎங்களுக்குக்கட்டளையிட்டீர், இதற்குநிவார ணம் எப்போதென்றுகேட்க, உங்கள் ஆயுள்வரையும் இக்கருமங்களை நடத் திப் பவித்திரமாகிய நீறணிந்து பஞ்சாக்கரத்தைச் செபித்திருப்பீராயின் நன் மையையடைந்து நம்மைச் சேருவீர்களென்று அனுக்கிரகஞ்செய்து, அது காரணமாகச் சங்காரத்தொழிலைத் தானே செய்துவருவான். அவனே ஐந்தொ ழில் முதல்வனென்று வேதங்கள்சொல்வது உனக்குத்தெரிந்ததோ? இதுவல் லாமல்உருத்திரனென்னுந் திருநாமம் ஒப்பற்ற பரமசிவனுக்கும் அவன்பிள்ளை களுக்கும் அவர்பாதங்களைக்கருதும் உருத்திரகணங்களுக்கும் அவருருவந் தரித்தவர்களுக்கும் அக்கினிக்கும் சொல்லப்படும். துக்கசாகரத்தில் அழுந் தின சிவராசிகளைப்பாதுகாக்குந்தன்மையினால் பரம்பொருள் உருத்திரமூர்த்தி யென்னும் நாமம்பெற்றான். இதற்கொருதிட்டாந்தம் சொல்லுவேன்.

முன்னாளில் சில இருடிகள் பரம்பொருளாவான் இவனவனென்று வாதா டிப் பிரமனை வினவினார்கள், அவர் கருணைகூர்ந்து இருடிகளே! கேட்பீராக எங்களைத் தேவரா வேதாகமங்களைவிதித்து தகுந்ததொழில்களையுங்காட்டிச் சங்காரத்தொழில் தம்மதாக்கி, அனுக்கிரகத்தினால் ஐந்தொழிலையுநடாத்தி, பிறப்பிறப்புருவநாமச்செய்கைகள் இல்லாமல் அருவாய் உருவாய்ப் பூரணமா யிருப்பவன் சிவபெருமானென்று அறிவீர்,இதனை வேதங்களேசொல்லும். அவ னதுநிலையை நானும் விட்டுணுவும் இன்னமுங்கண்டு அறியமாட்டாமல் உழல் கின்றோம். இக்காரணங்களினாற் சிவபெருமானே பரம்பொருளாகக்கொள் வீரென்று பிரமன் போதித்துநிற்கையில் இருடிகள் மயக்கநீங்கி, நான்முக னைச் சேவித்து பிதாவாய் எங்களைப்படைத்தாய் இன்று குரவனாய் வந்து நிச் சயத்தையுந்தெருட்டினாய்.இதனால் ஈடேறிக்கதிசேரப் பெற்றோமென்று கொ ண்டாடும் முனிவர்களைப்பார்த்து இன்றுமுதல் பரமசிவன் பாதங்களைச் சிக் கெனப்பற்றிச் சிந்தித்துப்பூசித்து அருச்சித்து ஈடேறக்கடவீர்கள்; விபூதிகண் டிகை பஞ்சாக்கரத்தைக் கனவிலும் மறக்கவேண்டாம். இச்செய்கையி னாற் சனன துக்கத்தைக்கடந்து இறைவன் பாதநீழலில் வாசமாயிருக்கப் பெறுவீர்களென்று தெருட்டி விடைகொடுத் தனுப்பினர். ஆதலால் எங்கள் ஈசனே பரப்பிரமம், மற்றதேவர்கள் உயிர்த்தொகையாகும்; இவ்வுண்மையை உன்னிடத்து அன்பாய் நீ பிழைக்கும்படி சொன்னோம். இவையல்லாமல் ஆதி யில் உன் பிதாவாகிய பிரமன் சிவபிரான் பெருமைகளைவிரித்து உனக்குப் போதிக்க அறிந்தும் அருந்தவங்களைச்செய்தும்அவன் கருணையினால் இச்செல் வத்தைப்பெற்றும் யாவராலும் பூசிக்கவாழ்ந்தும் இருக்கின்ற உனக்கு நாச மடையக்காலம் நேர்ந்தமையால் அதனை மறந்தாய்; இதுவல்லாமல் உன்பிதா

வாகிய பிரமன் விஷ்ணுவுமுதலானோர் உன்னைப்போலவே அவர் மாயையில் அழுந்தி மடிதற்கேதுவான உன்சபையில் வந்திருக்கின்றார்கள்; நீயும் உன் வருக்கத்தாரும் மற்றவர்களும்பிழைக்க நினைந்தீரானால் பரமசிவனுக்கு முதலவியைத்தந்து யாகத்தைமுடித்து புகழை அடையக்கடவாயென்று பல படச்சொன்னார்.

ததீசிப்படலம்
முற்றிற்று.

## ததீசியுத்தரப்படலம்.

இவ்வகையாகத் ததீசிமுனிவர் பரமசிவத்தினது ஒப்பற்ற குணாதிசயங்களையும் பரத்துவநிருணயங்களிற் சிலவற்றையும் விவரித்துஉரைக்கவதனைக் கேட்ட தக்கன்நகைத்து நீசொல்லிய மேலானபரம் ஊர்ப்புறம்புகளிலிருக்கும் சுடுகாட்டிற் கிடக்கின்ற எலும்பையும் தலைகளையும் சாம்பலையும் அணியுமோ புலால்நாறும் பிரேதத்தை ஏந்தித்திரியுமோ! கழிந்தகேசத்தை முப்புரிநூலாக அணியுமோ! வராகத்தின்கோடும் ஆமையோடும்தரிக்குமோ! உலகமழிய உயிர்களைச் சங்கரிக்குமோ! புலியதளுடுக்குமோ! யானைத்தோலைப் போர்க்குமோ! கொடிய அனல் மான்சூலமுமேந்திப் பிச்சைக்கெங்கும் உழலுமோ! பேயனைப் போல் நடனமும்செய்யுமோ! பூதங்களைப் படையாகக்கொண்டு உலாவுமோ! காளமாநாகங்களை யாபரணமாகச்சூடுமோ! நகுவெண்டலையைச் சிரத்திலே தாங்குமோ! வேற்றுருக்கொள்ளுமோ! மாட்டின்மீதேறுமோ! ஆலத்தையுண்ணுமோ! பேய்கள்சூழச் சுடலையிலாடுமோ! ஒருத்தியைச் சடையிலும் மற்றொருத்தியை இடையினும் இருத்துமோ! பிள்ளைகளையும்பெறுமோ! தாமதகுணத்தைப் படைக்குமோ! இன்னம் அளவற்ற துர்க்குணங்களைப்பெறுமோ! இவ்வாறான செய்கைகளினால் உங்கள் ஈசனொருவகைப்பட்ட குணமுள்ளவன் அல்லன், பரமாயிருப்பவன், பரிசுத்தனாய்த் தயாநிதியாய்ச் சகலமங்கலகுணங்களையும் பெற்றிருக்கவேண்டும்; இதனால் மூலமென்னும் பெயர்பெறலாம். இதற்குப்புறம்பானவனாதலால் அவனுக்குச் சிறந்தயாகத்தில் அவிர்ப்பாகம் தரவே மாட்டேன், மேலும் இனி எக்காலமும் நடக்கவறியாது. இதனை உறுதியாகக் கொள்ளக்கடவாயென்று அஞ்சாதுசொல்லிய தக்கன்மனத்துணிவை அறிந்து தபோநிதியாகிய ததீசிமுனிவன் எமதிறைவனை இவன் பழிகூறலாமோவென்று சீற்றங்கொண்டு ஆலகாலத்தைப்போலச் சீறி இறைவன் உண்மைகளிற் சிறிதும் இவன் உணர்ந்தவன் அல்லன். இப்பாதகனுடன் வார்த்தையாடல் யோக்கியமன்று ஆயினும் பிரமன் விண்டுமுதலான தேவர் முனிவர் முதலானவர்கள் நெருங்கியிருக்கும்இச்சபையில் விச்சுவநாயகனாகிய சிவபிரானைப்பழித்திகழ்ந்தபடியால் அவைகளின் காரணங்களை யாவரும் அறியத்தெருட்டுவது நமது கடனென்றெண்ணி அடா தக்கா! இம்மகாசபையில் எமதிறைவனாய்த் தேவாதிதேவனாய் விச்சுவநாயகனாய் விளங்கும் பரமசிவனிடத்திற் சிலகுற்றங்களைக் காட்டிப்பேசினையே, அவைகள்வந்த விவரம் யாதுமறியாதவனைப்போற் பெருஞ் செல்வச்செருக்கினால் மயங்கிய மூடனே கேளென்று சொல்லுவார்.

சர்வாந்தரியாமியாய் அருளுருக்கொண்ட நிருமலன் பஞ்சகிருத்தியங்க ளில்ஒன்ருகிய அனுக்கிரகத்தினுல் தேவர்களில் முதன்மையாகிய பிரமவிஷ் ணுக்களைப்படைத்து பிரமனிடத்திருந்து சராசரப் பிரவஞ்சத்தை படைப் பித்து விண்டுவினிடத்திற்பொருந்தி அவைகளைக்காத்து அவைகளுக்கு உரிய வினைப்போகங்களை யூட்டி நடிப்பித்து அவைகள்பெறும் பதங்களிற்சேர்த்து இவ்வாருகச் சனனமரண துக்கத்திற்பட்டு அலையுஞ்சீவகோடிகள் சிலகாலம் அல்லலற்றுச் சுகாதீத எல்லையைச்சேர்ந்து களித்திருக்கத் திருவுளங்கொண்டு உருத்திரனுக அண்டரண்ட புவனசராசரங்களையும் அழித்தொடுக்கிப் பின்பு சிருட்டி திதிகருத்தாக்களையொடுக்கி ஏகனுய் நின்று மீளவும் இப்படியே உல கங்களை யுண்டாக்கி தன்னெப்பற்ற திருவிளையாடல்களை நடத்திவருவான். இச்சர்வ சங்காரங்கடோறும் மரித்துப் பிறக்குஞ்சிருட்டி திதித்தலைவரைப் பரமென்றெண்ணித் திரோபவத்தினுழ்ந்து பவத்திற்பட்டு உழலுமூடர்கள் சுருதி குருசுவானுபவங்களினுலே தெளிதற்குக் காரணமாக மாயனென்பு களையும் பிரமன் சிரங்களையும் மாலையாகவுங் கேசங்களை உபவீதமாகவும் அணிவான். இவ்விருவர் செய்த தவமுயற்சியினுல் சர்வசங்காரகாலத்தில் அவர்கள் களேபரங்களைச் சூலத்திலேந்தி நெற்றிவிழியினுலே நீருக்கி அந்நீற் றைப் பூதியாகவணிவான். கிருபாநிதியாதலால் தம்மையடுத்த உயிர்கள் பாப ரகிதமாய் முத்திபெற்று உய்யும்பொருட்டு இவையனைத்தையும் அணிந்ததே யல்லது இவைகளாலே தம்மைப்புகழும்படியன்று; அகந்தையிற்சிறந்தவனே மற்றவைகளையும்விவரமாக அறிவிப்போம்கேள். முன்னுளில் இரணியாக்கனெ ன்னும் அசுரன் பூமியைப்பாயாகச்சுருட்டிச் சீவராசிகள்வருந்தப்பாதலத்தில் மறைந்திருந்தான். அதைக்கண்டதேவர்கள்நடுநடுங்கி விஷ்ணுவைத்துதித்தார் கள். அவர்கள் வேண்டுகோளின்படி மாதவன்வராகவுருவங்கொண்டு பாதலத் திற்சென்று தன்கூரியதந்தங்களினுற்பாய்ந்து அவ்வசுரனைக்கொன்று பூமியை முன்போல் தாபித்து அச்செய்கையைப் பெரிதாக நினைந்தவனுய்த்தானே பர மெனமதித்துச் செருக்கிப் பூமியைத் தன்கூரிய கோட்டினுற்கல்லி உபத்தி ரப்படுத்துகையினுலே பிராணிகள்வாடிப் பரமசிவத்தைக்குறித்து முறையிட் டார்கள்;அத்தருணத்திற் சிவபிரான் எழுந்தருளிவராகத்தின் கோடுகளைப்பறி த்தான். அதனுல் விஷ்ணு தன்செருக்கடங்கி இறைவனைச்சரணடைந்து போ ற்றிசெய்ய பொறுத்துத் திருக்கயிலைக்கெழுந்தருளி அக்கோடுகளைச் சின்ன மாக வணிந்தான்,அவை பிறையைப்போல இப்போதுந் திருமார்பிற் பிரகாசித் திருக்கின்றன, இதுநிற்க, மற்ற செய்கைகளையும் வேதபூர்வமாகச் சொல்லு வோம், கவனமாய்க்கேள், முன்னெருகாலத்திலேதேவர் அசுரர் திரண்டு திரு ப்பாற்கடலைக்கடையும்போது மத்தாகநாட்டிய மந்தரகிரி தாழ்வதைக்கண்டு விஷ்ணு கூர்மமாய்த் தாங்கிநிற்க மீளவுங்கடைகையில் அமுதம்தோன்றிற்று, அதனைத்தேவர்களும் அரக்கரும் கண்டு எமதெமதெனப் பொருவதையும் பாராமல் தான்மந்தரத்தைத்தாங்கிய வலியைப்பெரிதாக எண்ணி அகந்தை கொண்டு சிரம்வானத்தைமுட்ட ஓங்கிப்பாய்ந்து பூமிதத்தளிக்கக் கடலைக்கல க்குகையில் யாவரும் இவ்வுபாதிக்கஞ்சி எமதிறைவனைத் துதித்தார்கள். அத்

தருணத்திற் பரமசிவன் அவ்விடத்துக் கெழுந்தருளி ஆமையினோட்டையும் பெருமிதத்தையும் ஏககாலத்திற் பறித்தபோது விஷ்ணு சோர்ந்து நடுங்குற்றுத் துதிக்க இரங்கிக் கிருபாநோக்கமளித்து அமுதத்தினைத் தேவருக்குப்பகிரக் கட்டளையிட்டு வெள்ளியங்கிரியைச் சேர்ந்தனன். இறைவன் அனுக்கிரகப்படி மாயன் மோகினிவடிவெடுத்து அரக்கரைவஞ்சித்து அடங்கி விண்ணவர்க்கு அமுதமீந்தான். அக்கமடத்தினோட்டையும் எம்மிறைவன் பன்றிக்கோடுகளுடன் தரித்தான், ஆமையோடு அணிந்த திருவிளையாடலிதுவாகும்.

இனிச் சிவபிரான் ஐயமேற்ற சரித்திரத்தை சொல்லுவோம் ஆதியிலே தாருகாவனத்து இருடிகள்இறைவன்மாயையிற் பட்டுமயங்கி பரமசிவத்தினிடத்து அன்பு செலுத்துவதிற் பிரயோசன மில்லையென்றும் யாகங்கள் செய்தலே மோட்சம் அடைதற்குக் காரணமென்றும் நினைந்து அவ்வாறே நடத்தி வருகையில் இவர்கள் செய்கைகளைச் சிவபிரானே யறிந்து விஷ்ணுவைத் திருவுளத்திற்கருதினர். விஷ்ணு அக்கணத்தி லனந்தசயனத்தை நீங்கி வெள்ளியங்கிரியை அடைந்து நந்திதேவர் அனுமதிபெற்று இறைவன் சன்னிதானத்தைச் சேர்ந்து மும்முறை வணங்கித்துதித்து நிற்க சிவபிரான் தன் எண்ணத்தைக் குறித்துக் காட்டி சிங்காதனத்தை நீங்கினவராய் விஷ்ணுகரத்தைப் பற்றிக்கொண்டு வெள்ளிமலையைக் கடந்துபோய் கண்ணனைப் பார்த்து பஞ்சசத்திகளில் ஒன்றாகிய உன்னுருவைக் கொள்ளென்று திருவாய்மலர்ந்தருளினன்; அவ்வாறே மாயன் கோடி சூரியப்பிரகாசமாய் இலக்கணத்துக்கு மேற்பட்ட வடிவுடன் மோகினி யுருவெடுத்து மாயைக்கரசியான பார்வதிகண்டாலும் மயங்கத்தக்க நடைகொடி பாவனையைப் பெற்றுநிற்க தாமுஞ்சிறந்த பிச்சாடன வேடங்கொண்டான் அவ்வடிவின்சீரை மோகினிகண்டு காமவிகாரத்தினாற் சோர்ந்துகர்த்தன் அனுக்கிரகத்தினால் உணர்வுபெற்றதனால் அன்றுமுதல் வைகுந்தவாசிக்கு மாலென்னுந் திருநாமமுண்டாயிற்று; ஆதலாற்பரமன் திருவடிவின் சுந்தரத்தையாவராலும் ஒப்பிட்டுப்புகழப்படுமோ பின்பு பரமன் திருமால் தம்முடன்வர முனிவர்களுக் கிருப்பிடமாய்த் தராதலம் புகழுஞ் சிறப்பையுடைய தாருகாவனத்தருகிற் புகுந்து அவரைநோக்கி நம்மைமதியாமல் தவமேபெரிதென்றெண்ணி நோற்கின்ற முனிவர்கள் வாசஞ்செய்யுஞ் சோலைகடோறும் சென்று மையலுண்டாக்கி, அவர்கள்கொண்ட விரதங்களை அழித்து நம்மிடத்துக்கு வருக என்றனுக்கிரகஞ்செய்ய அவ்வாறே மாயன் விடைபெற்றுப்போய் வேள்வியுந் தவமுமே மோட்சத்தைத் தருமென்றெண்ணி நடாத்தும்இருடிகள்வாசமாகிய இடங்களிற்சென்று அளவற்ற மன்மதர் ஏககாலத்திற் கரவேகமாய்ப் பிரயோகிக்கும் புட்பபாணங்களைப்போல விழிமலர்களைச் சுழற்றிப்பார்த்து புன்முறுவல் விளைத்து செம்பஞ்சூட்டிய பாதங்களிலணிந்த சிலம்புகளும் கரங்களிலமைந்த வளையல்களும் கலிக்க அன்னத்தைப்போல மெல்லெனநடந்து கிளியை நிகர்த்துக்கொஞ்சி யாண்டும் திரிவதை இருடிகள்கண்டவுடன் காமவிகாரந்தலைமேற்கொண்டு மதிமயங்கினவராய் விரதவுறுதிகளைமறந்து வேள்விநிலைகள் கலைந்து உடைசோர்ந்து காமவெள்ளம்பெருகவருந்தி யானையுண்ட விளங்கனியைப்போல உள்ளுடைந்து சிவ

கருணையினால் வந்தமோகினியின் இலக்கணவடிவைப் பாதாதிகேசபரியந்தமும் நோக்கிநோக்கித் தவவொழுக்கத்தைத் துறந்து சுடரைக்கண்ட விட்டிலைப்போலப் பலதிசையினின்றும் விரைந்துவந்து சூழ்ந்துகொண்டவராய்ப் பெண்கள் நாயகமே! பெண்கள் சிகாமணியே! உமதுதிருநாமம்யாது! நீர்இருக்கும்தானமெது? திருவாய்மலர்ந்தோதும்பெண்ணரசே! நீர்வசிப்பது பூவுலகமோ பொன்னகரோ பிரமனுலகோ மன்மதன்பதியோ வைகுந்தவளநாடோ அல்லது அசுரரை வஞ்சித்தழித்துத் தேவர்களுக் கமுதம்பகிர்ந்த மோகினியோ,பெண்ணே கண்ணே உமது பெருமைகளை யாவராற் புகழப்படும். எங்கள் தவப்பேற்றினால் இவ்விடமெழுந்தருளினீர். அடியோங்கள் இடத்திற் கருணைசெய்து உமதிணக்கத்தை யளிக்கவேண்டும். நீரிட்டபணிவிடைகளைச்செய்யக் காத்திருக்கின்றோம். நீர் விரும்பிய அனைத்தையும் இந்நிமிஷத்திலே தரவல்லோம். யாங்கள் காமநோயினாற் பிராணனை யிழப்பதற்குமுன்னே நீர் தயைசெய்து, அதற்குரிய இன்பரசத்தைக் கடாட்சித்துப் பாதுகாப்பதன்றியும் மன்மத பாணத்துக் கிரையாகாமலும் உமது கடக கங்கணங்களணிந்த திருக்கரத்தினாலே சற்றணைத்து ஆதரிக்கத் தயையில்லையோ என்றுவெளுத்த முறுவலைத் திறந்து, கரங்களைநீட்டிப் பலபல விதங்களாகக் கெஞ்சிக்கெஞ்சி இரந்து தொடர்ந்து அக்கினியிற்பட்ட காந்தண் மலரோயொத்து மெய்கருகி விரகாக்கினியினால் இறந்தவர்களைப்போலவுஞ் சித்திரத்தை யொத்தும் பொற்பாவையை நிகர்த்தும் அறிவழிந்து, பின்பற்றித் தொடர்ந்தும் நின்றும் விழுந்தும் இவ்வகைகளாக அலைந்து உழன்றார்கள். இவ்விருடியர் இப்பாடுபட்டிருக்குந் தருணத்தில், இவர்கள் பத்தினிமார் வாசஞ்செய்யுமிடத்திற் பரமசிவன்செய்த திருவிளையாடல்களிற் சிலசொல்லுவோம், மோகினிவடிவுகொண்ட விண்டுவைத் தவசிகள் பக்கலுக்கேவிய பின்பு எமது இறைவன் சிவந்தசடைகள் அசைய சர்வாங்க தூளிதராய் திருக்கரங்களிற்சூலமும் பாத்திரமுமேந்தி வேதப்பாதுகைகளைக் கால்களிற்றொடுத்து, ரிஷிபத்தினிகள் வாசஞ்செய்யும் பர்னசாலைகளில் அவர்மனத்துக்கினிய சுந்தரமிகுந்த புருடனாகிப்போய் பண்களுடன் சுருதிகளைப்பாடிக்கொண்டு ஐயமேற்பாரைப்போலத் திரிகின்றபோதில் உயிருக்குயிராய் எங்கும் பரிபூரணமாய் நிறைந்தாட்டும் பரமசிவத்தின் கீதங்களினோசையைத் தவத்தர்தேவிமார்கேட்டவுடன் மனமுருகி யாரம்மா நம்முடைய வீதிகளில் இப்படி அற்புதமாகப் பாடிவருகின்றவர்; அந்தப் புண்ணியனைக்காண மனம் விரும்புகின்றது, வாரும் வாருமென்று ஒருவரையொருவர் கூவிக் கூட்டங் கூட்டமாய் வீதிகளில் நெருங்கி, எமது இறைவனைத் தரிசித்தவுடன் காமுற்று மன்மதபாணங்கள்சாடப் பொறிகலங்கி நாணமட மச்சவரம்புகளைக்கடந்து மனமருண்டு, காமலாகிரிகொண்டு சோர்ந்து, இறைவனிடத்து ஆசையென்னும்வலையிற்சிக்கிய அக்கன்னியர் செய்கைகளிற் சில பேசுவோம், இந்தத்தவசியினது கீதங்கள் செவிகளுக்கு அமுதமாகப் புகுந்தவுடன் தேகம்பரவசமாய்க் கொங்கைகள்விம்மிச் சரீரம்பூரித்து அவையவங்களில் அணிந்திருக்கும் ஆபரணமுதலியவைகள் சிதறிப்போன இடந்தெரியவில்லை,காமக்கவலையிற்பட்டு உழல்கின்றோம். இதனால் இக்கோலம் அற்புத

வடிவாய்க் காணுகின்றதென்று சிலர் சொல்லித் தொடரவும், இவ்வையரு டைய செய்கைகளை யோசிக்குமிடத்துப் பிச்சைவேண்டி இவ்விடம்வந்தாரெ னக்காணவில்லை.கன்னியரையயல் பூட்டவந்தாரைப்போலத் தோன்றுகின்ற தென்று சிலபெண்கள் பேசவும் இவருக்கான வுண்டியையும் உடையையும் தந்து பஞ்சணைமெத்தையிற் சரசசல்லாபமா யிருந்து களிக்க இம்மங்கையர் களில் யாரும் நினைக்கவில்லையெனப் பலர்வருந்தவும், இத்தாருகாவனத்துக் கெழுந்தருளிய இவர் மற்றொருபதிகளிற் சென்றவரல்லர்போலத் தோற்று கின்றது. ஆகையால் நாம் முன்செய்த தவப்பயனுக்கும் இதற்கையமேயில்லை யென்று அளவற்றவர் புகழ்ந்து சொல்லவும் இந்தயோகிக்கு ஆரிடத்தினும் விருப்பமில்லைபோலத்தோற்றுவதாதலால், தொழுகின்றவனைப்போலக்கிட்டி அணைத்து இன்புறுவோமென்பார்சிலர். சிலர் தங்கவளையல்களுடன் ஆடை சோரக் கரங்களை நெறித்து அஞ்சி நாணுற்று, நடுத்தெருவி விருப்பாரைவிட்டு நீங்க மனமெழாமற்றிகைத்து நின்றனர். சிலர்சொன்னத்தையொத்தசாயலை யுடைய தேகமெங்குங் காமன்கணைகள் பாய்ந்து உயிரைவாட்ட மயிர்க்கால் தோறுங் காமநீர்பாய்ந்து வருந்துவார். சிலர் பசுபதி பாசம்நீங்கிய தவத்தர் பெறும் பரமபதமிதுவேயென்று ஐயர்கோசத்தினிடத்து விருப்புற்றுப்பார்த்து களிமிகுந்து கரங்களிலணிந்த வளைகள்சோரவும் பரிவாய்க்கும்பிடுவார். சிலர் இறைவனிடத்துற்ற ஆசையினால்வருந்தி, இல்லங்களிற்சென்று பாலேடுடன் அன்னமுங்கொண்டுவந்து, கரங்களினின்று கழலும் வளையல்களுடன் பாத்தி ரத்தி விடுவார். சிலர் பரமசிவத்தைப்போலக் கோலங்கொண்ட இவர் இவ்வீ திகள் பவித்திரமாக வரக்கண்டும், இடையிலணிந்த வத்திரம் சோர்வதினால் நமக்கென்னகுறை ? கண்கள்குளிரத் தரிசித்தலே மேன்மையென்று களிப் பார், சிலர் நாணமே முதலானவைகளை ஒழிந்தோம் தேவரீரிடத் துற்றமை யால் மனத்தைவாட்டுகின்றதால் நிறைவரம்பற்றோம். காமக்கனல் தகிக்கி ன்றது, தேவரீர் சற்றுத் தயைசெய்து பிராணபிச்சை தரவேண்டுமென்று இரப்பார். சிலர் ஐயருக்கையம் பகிரக்காங்களிலேந்திவந்த அமுதுபடி விரகத் தீக்கொளுத்த வெந்து சாம்பலாகக்கண்டு, அவர் திருமேனியிற் பூசிக்களிப் பார். சிலர் எங்கள் இச்சையைத்தீர்த்து ஆளுமென்று அழகிய பாதகமலங்க ளிலே தொழினும், சற்றுமிரங்கிக் கருணைசெய்யாது விரைந்துசெல்வது இவர் கருத்தாகக் காணுகின்றதனால் ஐயமிட வேண்டாமென்பார். சிலர் சூலமும் சடையும் நுதல்விழியும் பிறையும் செக்கர்வடிவும் சர்வாங்கதூளனமும் அணி ந்திருப்பதினால், இவர் ஆலமுண்டு அடியவரையாண்ட சிவபிரானே யாமெ ன்பார். சிலர் இவ்வையர் குறியினின்று சிந்துந் திவலைகளி னென்றன்றோ? உலகங்களைப்படைக்கும் பிரமனுனதென்று பேசுவார். சிலர் அன்பாகச்சமை த்த அன்னத்தைக் கரங்களிலேந்திக் காமவிகாரம் மதியைமயக்கத் தள்ளாடி நடந்து, ஒளிக்கொளியாக விளங்கும் இறைவன் உருவெளித்தோற்றத்துக்குப் பகிர்ந்துவாடுவார். சிலர் இறைவன் திருவழகைக்கண்டவுடன் ஆசைகொண்டு, உடைசோரக்கண்டு, பெண்குறியை ஒருகரத்தினால்மூடி, மற்றொன்றினால் விழிகளைப்புதைக்க அடங்காமையால் வெட்கி நிற்பார். சிலர் நல்விருந்தாக

வெழுந்தருளினீர். அமுதொத்தபோசன மிடுவோம், அதையுண்டு கருணை யுற்று இமைப்போதேனும் எங்களைத் தழுவிக்கலந்தகல்வது உம்மைப்போன் றவர்களுக்கு அழகென்பார். சிலர் சூலத்தையும் பாத்திரத்தையும் ஏந்தி என் வருந்திப் பாதங்கணோவத் திரிகின்றீர். நம்முடைய மாளிகையில் வந்திருந்து பால் நெய்முதலிய அறுவகைச்சுவை யுண்டியைப் புசித்து, எங்களைக்கலந் தின்புற்று சுகித்தேயிருக்கலாம் வாருமென்றுவேண்டித் தொடர்வார். சிலர் தரிசித்த கன்னியர் ஆடவர்காமுறுஞ் சுந்தரமுள்ள வடிவம்பெற்ற நீர் அற்பமான ஓட்டையேந்திப் பிச்சைக்கு எங்குமுழல்வதென்ன அநியாய மென்பார். சிலர் தெய்வகடாட்சத்தினால் இன்றும்மைக் கண்டவுடன் மனமு ருகிக்கலையிழந்து வருந்துகின்றோம் இனியாவது தயவுசெய்து எங்களைத் தழுவி முத்தமிட்டுப்போமென்று பெருமூச்செறிவார். சிலர் ஓபெண் களே! தாமே இவ்விடந்தேடி வந்த இத்தவத்தர் நமது விரகநோயை யொழித்தல்லதுபோகார், என் மேல்விழுகின்றீரென்பார். சிலர்எங்களை அரக் கக்கன்னியரென் றெண்ணியோ! நாங்கள் நிறையழிந்து தொடர்ந்து வேண் டினாலும் இணங்கீர், இப்பாதகம் உம்மைவிடமாட்டாது, வன்மத்தைவிட்டு மனையில்வந்துபோமென்பார். சிலர் எங்கள் கலையைத்தாரும். அல்லதுகொ ண்ட விரகத்தைத் தீரும், ஒன்றும்பேசாமற் கூடவாரும், உமது குறிப்பின் வழியே சேருமென்று நெருங்கிக்கேட்பார். சிலர் இனியவசனங்களைப்பேசி எங்களைச்சேர்ந்து போமென்று கெஞ்சிக்கெஞ்சி இரந்தாலும் ஆசைதீர அணை யாது செல்கின்றதாற் சங்கரனென்பது இவருக்கு அடுக்குமென்று தூறுவார் இத்தன்மையாய்ப் பலவாக ரிஷிபத்தினிமார் சொல்லி நெருங்கிக் கலைகளும் சங்கங்களும் பூண்களும் நாணமும் அரியகற்புத் தன்மைகளும் நீங்கி ஆசைவ லையிற் சிக்கிவருந்தும் பிராணனைத்தாங்கி, விகாரத்தினாலேங்கி தொடர்ந்து வரும்போது, எமது கர்த்தன் அழகியபாதங்கள்சிவக்க அவ்வீதிகளிற் சிலதூ ரம் வீணைவாசித்தும், சிலஇடங்களில் ஆகமத்தைவிரித்தும் சிலநேரந் தமது மகிமைகளைக் காட்டியும், சில இடத்தில் ஐயமேற்றும் சில இடந்தொண்டரை யொத்துத் தமது பெருமைகளைத் துதித்தும் நடக்குங்காலையில் இலக்குமிக் குச் சமமான ரூபலாவண்ணியங்களைப்பெற்ற ரிஷிபத்தினிகள் பரமசிவன் பாதங்களிற் சொரிந்த மலர்களும் கழன்றிறைந்த வளைகளும் பலபூண்களும் மன்மதனேவிய பஞ்ச புஷ்பபாணங்களும் அவ்வீதிகளெங்கும் நிறைந்து விளங்கின.

கேட்டீர்களோ சவுனகாதி ரிஷிகளே பரமசிவங்கொண்ட கோலத்தை விண்டுவாகிய மோகினிகண்டு மையல்கொண்டு சோருவளாயின் தவத்தியர் செய்கைகளை இவ்வகையெனச் சொல்லிமுடியுமோ! அக்காலையிற் சிதேவிக்கு இணையான வடிவுடைய தவப்பெண்களின் கற்பென்னுஞ் சமுத்திரமானது ஐயன் திருக்கோலமென்னும் மந்தரத்தினாற் கலக்கப்பட்டு நிறையழிந்ததாயி னும் விகற்பமின்றியொருமைப்பட இச்சித்தகன்னியர் காமியத்தை விரும் பிப்போற்றியதால் அவர்கள் இஷ்டப்படி இந்திரசாலமென்னப் பற்பலவுரு வம் அவர்கள் மனத்தில் திரோபவத்தினால் தோற்ற அவைகளைக் காட்சியாக

ஆசைதீரத் தழுவித் தங்களின்பம் நிறைவெய்தியதாக ஆனந்தத்தழுந்திய காலையில் பிரசவ வருத்தமின்றித் தண்டு கமண்டலஞ் சடைமுடி மரவுரியுடன் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளைப்பெற்றார்கள் சிவத்தின் திருவருளினால் உதித்தவராதலால் இறைவன் பாதகமலங்களிலே தொழுதுபோற்றும்போது கர்த்தன் கருணையுற்று, நம்மைக்கருதி இவ்விடத்திலே தவங்களைச்செய்யக் கடவீர்களென்று அருளியவாறே சேவித்து விடைபெற்றுப்போய்ப் பரமனைநினைந்து தவத்திலிருந்தார்கள்; அதன்பின்பு அக்கன்னியர் களிப்பருமற் சமுத்திரத்தைப்போலத் தொடர்ந்துவரக் கண்மலருடன் ஆயிரங்கமலங்களை அருச்சித்த விண்டுவுக்குத் திகிரியளித்த இறைவன் ரிஷிகள் வாசஞ்செய்யுஞ் சாலைகளிடத்தில வருங்காலையில் மோகினியானவள் தவத்தர்கூட்டம் பின்பற்றிக் கெஞ்சிநடக்க,இறைவனைச் சந்தித்தாள். அதெப்படியிருந்ததென்றால்? கங்கையை யமுனைகலந்த காட்சியைப்போன்றது. அக்காலையில் இறைவன் தமது உருவைப் பாதகராகிய முனிவருக்குத் தோற்றாது வேற்றுருக்கொண்டு நீங்கிநின்ற காலையில் சிவகடாட்சத்தினால் ரிஷிகள் மையல்தெளிந்து தங்கள்தேவிமார் தமது வடிவமாகி அலங்கோலமாய்ப் பரந்திருப்பதைக்கண்டு இவர்களும் நம்மைப்போலவே இவனிடத்தின் மால்கொண்டு உடைவளை நாணமுதலானவைகளை நீத்தார்களென்றெண்ணி, மோகினியிடத்துற்ற கவலையிற் சிறிதுநீங்கி தங்கள் பத்தினிமாருடைய ஈனநிலையைக்கருதிவருந்தித்திகைத்தேங்கி மானம் பாதிக்கப் பெருமூச்செறிந்து பிரேதங்களைப்போல நின்று எண்ணுவார்கள். அழகிய நிதம்பத்தையுடைய இம்மோகினி நமது தவத்தை அழித்தாள் அந்தப் பிச்சாண்டி நம்முடைய தேவிமார் கற்பைக்கெடுத்தான். ஐயையோ! காமம் இன்னலிலேதள்ளுமென்பதைத் திஷ்டாந்தமாக்கண்டோம். இதென்னமாயமென்று ஆலோசித்துச் சொல்லுவார்கள். நமது பத்தினியர் நிறையைக் கெடுத்தவன் கயிலைக்கிறையாகிய சிவனாகும்; மோகினியாகவந்து நமது விரதவுறுதிகளைப் பங்கஞ்செய்தவன் உலகையுண்டகண்ணனாகும் இவன்பரமசிவன் புணர்ப்பினால் இவ்விடம்வந்து இதுவரையில் அரிதாகச்செய்துபெற்ற தவங்களைக்கொன்றாலுமினும் அதனைமீளவும் கோற்றுப்பெறலாகும்; கபாலத்தையேந்தி ஐயமேற்பாரைப்போலச் சிவன்வந்து தராதலமெங்கும் புகழ்பெற்ற இத்தாருகாவனத்திலிருக்கும் நமது பத்தினிமார் கற்பையழித்த வசைமொழி சூரியசந்திரரிருக்கின்றவரையும் அழியாமல் நிலைபெற்றிருக்குமே! ஓ! ஓ! இதற்கென்ன செய்வோம் இச்செய்கைக்குக் காரணம் சிவனல்லது வேறில்லையென்று வடவைபோற்கொதித்து எதிரில் நிற்கின்ற தேவியரைச் சீறிப்பார்த்து, ஆர்பின்போகின்றீர்? கற்பழிந்து உயிர் சுமப்பதினும் இறத்தல் நன்காகும். இனியாவது உங்கள் இல்லங்களைச் சேருவீரென்று அதட்ட அவர்கள் பயந்து இறைவன்வடிவை நினைந்துநினைந்து வாடி அக்கிராரத்தைச் சேர்ந்தார்கள்; அப்பொழுது பரமசிவனும் விஷ்ணுவும் கொண்டகோலத்தைத் தரிசிக்கவிருப்புற்றுப்பிரமன்முதலிய தேவர்கள் விண்ணிடத்தில்நெருங்கித்துதித்துவணங்கியிருக்கின்றகாலத்திற் சிற்றறிவையுடைய ரிஷிகள் கோபம் தணியாதாராய் நம்மை வஞ்சித்து மோசஞ்செய்த பாஷாண்டியைக் கொன்று இவ்வபவாதத்தை நீக்

கிக்கொள்வது காரியமென்று ஆலோசித்தாராய் அதற்கடுத்த அபிசார வே ள்வியினைத் தொடங்கி வேம்புமுதலிய விஷச்சமித்துக்களாலும் அவ்வெண் ணெயாதிய நெய்களாலும் அதர்வணமந்திரபூர்வகமாக நடத்திவருகினறபோது பார்க்கப்பயங்கரமான கோரரூபத்துடன் இடியஞ்சமுழங்கிப் பிறையைப் போலக் கூரியதாய் வளைந்த நகங்கள்பொருந்திய கைகளைவிசி அக்கினியை யொத்து விழிகள்சுழலக்கோபித்து ஒருபுலியானது அத்தீயின்மத்தியி லெழு ந்தவுடன் அதனை யுபசரித்து ஈசனைக்கொன்றுவரக்கடவாயென்றேவினார்கள். அவ்வேங்கையானது கடுமையாகப்பாய்ந்து உலகம்நடுங்க மேலிட்டுவர அதை இறைவன் பற்றியுரித்து அவ்வதளை யிடையிலுடுத்தார். இச்செய்கையைத்தெ ரிந்து ரிஷிகள் பொங்கிமீளவுஞ் சூலமொன்றை யுண்டாக்கித்தூண்டினார்கள். அப்படையானது அக்கினியைக்கக்கி உலகமெங்கும் நடுங்கச்சுழன்றுவர, அதை எமது கர்த்தன்பற்றி நமக்காயுதமாக விளங்கக்கடவாயென்று கரத்தி லேந்தினார். பின்பு கலைமானொன்றைச்சிருட்டித்தனுப்ப, அக்கலைமானானது ஆகாயத்திற்பாய்ந்து அணடங்களதிரக்கூவிக் கூரியகொம்புகளை யசைத்துத் தாண்டி வருவதை லோகநாயகன்கண்டு, கிருபாநோக்கம்பாலித்தழைத்து இடைவிடாமல் நமது சிரவணானந்தமாகக் கூவியிருப்பாயென்று இடக்கரத் திலேதாங்கினார். பின்பு அளவற்ற கருநாகங்களை யுண்டாக்கியனுப்ப, அவை கள் உலகமெங்கும்பரந்து விஷங்களைக் கக்கிக்கொண்டு சீறிவருவதை இறை வன்கண்டு முன்கருடனுக்கஞ்சி வந்தடைந்த சர்ப்பங்களுடன் ஆபரணமாக அணிந்தார், அதை முனிவர் அறிந்து கோபித்து அளவற்ற பூதவெள்ளங்களைச் சிருட்டித்து சிவனைக்கொன்று வரும்படித் தூண்டினார்கள்.

அக்கணங்கள் புவனங்களதிர ஆர்ப்பரித்துமேலிட்டுச் செல்வதைக் கண்டு, தம்மையடுத்தவர் தீங்குகளையகற்றிக் காக்கவல்ல இறைவன் அவைகளைக் கிருபையாக வரவழைத்து தமது சேனைகளாக்கிக்கொண்டார். அதன்பின்பு வேள்வியைமுடுக்கி நகுவெண்டலையொன்றை நிருமித்துபரமனை யுண்டு வரக்கடவாயென்று செலுத்தினார்கள்; அதுவெளிப்பட்டவுடன் பகி ரண்டங்களும் நடுநடுங்க நகைத்துப்புறப்பட்டு வருவதைநோக்கித் தமது திருக் கரத்தினேந்திச் சிரத்தினின்று உனது பணிவிடையைச் செய்திருப்பாயென் றணிந்தார். இதையறிந்த ரிஷிகள் வடவையைப்போற்பொங்கித் தாங்கள்கற்ற அதர்வணமந்திரங்கள் அனைத்தையும் ஒருவகைப்பட நிருமித்து எமதையனை நாசஞ்செய்யப் போக்கினார்கள், அவையொரு துடியுருப்பெற்றுத் திசைகளெங் குஞ் செவிடுபடவொலித்து வருங்காலத்தில் அவ்வதிர்ச்சியினாலே தேவலோ கத்தார் பூமண்டலவாசிகள் ஐயன் அனுக்கிரகத்தினால் இறவாமல் இடியுண்ட சர்ப்பங்களையொத்தொடுங்கி வருந்தினார்கள் அப்படி மேலிட்டுவருவதை இறை வன்பற்றி நமது செவிக்கின்பமாகக் கறங்கி யிசைகளைப்பாடி யிருப்பாயென்று திருக்கரத்திற்பற்றி நின்றார். பின்னும் அக்குண்டத்தில் முயலகனென்னும் அரக்கனை யுண்டாக்கி வேள்வித்தீயையுங்கூட்டி ஈசனைநாசஞ்செய்து வரக் கடவீரொன்றேத்திவிடுப்ப வெளிப்பட்டவுடன் திரிலோகங்களும் கலங்கவிளை ந்து ஆர்ப்பரித்து வரும்போது திருக்கரத்தைநீட்டி அவ்வேள்வித்தீயை மழு

வாகவேந்தியும் முயலகனைத்தள்ளிப் பாதங்களின்மிதித்தும்நின்றார். இவைக ளனைத்தையுந்தரிசித்த தேவர்கள் ஆனந்தபரவசராய்க் கர்த்தன் குணதிசயங் களைத் துதித்து வாழ்த்தினார்கள்; இச்செய்கைகளை முனிவர்களறிந்து ஐயை யோ எத்தெத்தனை பொருள்களை விதித்தேவினாலும் அவைகள்சிவனைக்கொல் லாமல் அவனுக்கடங்கினவேயென்று மிகவும்வருந்திப்பொறுமையினால்சங்கார! நீசாசமடையக்கடவையென்று அளவற்றசாபங்களைவிட்டார்கள், அவை இறை வனிடத்து நெருங்காமற்பிரசண்டவாயுவை சேர்ந்ததீயைப்போலவும் அனலிற் பட்ட பூளைப்புட்பத்தை நிகர்த்தும் அழிந்துபோயின; அதனைக்கண்டு தாங்கள் செய்த முயற்சிகளொன்றேனும் பயன்படாததினால் வேறுசெயலற்றுச் சோப முற்று நங்கம்பெற்று நீங்காதபாவமும் பழியும் பிணங்களைப்போலப் பூமிக்குச் சுமையாக நின்றார்கள். கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே! அரியதவங் களைச்செய்தும் இருவினைகளைக் கூட்டிமுடிக்கும் இறைவனொருவனுண்டென் றுணராத விவேகசூனியர்களாகிய இந்த ரிஷிகள் அஞ்ஞானத்தை யென்னெ ன்றுசொல்லுவேன்; இறுதியில்லாத பரம்பொருளை முடிக்கநினைந்து வேள்வி யில் அளவற்றகொடுமைகளை யுண்டுபண்ணி யேவினார்கள் சபித்தார்கள் இவை களால் அவனை யழிக்கப்படுமோ? ‘கெடுவான் கேடுநினைப்பான்’என்னும் வாக் கியத்துக்கியையத் தங்கள் பெருமிதங்கள் அனைத்தையும் இழந்து வசைபெற் றுத் தீனரானார்கள்; அக்காலத்திற் கங்காசடாதரராகிய பரமன் தமது பாதத் திலூன்றிய முயலகன் மெல்லமெல்ல எழும்பியசைய அவன் அகங்காரத்தை யடக்கத் திருவுளங்கொண்டு தமதானந்த நடனத்தைச் செய்வதாயினார். அவ் வதிர்ச்சியினாற் சகமனைத்தும் நடுக்குற அதிலடங்கிய சீவராசிகள்பயந்து திடுக் குற்றேங்குங் காலையில் தாருகாவனத்து முனிவர்களும்மடிந்தவனைப்போலத் திகைத்து நிலத்தில் மறிந்தகாலத்தில் அவ்வானந்த நடனத்தை விஷ்ணு பிர மன்தரிசித்துக்களித்துச் செயசெயவெனப்போற்றிக் கரங்களைக்கூப்பித்தொ ழுதிருக்க தேவேந்திரன்முதலியதேவர்கள் பணிகின்றவனையொத்து அடியற்ற பனையைப்போலச் சாய்ந்தார்கள். இவ்வகையாகச் சகலரு மறிந்தசெயலைக் கர்த்தன் திருவுளத்தறிந்து நடனத்தைநீங்கிக் கிருபாநோக்கம்பாலிக்க இந்தி ரன்முதலியோர் அவ்வாறெழுந்துவாழ்த்தி நிற்கின்றபோது தம்மை மதியாமல் அகங்கதையுற்று அயர்ந்த ரிஷிகளிடத்து அன்பாய் அவர் மயக்கத்தைத் தவிர் த்தகாலத்தில் அவர்கள் நல்லுணர்வுதித்து மனங்குழைந்தவராய்க் களைப்பொ றுத்து ஆட்கொள்ள வேண்டுமென்று பாதகமலங்களிற் சேவித்துப்போற்ற அவர்களிடத்து அன்பாய் இன்றுமுதல் நமது பஞ்சாக்கரத்தைச் சபித்துத் தவத்தைச்செய்வீரென்று அவ்விடத்திலிருத்தி விஷ்ணுபிரமன்முதலியவர்களு க்கு விடையளித்து திருக்கயிலைக் கெழுந்தருளினார். செய்ந்நன்றிகொன்றதக் கனே! சிவன் புலியதள் ஆதியானவை தரித்தவகையும் நிருத்தஞ்செய்த கார ணமும்சொன்னோம், இனிமற்றவிவரமும்விரிப்போம் கேட்பாயாக. பூர்வத்திற் கயாசூரனென்னும் ஓரவுணன்பிரமனைநோக்கி அரியதவங்களை முடித்தபோது அவர்காட்சிகொடுத்து நீவேண்டிய தியாதென்ன சுவாமீ! வலியும் மாளாத செல்வமும் தரவேண்டுமென்று இரந்தான்; அதற்குப் பிதாமகன் நகைத்து

நல்லகாரியம் உன்விஷ்டப்படித்தந்தோம், ஆனல் திரிநேத்திரதாரியுடன் எதி ர்ப்பையாயின் இவ்வரமழியுமென்று தமதுலகமே சேர்ந்தார். பின்பு கயா சூர னென்பவன்சிவனையொழிய மற்றவரைவென்று அரசுசெயயக்கருதி சதுரங்கச் சேனைகளுடனெழுந்து திக்குவிசயஞ்செய்து தேவர்களைவென்று பொன்னுல கத்தை முற்றிக்கைபோட்டுக்கொண்டு இந்திரனுடனெதிர்த்து அகோரயுத்தஞ் செய்து துரத்தி அயிராவதத்தின் வாலைப்பற்றிச் சுழற்றியெறிந்து தேவலோக த்தையழித்து இராக்கதரைக்கருவமடக்கி கடையில் தீனரானமானிடர் முனி வரைவளைந்து சாடியலைக்குங்காலத்தில் அவர்கள் உபவத்திரவத்தைச் சகி க்கமாட்டாமற் பரமசிவமெழுந்தருளிய காசியையடைந் தொளித்தார்கள். அப்போது ஆலகாலத்தைப்போலக் கயாசூரன் தங்களைத் தொடர்ந்துவருவ தையறிந்து அந்நகரவாசிகளுடன்நடுங்கி விச்சுவநாதர்ஆலயத்தடைந்து அடுத் தவரைப் பாதுகாத் தருள்செய்யுந் தயாநிதியான இறைவன் பாதங்களில்விழு ந்து தேவாதிதேவா! யானையுருப்பெற்ற அரக்கனெருவன் உலகங்களையழித்து எங்களையுங் கொல்லவருகின்ருன்.தேவரீர் பாதாரவிந்தங்களிற் சரணடைந் தோம் காத்தருளும் காத்தருளும் வேறுகதியில்லையென்று போற்றினர்கள் அப் போது கயாசூரன் மேகத்துக்கொப்பாகக் கர்ச்சித்துமணிகர்ணிகை வாயிலின் முன் வருவதைக்கண்டு சகலரும் பிராணபீதியினற் சன்னிதியிலோடி இறை வனைத்தழுவிமுறையிட்டார்கள்; கயாசூரன் அதையும் எண்ணுமல் இடியைப் போல ஆர்ப்பரித்து உள்ளேவருவதை விஷத்தையுண்டு தேவரையாண்ட கட வுள் கோபித்து சிரம் அண்டத்தையளாவத் தேகம் திசைகளைமறைக்கப் பிர ளயகால வுருத்திர வுக்கிரவடிவுகொண்டு கோடிசூரியர் உதித்ததைப்போலத் தேககாந்திவீச வெளிவந்தொருதரம்நகைத்தார்; அவ்வதிர்ச்சியானது அண்டா ண்ட புவன சராசரங்கள் அடுக்கழிந்து அலைந்தொடுங்கச்செய்து இப்புவனங் களில் அளவற்றயுகங்கள்மாருமலிருக்க அதனைக்கேட்ட பிரமன் முதலியதேவர் கள் திடுக்கிட்டு இது யுகமுடிவோவென்று அயிர்த்தார்கள்.

பின்பு கர்த்தன் அவ்வுருவுடன் கயாசூரனெதிரில்வர அதை அப்பாத கன்கண்டு சிவனென்று அறிந்து அகங்காரத்தினற் பிரமன் வாக்கியத்தையும் மறந்து சண்டைக்காயத்தப்பட அவனை வடவைக்கனலும் அஞ்சவிழிகளிற் பொறிசிதறநோக்கி ஒருபாதத்தினலுதைத்து குப்புறவீழ்த்து அவன் சிரத்தை மற்றொருபாதத்தினல் மிதித்துக்கொண்டு கூரியநகத்தினற் பிடரியைக்கீறி அதனையுரித்துப்பார்ப்பதியும்வெருவப் போர்த்துக்கொண்டார்; அவ்விரத்தவா டையினெளியைக்கண்டவர்கள் நடுக்குற்று விழிகள்வீசி ஒளியிழந்து வருந்து தலைக் கர்த்தன் அறிந்து கையமைத்து பழயபடியே பார்வையுண்டாகக் கடா ட்சித்து அவர்கள் அச்சமொழியக் கயாசூரன்தோலைத் தோளிற் சேர்த்துக் கொண்டு முன்போன்று ஆலயத்தில் எழுந்தருளினர். பின்பு மயங்கிவிழுந்த பரிசாரகர் முதலாயினேர் தெளிந்தெழுந்து கயாசூரனெலும்பும் மாமிசமும் மலைபோலக்குவிந்திருப்பதைகண்டு நமது இறைவன் அழித்தானெனக்களித்துச் சமுத்திரத்தையொக்கச் செயசெயவென்ருர்த்து ஆனந்தக்கூத்தாடி தேவாதி தேவன் குணதிசயங்களைத் துதித்தார்த்தார்கள். தேவர்களும் முனிவர்களும்

போற்றி வாழ்த்தினர்கள்; இவ்வாறாகச் சகலரும் பயமொழிந்து தங்கள்பதியையடைந்து இன்புற்றனர் அகந்தையிற்சிறந்த தக்கனே எமதுகர்த்தன் யானையுரிபோர்த்த காரணம் இதுவாகும்; இனிப் பிரமகபாலமேந்திய சரித்திரத்தைச்சொல்லுவோம்; முன்னொருகாலத்தில் மகமேருசிகரத்தின் மீது எழுந்தருளியிருக்கின்றபிரமன் விஷ்ணுவைத் தேவராசன்முதலிய விண்ணவரடைந்துசேவித்து திரிமூர்த்திகளில் முதன்மையாய் ஆதியந்தமீறில்லாத பரம்பொருளாய்த் தேவராதியரைப்படைத்த இறைவனாய் உயிர்க்குயிராயிருக்கின்ற பிரமமாவதியாவர்? எங்கள் மயக்கந்தீரப் போதிக்கவேண்டுமென்று வினவும்போது சிவத்தின்மாயையில் அகப்பட்டவனாதலின் பிரமனானவன் தேவரைப்பார்த்து நாம்தான் பிரமமெனச்சொல்லப் பக்கத்திலிருந்த திருமால்நகைத்து உன்னைப் படைத்த நாமே முதற்காரணனென்றான். இவ்வாறிருவருக்கும் கலகம்நேர அவர்கள் அளவற்றயுகங்கள் தர்க்கித்து வயிரமுற்றச் சண்டைக்காயத்தப்படுகையில் சதுர்வேதங்களுங் குடிலையும் வெவ்வேறுருத்தாங்கி அவர்கள்முன் தோன்றி ஏன் வீண்வாதுகொடுக்கின்றீர்கள். சகலருக்கும் தாய்தந்தையராய் எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருப்பவன் அவனே பரமென்று சொல்லின அவ்வாக்கியத்தையுங் கேளாமற் பொருகின்றவர் கருமபங்கம்பண்ணத் திருவுளங்கொண்டு சிவபிரான் அளவுபடாத சோதிவடிவாய் இருவருக்கும் மத்தியில்நின்றார். இது சிவச்செயலென்றேயுணராமல் அவன் மாயையிற்பட்டுத் தீரமாயிருக்கும்போது இறைவன் அச்சோதிமத்தியில் உமாமகேசுவரமூர்த்தமாய்த்தோற்றவிஷ்ணுதரிசித்துத் தெளிவுண்டாய்ப் பரமனைப்போற்றித்தொழுதான். பிரமன் திரோபவத்தினாழ்ந்து உணர்ந்திலனாதலால் அவன் அகந்தையையும் தேவர்செருக்கையும்வாட்டத் திருவுளங்கொண்டு சிவன் வயிரவ மூர்த்தியை யுண்டுபண்ணி சிவந்து நீண்டசடைகளும் அக்கினியைப் போலக்கனலும்விழிகளும் சிரமாலிகையும் தமருகமும்சர்ப்பாபரணமும் தேகமெங்கும் தூளணமும்விளங்கக் கைகூப்பி நிற்கின்றவரைப்பார்த்து இப்பிரமன் நடுச்சிரம் நம்மையிகழ்வதற்குக் காரணமாதலால் அதனைக்கிள்ளிக் கரத்திற்கொண்டு அவனுயிரைப் பாதுகாப்பதன்றியுந் தேவர்முனிவர்கள் முதலானவர் இடங்கடோறுஞ்சென்று அவர்களுதிரத்தையும் பலியேந்தி உயிரைக்காத்து அகந்தையையொழித்தபின்பு அண்டமுகட்டில் அமர்ந்து பிராணிகளுக்குத் துன்பமின்றிக் காத்திருக்கக்கடவாயென்று அருளிஅச்சோதியில்மறைந்தனர். இக்காட்சிகளைத்தரிசித்த கண்ணன் பரமசிவத்தின் பெருமைகளைக்கொண்டாடித் தன்னுலகத்தைச் சேர்ந்தகாலத்தில் வயிரவர் இறைவன்கட்டளைப்படிப் பிரமன் நடுத்தலையை அரிந்தமாத்திரத்தில் பிரமன் இரத்த முலகெங்கும் பெருக்கெடுத்தோடப் பிராணனிழந்து பூமியில்விழுந்தான்.

அப்போது வயிரவர் தமது நெற்றிவிழியினா லுதிரவாரியைமாற்றிப் புவனங்களைக்காத்துப் பிதாமகனுக்கும் பிராணனைக் கடாட்சித்தவுடன் அவன் எழுந்து வயிரவர் பாதங்களிற் சேவித்துப்போற்றி பரமசிவத்துக்கிழைத்த பவத்துக்கீடாக இத்தண்டனையையும் தீராதபழியையும்பெற்றேன்; தேவரீர் அனுக்கிரகத்தினால் ஆணவமடங்கி நல்லுணர்வையுங்கிடைத்தேன், அடியேன்

காணுந்தோறும அகந்தைக்குள்ளாகாமல் தெளியும்பொருட்டு இச்சிரத்தைச் சூலமேந்தியதைப்போலவே திருக்கரத்திற்கொண்டு காக்கவேண்டுமெனப் போற்றியதை அங்கீகரித்து மகமேருவைநீங்கிப் பரமசிவகடாட்சத்தால் தமக் குப் படைத்துணையாகவந்த காலவேகன், கனன்முகன், சோமுகன், ஆல காலன், அதிபலன் முதலான பூதர்கள் சூழ்ந்துவர ரிஷிகள்தேவர்வாசந்தோ றுஞ் சென்று அவர்கள் உதிரப்பலிகொண்டு பிராணனையுங் காத்துப் பவித்திர மாக்கியபின்பு இறைவன் மாயையைக்கடக்க அறியாமல் மயங்கிய விண்டு வாழும் வைகுந்தத்தைநோக்கிநடக்கின்றதருணத்திற் பூதப்படைகளின் முன் னணியானது அப்பதியில் நுழையவருவதைச் சங்குசக்கரந்தரித்து அளவற்ற சேனைகள்போற்ற முதல்வாயிலைக் காத்திருக்கின்ற படைத்தலைவன்கண்டு தடுத்தான். அப்போது இருதிறத்தவருக்கும் அகோரமானயுத்தமூண்டது. அத்தருணத்தில் வயிரவர்வந்துசேர்ந்து அக்காவலனைச்சூலத்திற்குத்தியேந்தி ஆலயத்திற் பிரவேசிக்கும்போதிற் சேஷசயனத்திற் பள்ளிகொண்டு சிதேவி பூதேவி யிருமருங்கினுமிருந்து பாதங்களை வருடக்களித்திருந்த விஷ்ணுவான வர் திடுக்கென்றெழுந்து எதிர்கொண்டுசேவித்துப்போற்றி, தேவரீர்வந்தகாரிய மென்னெனக்கேட்க, பலிக்குப்போந்தோம், உமது உதிரத்தை நெற்றியின்மூல மாகத்தாருமென்றுதிருவாய்மலர்ந்தருள; திருமால்மகாபாக்கியமென்றிசைந்து தமதுநுதலில் நகத்தினுற்குத்தி உதிரத்தைப்பெருக்க வயிரவர் கோடிவருஷ காலமேந்தியுங்கபாலம்பாதியும்நிறைந்ததில்லை. அத்தருணத்தில்மேகவண்ணன் சோபமுற்றுவிழுந்தார். இதனைத் தேவியர்கண்டு நடுங்கிக்கோபித்து, வயிரவக் கடவுள் பாதகமலங்களிலேதாழ்ந்து புருஷபிச்சை தரவேண்டுமென்று முறை யிட அவர் பயப்படாதீர்களென்று கையமைத்து விண்டுவுக்கு உயிரையளி த்து நடக்கும்போது கண்ணன் பின்தொடர்ந்து, சுவாமீ! தேவரீர் சூலத்தே ற்ற துவாரபாலகனைத் தயைசெய்து விட்டுப்போகவேண்டுமென்று வேண்ட, கிருபையுற்றுப் படைத்தலைவனையிறக்கிப் பிராணனையுங்கடாட்சித்து, வைகுந் தத்தைக்கடந்து விச்சுவநாயகனுகியபரமசிவத்தின்கட்டளைப்படி அண்டபித் திகை முகட்டைச்சேர்ந்து, பூதப்படைகள்சேவிக்க வீற்றிருந்து, புவனங்கள னைத்தையும் அதிலடங்கிச் சிவகோடிகளுடன் பாதுகாத்து, அரசுசெலுத்தி யிருந்து சர்வசங்காரகாலத்திற் பரமசிவத்தின் அனுக்கிரகப்படி வேதனுளி யின்மீதாரோகணித்து பிரமன் விஷ்ணு தேவேந்திரனுதியான விண்ணவரை யும் மற்றச்சராசரங்களையும் நுதல்விழித்தீயினுலே தகித்துலவுவார். மேற் கூறியபடி கபாலமேந்திய காரணம் முகுந்தன் வேதன்முதலானவர். அகந் தையை நீக்கியீடேறக் கருணைபாலித்ததல்லது வேறுகநினைக்கவேண்டாம். இதுநிற்க, இனிவேற்றுருவெடுத்தகாரணத்தைக்கேளென்று ததீசிமுனிவர் தக் கனைப்பார்த்துச்சொல்வதாயினர். முன்னெருகாலத்திலே தேவராசன் தான் திரிலோகங்களுக்கும் சக்கரவர்த்தியென்றும், கொடியதயித்தியரைவென்றே மென்றும், தனக்கொருவரும் நிகரில்லையென்றும் அகந்தையிற்பட்டவனுய் அரசுசெலுத்திவருகையில், ஒருநாள் பரமசிவனைக்கண்டுவரவேண்டுமென் கின்றகோரிக்கையுடன் அயிராவதத்தின்மீதேறி, விண்ணவர்சூழ்ந்துபோற்றிச்

செல்லத் திருக்கயிலாயத்தைச்சேரவந்தான். அதை இறைவனறிந்து இந்திரன்கெருவத்தையடக்கிரட்சிக்கத் திருவுளங்கொண்டாராய்ப் பாரிடவேடந்தாங்கி ஆலயமுகவாயிலினிடத்தில் வந்து நின்றார், அப்போது பாகசாதனன் அவரைப்பார்த்து, இன்றைக்குத்தான் உம்மை இவ்விடத்திற்கண்டோம், தாட்டிகமாய் நிற்கின்றீர், நீர்யார், கர்த்தனைச்சேவிக்கின்றதற்கு இதுதருணமோசொல்லென்றுகேட்டான், அதற்குத்தேவாதிதேவன் மாறுரையாடாமல் உக்கிரமாய்ப்பார்த்துநிற்க, நம்மைச்சட்டை பண்ணாமலும் கேள்விக்கெதிர்மொழி கொடாமலும் பராமுகமாயிருக்கின்ற இவனுணவத்தை அறிகின்றேனென்று மேல்விளைவதையறியாதவனாய், இந்திரன் அதிககோபங்கொண்டு, இரைந்து தன்காத்தில்விளங்கும் வச்சிராயுதத்தைச் சிறுகிறெனச்சுழற்றி வீசினான். அந்தப்படை அதிவேகமாகவந்து, அனலுருவமாகிய பரமசிவத்தின் தேகத்திலேதாக்கிச் சாம்பலாய்ப் பறந்துபோயது, பின்புகர்த்தன் அவ்வடிவைமாற்றி, கணத்தரசாகி, விழிகளில் அக்கினிப்பொறிசிதற நாசியில் சுவாலையும்புகையுமெழப் பெருமூச்செறிந்து திரிபுராதிகளையெரித்த வகைவிளங்கத்தோன்றினார். அதைஇந்திரன்கண்டு, நடுநடுங்கி தேகமெங்கும் வியர்க்கக் கைகாலுதற வாய்புலர்ந்து குளறக் கரங்களைச்சிரத்திற்கூப்பி, தேவாதிதேவா, லோகநாயகா, இருவர்தேடற்கரிய சோதிமயமே, தேவரீர்பெருமைகளையும் குணுதிசங்களையும் திருவிளையாடல்களையும் எம்போன்ற மூடராலறியப்படுமோ, அஞ்ஞானசம்மவத்தினால் அடியேன்செய்த அபராதத்தைப்பொறுத்துக் காக்கவேண்டுமென்று பலவிதங்களாகப் போற்றிப்பணிய, பரமன் தேவராசனைப்பரிந்துநோக்கி, பயப்படவேண்டாமென்று கையமைத்து ஆயிரங்கிரணங்களையுடைய சூரியன் நழுவியதைப்போலத் தமதுசீற்றத்தைச் சமுத்திரத்தினிடத்தில்வீசி, தேவேந்திரனுக்குப் படையும் விடையும் கொடுத்தனுப்பித் தமதாலயத்தெழுந்தருளி, பார்வதிமகிழ வீற்றிருந்தார். இந்திரனும் கெருவமடங்கிப் பிழைத்தோம் பிழைத்தோமென் றதிகபயங்கரத்துடன் பொன்னுலகையடைந்தான்.

இப்பால் சமுத்திரத்திலெறிந்த கோபக்கனலானது சிவகடாட்சவீட்சண்ணியத்தினால் ஒருபுத்திரனாய்விளையாடுவதைக்கடற்கிறைவன் அறிந்துமகிழ்ந்து தானவேசனே நமக்கும்பிள்ளையாகக்கிடைத்தான், என்னைப்போலயாவர் தவஞ்செய்தார்கள், ஊழூழிகாலம் தீர்க்காயுளாயிருக்கக் கடவதென்றுவாழ்த்தி, அலைகளினாலே தாலாட்டி, சகலசெல்வவுபசாரங்களுடன் வளர்த்துவருங் காலங்களில், ஒருதினம் அக்குழந்தைபசியினால் வீரிட்டழ, அவ்வொலியினதிர்ச்சியினால் திசாதிசைகளெங்குஞ்செவிடுபட்டுப்பிராணிகள்வருந்தின,அம்முழக்கினைப்பிரமன்கேட்டு அதிசயமடைந்து, சமுத்திரராசனிடத்துக்குவர, அதை அவன் அறிந்து எதிர்கொண்டு, சேவித்துடன்கொண்டுபோய், சிங்காதனத்திலெழுந்தருளச்செய்து பூசித்தபின்பு, சுவாமி, இது என்குழந்தை, ஆசீர்வதியுமென்றுகொடுக்க, ஆசையாகக்கரத்திலேந்தி, மடியிலிருத்தி முத்தாடுகையில், அப்பாலன்கரத்தைநீட்டி பிரமன் நான்குதாடிகளையுஞ்சேர்த்துப்பற்றிவலிக்க, அவ்வுபாதியினால் எட்டுவிழிகளினும் முத்துக்களைப்போல்

நீர்துளித்துச்சிவக்க வருந்ினவனாய், குழந்தையினைலலிதப்படுத்தி, மெல்லெனநீக்கிக்கொண்டு, சீக்கிரமாகக் கடற்கிறையி னிடத்திற்கொடுத்து, போதவுணர்வைப்பெருக்கியதிந்து, சமுத்திரராசனே, இந்தச்சிசுவைச் சுலபமாக நினைக்கவேண்டாம், எமதிறைவனாகிய பரமசிவத்தின் சீற்றவுருவாகும், இக்குமாரன்பலவானாய், ஒருவனையும்மதியாமல் தேவர்முதலானவரைவென்று, இராசராசனாகிச் சகலரும்போற்றத் தனக்கெதிரிக ளொருவருமில்லாமல் அரசுசெலுத்துவான், இவனுக்குத் தேவர்வரமுயற்சிகள் வேண்டுவதில்லை, சிவனல்லது, மற்றொருவராலும் இவனைக்கொல்லப்படாது, இக்குழந்தைக்குத் திருநாமஞ்சலந்தரனென் றிடக்கடவாயென்றுசொல்லி, பிள்ளையை ஆசிர்வதித்துச் செலவுபெற்றுக்கொண்டு, தன்பதியைச்சேர்ந்தான். பின்பு அந்தப்பிள்ளைநாளொருமேனியாகவளர்ந்து, காளைப்பருவத்தில்வில்வித்தைமுதலானவைகளைப் பூர்ணமாகக்கற்றுத்தீரனாய், பிதாவினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, பூமியின்கண்வந்து, இராக்கதரைக்கலந்து, தேவேந்திரனாதியரைக் கெருவமடக்கி, திசைகளைவென்று, சகலலோகத்தாருந் தன்னேவலைச்சிரமாகவகித்துப்போற்றக் கொடுங்கோல்செலுத்தி, புயபலபராக்கிரமத்தினால் அசுரர்களுக் கரசனாய், தன்குலக்கம்மியனைத்தருவித்து, பொன்னுலகமும் அளகையும் வைகுந்தமும் நாணும்படி யொருநகரை நிருமிக்கக்கட்டளையிட்டான். சிற்பியானவன் மகாபாக்கியமென்று வணங்கிப்போய், விசாலமாகிய ஓரிடத்தைக்குறித்து சத்தப்பிராகார மதிலையெழுப்பி, அண்டவடுக்குகளைப்போல் நிலைகள்பொருந்திய கோபுரங்களைநிறுத்தி, மத்தியிற் கடலென்னத் தக்கதாகப்பரந்த அகழிகளைப்படைத்து, மாடமாளிகைகள் மண்டபங்கள் சித்திரகூடங்கள் இருமருங்கினும் நவரத்தினமயமாக பொன்னினாற்சோடித்துப்பிரகாசிக்க விசாலமாக நீண்டவீதிகள் அரசனிருக்கும் உப்பரிகை ஆத்தானமண்டபமுதலானவைகளைச் சாத்திரவிதிப்படியாக நிருமித்து, அப்பதிக்குச் சலந்தரபுரமென்று பெயருமிட்டு, அரசனுக்கு அறிக்கையிட்டமாத்திரத்தில், அவ்வரசன் மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர் மன்னமண்டலீகர்சூழக் கோட்டையின்சீரையும் பட்டணத்தின்வகுப்பையுங்கண்டுகளித்து தச்சனைக் கொண்டாடி, சபாமண்டபத்தில்வீற்றிருந்து, சகலரும்போற்ற அரசுசெய்து வருங்காலத்திற் காலநேமியென்னும் அவுணன் அரிதிற்பெற்றவளாய் இலக்குமியையொத்தவடிவும் வேலைப்போன்ற விழிகளுந் தங்கக்கலசத்தை நிகர்த்த கொங்கைகளும் மயிலைப்பழித்த சாயலும் அன்னத்தினு மெல்லியநடையுங் குயிலைத்துரத்துங் குரலுங் கிள்ளையையோட்டும் மதுரவசனமும்பெற்றுப் பிரவிடையாயிருக்கின்ற பிருந்தையென்னுங் கன்னிகையின்செய்தியை அறிந்து, தன்மனவிருப்பத்தைச்சொல்லியனுப்பிப் பிதாவினிசைவின்மேல் அக்கன்னிகையைத் திருக்கலியாணஞ்செய்துகொண்டு, காமனும்இரதியும்போலச் சரசசல்லாபசுகலீலைகளை யனுபவித்துவருகையிலையில், இந்திரன்முதலியதேவர் மகமேருச்சாரலிற்கூடியிருப்பதாகச் சிலதூதர்வந்து சொல்லக்கேட்டுக் கோபமுடையனாகிச் சதுரங்கசேனைகளுடன்வர, அதைத்தேவர்கள் அறிந்து, இவ்விடத்திலும்பாதகன்வந்துவிட்டானே, இனியென்னசெய்வோம், எங்கொளிப்

போமெனச் சிங்கத்தைக்கண்ட மிருகங்களைப்போல்நடுநடுங்கி, வருந்தித்திகைத்து, ஒன்றுந்தோன்றாமற்கடையில் இத்தருணத்திற்பாதுகாக்கவேண்டுமென விண்டுவைப்போற்றித் தியானித்தார்கள். அவர் இவர்கள்முறையைத் திருச்செவியிலேற்றுக் கருடவாகனருடராய், அவ்விடத்தில்வந்து, சலந்தரனுடனெதிர்த்து, இருபதினாயிரதேவவருடம்அகோரயுத்தங்களைச்செய்தும் வெல்லவாற்றலில்லாமல், உன்னைப்போன்றவீரன் திரிலோகங்களினுமில்லையென்று கொண்டாடி, சிநேகம்பண்ணிக்கொண்டு, தமதுலகத்தைச்சேர்ந்தார், அத்தருணத்தில் தேவேந்திரன்முதலிய விண்ணவரோடி, திருக்கயிலாயத்தையடைந்தொளித்தார்கள். சலந்தரன் இவர்களை அவ்விடங்களில்தேடிக்காணாமற்கோபித்தவனாய், வெள்ளியங்கிரியிற்சேர்ந்திருப்பார்கள். அதையறிந்துகொண்டுபோய்ச் சாடுவோமென்று நிச்சயித்துத் தன்பதிக்குவந்து, சிலதூதரைத் தூண்டினான், அவர்களதிவேகமாயோடி, இருக்கப்பார்த்துத் திரும்பிவந்து, ராசனைச்சேவித்து தேவரனைவருமிருக்கின்றசெய்தியை விண்ணப்பஞ்செய்தமாத்திரத்தில், சலந்தரன் வடவையைப்போற் சீற்றங்கொண்டு, தன்சேனைகள் அனைத்துமெழும்படிக் கட்டளையிட்டு, தானுஞ் சர்வாயுதபாணியாய்ச் செல்ல, அதைத்தேவியாகிய விருந்தை அறிந்துஓடிவந்து கணவனைமறித்துக் கொண்டுபிராணநாயகா! திருக்கயிலைக்குப்போகவேண்டாம்,பரமசிவனுடனெதிர்த்தவர்களில் யாவர் பிழைத்தார்கள், பிராணஆனிவருமென்று பலவகைகளாலேதெருட்டவுங் கேளாமல்தூறிக்கொண்டு,ஊழ் வினைதூண்ட ரதாரூடனாகி,சமுத்திரம் புரண்டதற்கிணையாகடக்குஞ் சேனையைக்கலந்து, கயிலையைக்கிட்டினான், அதைத்தேவர்கள்கண்டு, பாதகன் இதோவந்துவிட்டானே, இனியென்னசெய்வோம், நாள்தோறும் இவனுபத்திரவப்பட்டுமுடியவில்லை, ஆதலாற் சலந்தரன்மாளும் ஏதுவைத் தேடவேண்டுமென்று ஆலோசித்து இறைவனெழுந்தருளிய கோயில்முகவாயிலில் வீற்றிருந்துபோற்றும் நந்திதேவரைவணங்கித்துதித்து, தங்களுக்கடுத்ததுன்பத்தைவிண்ணப்பஞ்செய்து, அவரனுமதியினாற் சிவபிரான்சன்னிதானத்திற்சென்று, மும்முறைவணங்கிப் போற்றி, தேவாதிதேவா, பத்தவற்சலா, தயாநிதி, வருணராசகுமாரன் சலந்தரனென்னும்பெயருடைய இராக்கதனொருவன் உலகங்களையலைத்து எங்களையும் சின்னபின்னப்படுத்திய காரணத்தினாற் பொன்னுலகவாழ்வைவெறுத்து மேருவரையிலொளித்திருந்தோம், அச்செய்தியைத் தூதராலறிந்துதொடர்ந்தான். அவன்கொடுமைக்கஞ்சிக் கேசவனைத் தியானித்தோம், அவரெழுந்தருளிப்பொருது, வெல்லக்கூடாமையாற் புகழ்ந்துபோயினர், அச்சமயத்திலே தப்பித்துக்கொண்டு இவ்விடஞ்சேர்ந்தொளித்தோம், அதையும் விசாரித்துச் சேனைகளுடன் இதோவந்துவிட்டான், ஆகையால் கிருபையுற்று எங்களைக்கமும் அவனுக்கமுந் தவிர்த்தாண்டு காக்கவேண்டுமென்று முறையிட்டார்கள். அதைக் கர்த்தன்திருச்செவியிலேற்று, இனிப்பயப்படவேண்டாமெனக் கையமைத்து, தமது திருவிளையாடலைநினைந்து, விருத்தசந்நியாசியாகி, குண்டிகையுங் குடையுந்தாங்கி, கோலூன்றித்தள்ளாடிக்கொண்டு, சலந்தரனெதிரில்வந்து, இராக்கதராசனே, நீயார்? எவ்விடமிருப்பது, யாரைத்தேடி இத்

தலத்தில்வந்தாய், சொல்லுமென்றுகேட்க, பெரியவரே, சமுத்திராசபுத்திரன், என்பெயர் சலந்தரன், பகைவராகிய தேவரையும் அவர்களுக்கிடந்தந்தாதரிக்குஞ் சிவனையும் வெற்றிகொள்ளவந்தேனென்று மறுமொழிகொடுக்க, அவனைப்பார்த்து, இகழ்ச்சிக்குறிப்பாகநகைத்து, நாம் இறையவன்சந்நிதானத்திருந்து அவர்வல்லபங்களனைத்தினையும் அறிந்திருப்போம் பரமசிவத்துடன் போர்செய்வையாயின், இறந்துபோவாய், இன்னஞ்சிலகாலம் உயிருடனிருக்க மனமிருந்தால், திரும்பிப்போவது நேத்தியென்றுசொன்னர். உடனேசலந்தரன் வடவாமுகாக்கினியைப்போலக் கோபித்து, தேகமெங்கும் வியர்வையரும்பப்புருவம்நெற்றியிலேற மீசைதுடிக்க அக்கினியும் புகையும்பெருகப் பெருமூச்செறிந்து, நீர் என்னைச்சிறியவனாக நினைந்தீர், என்வெற்றிகளையும் வன்மையையுஞ் சொல்லியாவதென்ன, சிலநேரம்நின்றெனது புயபலபராக்கிரமத்தைப்பாருமென்றுரையாட, அதைச்சிவபிரான்கேட்டு, நல்லகாரியம், உன்சவுரியத்தையும் வலியையும் அறியத்தான் வந்தோமென்று, தமதுபாதப் பெருவிரலினாலே பூமியில் வட்டமாகக்கீறி, சலந்தரனே உன்வல்லபத்தினால் இதோ கோடிசூரியப்பிரகாசமாய் விளங்குஞ் சக்கராயுதத்தை யெடுத்துச் சிரத்திலேதாங்கமாட்டுவையோ, என்றுகேட்க, அவன்நகைத்து, விருத்தரே இந்திரன்முதலான தேவரை, முதுகிட்டோடத்துரத்தினேன், கங்கையைக் குளமாகவளைத்தேன், வடவைக்கனலைக் குளிரச்செய்தேன், விஷ்ணுவை வென்று அவரால் புகழப்பெற்றேன். அப்படிக்கொத்தவலிபெற்ற எனக்கிதனைத் தாங்குவதரிதோ இதோபாருமென்று ஊங்காரித்து, அச்சக்கரத்தை ஒருகரத்தினாலேந்தி மற்றக்கரத்தையுந்தாங்கித் தூக்கப்படாமையால் மார்பிலணைத்து, அரிதினெடுத்துச் சிரத்தில்வைத்தான்; இதைக்கண்டதேவர்கள் முதலானவர்கள், இவன்வலியேவலி, சூரனென்பது இவனுக்கே தகுமெனக் கொண்டாடினார்கள். அத்தருணத்தில் அத்திகிரிசலந்தரனுடலை இருகூறாகப் பிளந்துதள்ளியது. அத்தேகத்தின்றும் உதிரமானது ஊற்றெடுத்தோடியெங்குமூட அதனையும் அவன்பின்வந்த சேனைகளையும் தமது நுதல்விழித்தீயினாலேமாற்றி பரமசிவன் பழையகோலங்கொண்டார், அப்போது அச்சக்கரம்சோதிமயமாயெழுந்து, இறைவனிடத்திற்சேர்ந்தது. இக்காட்சிகளையெல்லாந்தரிசித்ததேவேந்திரனாதியாகிய விண்ணவர்பலதரந்தொழுதுபோற்றி சச்சிதானந்மூர்த்தி பலகாலம்வருந்திய எமது குறைகளைக்கணப்போதிலொழித்தாண்டீர், இனிப்பிழைத்தோமென்று ஆனந்தக்கூத்தாட அவர்களைக்கிருபையாகப்பார்த்துவிடைகொடுத்தனுப்பிவிட்டு, பரமசிவன்தமதாலயத்தைச்சேர்ந்தார். இப்பால்சலந்தரன் தேவியாகிய விருந்தையின் சவுந்தரியத்தைக்கண்டு ஆதியில் மையல்கொண்டிருந்த விஷ்ணு, இதுதருணமென்றெண்ணி, கபடசந்நியாசிவேடந்தாங்கி, சலந்தரன் அரண்மனையில் வானத்தையளாவித்தழைத்திருண்டிருக்கின்ற நந்தவனத்திலே ஒரு குருக்கத்தி நீழலில் தவத்தைச் செய்கின்றவனைப் போலவிருக்க, அக்கன்னிகையர்னவள், நமதுகணவனைக் கயிலைக்குப்போகவேண்டாமென்று தடுத்தும் நில்லாமற்போயினரோ, செய்தியொன்றும் தெரியவில்லையே, என்னசெய்வேனென்று வெதும்பி வாடி

நிலைபெருமல் இங்குமங்குமாய், இருதலைக்கொள்ளியில் அகப்பட்ட எறும்பை போல அலைந்து, ஒன்றுந்தோற்றுமலும் அரண்மனையிலிருக்க மனந்தாபரி யாமலும் பரிமளமிகுந்த பூஞ்சோலையினிடத்துவந்தாள். அத்தருணத்தில் கேசவனுக்கிணைப்படிக்கு வைகுந்தவாயிலைப்போற்றுந் துவாரபாலகர் இருவர் புலிவடிவுகொண்டு சீறி அவளெதிரிற்பாய அவள் அதைக்கண்டு, இடியுண்ட சற்பத்தைப்போல, ஏங்கியோடி கபடசங்கியாசியைக்கண்டு அபயமென்று நெருங்கினுள், அச்சங்கியாசி பயப்படாதேயென்று கையமைத்து புலிகளை யதட்டித்தூரத்திவிட்டார். அப்போது அவ்விருந்தை அவனைப்பார்த்து இவர் மகத்துவாகக்காண்கின்ருர். இவரால் நமக்குவேண்டுஞ் செய்தியைத்தெரிந் துகொள்ளலாமென்றெண்ணி. என்னிஷ்ட தேவதையைப்போலவும், பிதா வைப்போலவும் இத்தருணத்திலெழுந்தருளிய தபோநிதியே! என்கணவன் பரமசிவத்தின்பேரிற் சண்டைக்குப்போயினுர், இதுபரியந்தம் அவர்வரக்கா ணேன் செய்தியொன்றுந்தெரிய இல்லை, தேவரீருக்குச் சகலமுந்தோற்று மாதலால் அவர் இறந்ததும் உயிருடனிருப்பதும் அநுக்கிரகஞ்செய்யவேண்டு மென்றிரந்தாள். அக்கபடசங்கியாசி நல்லகாரியம், சற்றிவ்விடத்திரும்; திஷ் டாந்திரமாகக் காட்டுவோமென்று, தமதெண்ணப்படிக்கு ஆதியிற் புலியாக வந்த துவாரபாலகர் குரங்காகநிற்கக்குறித்து அவரைநோக்க, அவரோடிப் பிளந்துகிடந்த சலந்தரனுடலைக்கொண்டுவந்து சேர்த்தார்கள், அப்போது அவள் இருகூறுயிருக்கின்ற கொழுநனைக்கண்டவுடன் பதைபதைத்து விழு ந்துபுரண்டரற்றி, மரணமூர்ச்சையாயினள். அக்காலத்தில் முன்னம் அவ ளிடத்தாசைபெற்றிருந்த சங்கியாசி அவளைவாரியெடுத்து, மார்பிலணைத்துக் கொண்டு சயித்தியவுபசாரங்களைச்செய்துதேற்ற அவள் தெளிந்தெழுந்து தப சியைச்சேவித்து, உம்மையொத்த மகத்துவமுடையவர்களெங்குமிரார், அடி யேன்பிராணனைக் காத்தாற்போலவே என்கணவன் தேகத்தையும்பொருத்தி உயிருண்டாக்கிப் புருஷபிச்சைதரவேண்டுமென்று போற்றினுள். அத்தவசி நல்லதென்று, சலந்தரனுடலைச்சேர்த்து, அதில் தான்பிரவேசித்தெழ, அதை விருந்தை கண்டமாத்திரத்தில் ஆனந்தவாரியில்மூழ்கி கொழுநனைச்சேவித்து ஓ பிராணநாயகனே! வந்தீரோ, உம்மைக்காணுது இதுவரையில் வருந்தினே னென்று தழுவி இருவருமாய் மாளிகையைச்சேர்ந்து. அறுசுவையுண்டியைப் புசித்தும் கலவைச்சாந்தணிந்தும் பரிமளமிகுந்த புஷ்பமாலைகளைச்சூடியும் பஞ்சணைமெத்தையிற் சரசசல்லாபங்களைச்செய்து இன்பமுற்றும், இவ்வகை யாக அன்றுமுதல் அளவற்றகாலம் இடைவிடாமல் வங்கணமாகக்களித்திருந் தார்கள் அத்தருணத்தில் ஒருதினம் அம்சதூளிகாசயனத்தில் மெய்ம்மறந்து முகுந்தன்நித்திரைசெய்ய பரமசிவன் கட்டளைப்படி விஷ்ணுகோலந்தோற் றியது. அதைக்கண்ட விருந்தை நடுநடுங்கி, இவன் மாயனுகுமென்று நிதானி த்து. நடந்த விருத்தாந்தங்களைத் தன்னறிவினுலறிந்து கோபித்து, புலியாகவ ந்தஉன்வாயில்காப்போர் உனக்கு வயிரிகளாக அரக்கர்குலத் துதிக்கக்கடவர், நீயும் பூமியில் அரசர்குலத்தவதரித்து, என்னை வஞ்சித்தபடியே உன்பத்தி னியை அவ்வசுரர் மாயைசெய்துகொண்டுபோக குரங்கினங்களைச்சேர்த்துக்

கொண்டு, வனங்கள்முதலிய இடங்கள்தோறும் அலேந்துழன்றுஉலகோரிகழ்ந்து பழிகூற இருக்கக்கடவையென்று கொடியவசைசொல்லி, எரியைவளர்ப்பித்து அதில்விழுந்திறந்தாள். இவைகளனைத்தையுங்கண்ட விஷ்ணு அவளிடத்துற்ற இச்சையினாலேங்கி, வாடி வருந்தி விருந்தையிறந்த சுடலைப்புழுதியில்விழுந்து புரண்டு பிரலாபித்திருந்தார். அதைப்பிரமன்முதலாகியதேவர் அறிந்து, திருக்கயிலைக்கு விரைந்து சென்று இறைவன் பாதகமலங்களிற்சேவித்துப்போற்றி விண்டுவுக்கடுத்த இன்னலை விண்ணப்பஞ்செய்தார்கள். அதைக்கேட்ட பரமன் திருநகைகொண்டு, உமையவளைப்பார்க்கப் பராபரை கிருபையுற்று, ஒரு வித்தையுண்டாக்கித்தந்து இதனைக் கண்ணன்முன் நாட்டக்கடவீரென்று கொடுக்க, பிரமன்வணங்கி வாங்கிப்போய், விருந்தையிறந்த மயானத்திற்சாம்பலைப்பூசி மயங்கியிருக்கின்ற கேசவனெதிரில்நாட்ட, அது துளசியாகமுளைத்து உட்னே திவ்வியவடிவுடைய பெண்ணுருப்பெற்றுநிற்க அவளைத்தாமோதரன்கண்டு, விருந்தையிடத்திற்பெற்ற மையலையொருத்து அவண்மீது மோகமாயினர். அதைக்கண்டதேவர் களித்து அவளை விண்டுவுக்கு மணஞ்செய்தார்கள். பின்பு மாயன் அப்பெண்ணைக்கூடி வைகுந்தமேபோய்ப் பிரியாவிடையாய் அனுபவித்திருந்ததன்றியும் சிரத்தினும் அணிந்தார். அதுமுதல் திருத்துளவம் விஷ்ணுவுக்கு உவப்பாயிற்று. அப்பால் விண்டுவானவர் சலந்தரனைப்பிளந்த சக்கரத்தைப்பெறக்கருதிப் பரமசிவத்தை யளவற்றகாலம் பூசித்துவருகையில், ஒருநாள் சகஸ்திரநாமார்ச்சனைக் கொருகமலம்குறைவுபடக்கண்டு, பணிவிடையிற் றவறுவாராமல் தன்கண்மலரை இடந்து சாத்திப் பூசிக்க, இறைவனிரங்கிக் காட்சிகொடுத்து கண்ணன்விரும்பிய சக்கரத்தையுங்கடாட்சித்தார், அன்றுமுதல் விண்டுவுக்கு நேமியானென்னு மொருநாமம் விளங்கியது.

ஓ! தக்கனே? சங்கரன் வேற்றுருக்கொண்டவிவரமிதுவாகும்; இனிஅவர் இடபவாகனமேறியகாரணத்தையும் சொல்லுவோம், சதுர்யுகங்களும் இரண்டாயிரவிசை திரும்புமாயின் ஒருநாள், அதுமுப்பது கூடியதுமாதம், இவை பன்னிரண்டு சேர்ந்தது வருடம், அதுநூறுநிறைந்தால், பிரமன் தனக்குப் பூரணுயுளாகி இறப்பான். அக்காலம் விண்டுவுக் கொருநாள், முன்குறித்தவாறே நூறுவருடஞ்சென்றால், அவரும் இறப்பார், அண்டங்களிடியும், சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் பிரசண்டவாயு மோதுதலினாலோங்கி யெங்கும்மூடிக்கொள்ளும், அக்காலத்திற் பரமசிவன் ஏகனாய் தமது அக்கினிவிழியினாற் சகலத்தையும் நீறாக்கிவிளங்குகின்றஅவ்வீமத்திலே சத்திகண்டுகளிக்க ஆனந்தநிருத்தஞ்செய்வார். அத்தருணத்தில் தருமதேவதை, நாம்இறவாமலிருக்கும் உபாயம் யாதென்றாராய்ந்து, கங்கையைச் சடாமகுடத்தணிந்த பரமேசுவரனை யடைவோமேல் அப்பேற்றினையே பெறலாமெனத்துணிவு கொண்டு ஏற்றினுருவாகி இறைவனெதிரில்நின்று, சுவாமி அடியேனைப் பாதுகாத்து வாகனமாக ஊர்ந்து காக்கவேண்டுமென்று பலவிதங்களாகப்போற்ற, பரமன்கிருபையுற்று அவ்வரத்தைத்தந்து, இனியுதிக்கின்ற சதுர்யுகங்களிலே கிரேதாயுகத்தில் நான்குபாதங்களினும் திரேதாயுகத்தில் மூன்றுபாதங்களி

னும் துவாபரயுகத்தில் இரண்டு பாதங்களினும் கலியுகத்தில் ஒருபாதத்தினும் பதக்கிரமமாகத் தருமத்தை நடத்தக்கடவாய். நம்மைத்தாங்கும் முயற்சியி னாற் சகல சிறப்புக்களும் வல்லபமும் பெற்று, அடியார்களிற் சிறந்தவர்கள் பாதகங்களைநீக்கி, எக்காலத்தும் நமது வாகனமாக விளங்குவாய். நாமுமுன் னைப் பிரியாவிடையாகக் கலந்திருப்போ மென்று அளவற்றபேறுகளை அளித் தார் இக்காரணத்தைக் கருதியல்லவோ திரிபுரதகனஞ் செய்தகாலத்து விண்டு விடபமாகிப்பரமசிவத்தைத்தாங்கினர். இது எருதேறிய சவிஸ்தார மாகும். இதனாற் கர்த்தனுக்குக் குறைவுண்டோ, பேதாய்? இனி விடமுண்ட கதையைக்கேள். ஆதியிலொருகால் தேவரும் அசுரரும் பகைத்தெதிர்த்து அளவற்றயுகங்கள் அகோரயுத்தங்களைச்செய்து, இருதிறத்தவரினு மிகுதியாக மாண்டிளைத்தகாரணத்தையோசித்து, இனி ஆயுளைவிருத்திசெய்துகொண்டு நீடித்துச் சண்டைகொடுத்து, செயாபசெயத்தை அறியவேண்டுமென நிச்சயி த்து பிரமனிடஞ்சென்று தங்கள்கருத்தை விண்ணப்பஞ்செய்து, சுவாமி! திருப்பாற்கடலைக்கடைந்து அமிர்தமுண்டாக்கித்தரவேண்டுமென்றுபோற்ற, நான்முகன் கேட்டு, நீங்கள் விரும்பியகாரியம் நம்மால்முடிவதன்று, விஷ்ணு வினலாகுமெனச்சொல்லி, அவர்களைக்கூட்டிக்கொண்டுபோய், திருப்பாற் கடல்மத்தியிற் சேஷசயனத்தமர்ந்து யோகநித்திரைசெய்யும் விண்டுவைத்தரி சித்து, அனந்தலெழுப்பிப்போற்ற, அதைத்திருமால் செவிகளிலேற்று திருக் கண்களைவிழித்துப்பார்த்து, நீங்கள்வந்தகாரியம் யாதென்று திருவாய்மலர்ந் தருளினர். அப்போது பிரமன் அஞ்சலிசெய்து தேவேந்திரன்முதலானவர்கள் கோரிக்கைகளை விண்ணப்பஞ்செய்து, அதுமுடியு முபாயம் தேடவேண்டு மென்றுகோருவதை விண்டுயோசித்து, அவர்களுடன்கலந்து, மந்தரகிரியைத் தருவித்து மத்தாகநாட்டி, வாசுகியைத் தாம்பாகப்பூட்டி தேவரொருபுறமும் அசுரரொருபுறமுமாகத் திருப்பாற்கடலைக் குமுறக் கடைவித்தார். அத்தறு வாயில் அவ்வருத்தத்தைவாசுகி பொறுக்கமாட்டாமல் விழிகள்பிதுங்க நாவை நீட்டி, இளைத்து, ஆயிரம் வாய்களினும் விஷங்களைக்கால அது அக்கடலிற்ப ரவி இரட்டித்து அபரிமிதமாயோங்கி சடசடத் தொனிகளுடன் சுவாலையை வீசி, எதிர்த்தவர்முதலான சமஸ்தத்தையும் சாம்பலாகத் தகித்து வருவதை விண்ணவர் தானவர் முனிவர்கூட்டமுதலானவர்கண்டு நடுநடுங்கிநிற்கச் சக்தி யில்லாமற் பலதிக்கினும்புறங்கால் புட்டத்திற்றாக்க வோடினர்கள். அதை ஆமையுருக்கொண்டு மந்தரத்தை முதுகிலேதாங்கிநின்ற கண்ணன் அறிந்து, அபாயம்விளைந்தது. இனித்தாமதப்படலாகாதென்றெண்ணி, அதிதீவரமாகத் தமதுருவெடுத்துச் சங்கு சக்கரம் கதை கோதண்ட மாதியான படைகளைத் தாங்கி, மண்டியெரிந்துபாயும் விடத்துக்குநேராக அதட்டிச்செல்ல, ஆலம் வெகுண்டுதாக்கிய மாத்திரத்திற்பழையவயிர நிறமாறி, தேகம் கரிகரிந்து, எதிரில்நிற்கப்பயந்து பரமசிவனெழுந்தருளிய திருக்கயிலையைநோக்கி யாவ ருடனுமோடினர்.

கேட்டீர்களோ சவுனகாதி ரிஷிகளே! இவர்களனைவரும் தேடிச்சென்ற தரிதோ? பிள்ளைகள் தங்களுக் கிடருற்றகாலத்திற் பிதாவையடைந்து முறை

விட்டுக் கொள்ளாமல் யாவரிடத்திற் போவார்கள்? இவ்வகையாக அல்லோல கல்லோலப்பட்டுநெருங்கியதேவர்முதலானோர்இறைவனெழுந்தருளியிருக்கும் ஆலயமுதற்றிருவாயிலில் வீற்றிருந்து அரசுசெலுத்தும் எமது இறைவனாகிய நந்திதேவனைக்கண்டு வணங்கி,கரங்களைக்கூப்பித் தேவரீரைத்தெரிசித்த மாத்திரத்தில் எங்கள் மனத்துயரமொழிந்தோமெனத்துதித்து, தாங்கள் வந்தகாரணத்தை விண்ணப்பஞ்செய்ய அதை நந்திபெருமான்கேட்டு, அவர்களையாதரித்துஅவ்விடத்தில்நிறுத்தி, சிவபெருமான் சந்நிதானத்திற்சேர்ந்து கேசவன்லானோர், வரவை விண்ணப்பஞ்செய்து, இறைவன் கட்டளைபெற்று வெளிவந்து,பிரமன்விஷ்ணுவைப்போலும்,அவர்களும்ஆலயத்திற்போய் விச்சுவநாதனைத்தரிசித்துப் பலதரம்பணிந்து, ஆனந்தக்கூத்தாடிப்போற்ற, அதைப் பரமன்பார்த்தருளி, மாலே! உனது தேகம் வேற்றுருவாய் வாட்டமுற்றுவந்த காரணமென்னென்றுவினவினர். அப்போது கேசவன்நடந்தகாரியங்களைத் தெருட்டி சுவாமி! தேவரீரனுக்கிரகம்பெறாமல் இக்காரியத்தைத்தொடங்கினமையால் இக்கெடுதிநேர்ந்தது,அடைக்கலமடைந்தோம், இறைவனே? இதோ ஆலகாலவிஷம்மேலிட்டுத்துரத்திவருகின்றது. முன்னாளிற்பலமுறை அடியோங்களைப் பாதுகாத்தாற்போலவே இக்கொடுமையையும் நீக்கிக் காக்கவேண்டுமென்று போற்றினர். அத்தருணத்தில் திருமலைப்புறத்திற் சூழ்ந்துநின்ற சுராசுரர்கள் அரகரவெனத்துதிக்குமொலி சர்வாந்தரியாமியாகிய பரமசிவத்தின் திருச்செவியிற்புக,அதைத்தாம் அறியாதார்போல இதென்னகோட்டமென்று வினவ, சுவாமி! விஷத்துக்கஞ்சி எங்களைத்தொடர்ந்துவந்தவர்களது முழக்கமென்று மாயவன் விண்ணப்பஞ்செய்யக் கேட்டருளிப் பரிவாய் நந்திபெருமானைப்பார்த்து,அவர்களனைவரையும் அழைத்துவரக்கடவாயெனக் கட்டளையிட்டனன். அவ்வாறேநந்திபெருமான்யாவரையும்உள்ளேவிட்டமாத்திரத்தில் அவர்கள் யாவரும் பரமசிவன் திருவடிகளைத்தரிசித்து, ஆடிப்பாடித்துதித்து, பற்பலவிதங்களாகத்துதித்து,தங்கள்இன்னலைத்தீர்த்துக்காக்கவேண்டுமென்று முறையிட்டார்கள். அப்போது பயப்படாதீர்களென்று கையமைத்துக் கிருபாநிதியாகிய இறைவன் இடப்பாகத்தில் வீற்றிருக்கும் பரமேசுவரியைநோக்கி, இவர்கோரிக்கையை ஈடேற்றுவது உனக்குச்சம்மதமாஎனக்கேட்க, உமையவளும் அஞ்சலித்து சுவாமி! சரணடைந்தாரைக் காத்தருளல் கடனாதலால் திருவுளப்படியே கருணைபாலிப்பதுஉத்தமமாகக் காணுகின்றதென்றுசொல்ல, அவ்வாக்கியத்தைக்கேட்டுப் புன்முறுவல்பூத்து, ஏவற்பணிவிடைகளைநடாத்திப் பக்கத்திற்காத்திருக்கின்ற ஆலாலசுந்தரனை யழைத்து, தேவர்கள்நடுங்க வருகின்ற காளத்தைத் திரட்டிவரக்கடவாயென்று கட்டளையிட்டார். உடனே அவர் வணங்கிப்போய், உலகமெங்கும் பரந்தெரிக்கின்ற நஞ்சை ஊங்காரித்தழைத்துச்சேர்த்துவந்துஇறைவன்திருமுன்காட்டினார். அப்போது இறைவன் அதனைத்திவலைப்பிரமாணமாக உள்ளங்கையிலேந்தி, விண்டுமுதலியவரைநோக்கி, இவ்வாலத்தைப்புசிக்கவோ, அல்லது தொலைதூரத்திற்போக வெறியவோ? உங்கள் சம்மதமென்னென்றுவினவ, யாவருந்தொழுது தேவாதிதேவா! இக்கொடிய விஷம் தேவரீர் திருக்கரத்திலணுமாத்திரமா யடங்கி

யிருக்கின்றது, இதனைவிடுவீராயின் அண்டாண்ட புவனசராசரங்களை இமைப்போதில் அழித்துவிடும், இதுவல்லாமல் யாவராயினும் எக்கருமங்களைச் செய்தபோதிலும் முதலிலுதிக்கின்ற பொருள்கள் அனைத்தும் தேவரீருக்குப் பிரீதியாதலால் அடியோங்கள் பிழைக்கும்பொருட்டு இதனையுண்டருள வேண்டுமென்றிரக்க, பயப்படாதீர்களென்று கையமைத்துக்கரத்தில் விளங்கும் விஷத்தை யுட்கொண்டருள விண்டுபிரமன்முதலானோர் தொழுது எங்களைப் பாதுகாத்தற்கு இலக்கணமாக இக்குவைக்கண்டத்தில் நிறுத்தவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அவ்வாறே நிலைபெறச்செய்தனர் ; அவ்விடமானது நீலமணியைப்போலப் பிரகாசித்திருப்பதால் அன்றுமுதற்சிவபிரானுக்குங்காளகண்டமூர்த்தியென்னுந் திருநாமம்விளங்கியது. இதைக்கண்டகடவுளர்முதலாயினோர் இறந்து உதித்தவர்களையொத்து ஆனந்தக்கூத்தாடி ஐயன்பெருமைகளைப்பாடித் துதித்தனர், பின்பு சிவபிரான் கண்ணன் முதலானவர்கள் மீது திருக்கண்சாத்தி நீங்கள்போய் மீண்டும் திருப்பாற்கடலைக் கடைவீராயின் உங்களிஷ்டப்படியே அமுதமாதியானவை உண்டாகுமென்று அனுக்கிரகஞ்செய்தனுப்ப அவர்கள் சேவித்து விடைபெற்றுச்சென்று பழயபடிக்கு மத்திக்க அமுதமும்மற்றவஸ்துக்களு முண்டாயின அவைகளைக் கிரமப்படிக்குச் சகலரும் பெற்றுக்கொண்டு மகிழ்ந்தார்கள்; விடமுண்ட கதை இதுவாகும். இனிக்கங்கையைத்தாங்கிய விவரத்தைக்கேளென்று ததீசிமுனிவர் சொல்லுவர். முன்னொருகாலத்திலே திருக்கயிலாயத்தில் விளங்கிய பூங்காவிற்பரமசிவமும் உமையவளும் வேடிக்கை நிமித்தமாக எழுந்தருளியிருக்குந் தருணத்தில் பார்ப்பதி திருவிளையாடலைக்கருதி இறைவன் விழிகளைத்தனது திருக்கரங்களினாலே புதைத்தாள். அக்காலத்தில் உலகங்களை விளக்குகின்ற சூரியசந்திரர் அக்கினி இவைகள் இறைவன்கண்களினொளியாதலாற் பிரகாசியாமலடங்கின ; இத்திருவிளையாடல் இமைப்போதாயினும் புவனங்களுக்களவற்ற யுகங்களாக உயிர்கள் காடாந்தகாரமான இருளிற்பட்டுக் குருடாகி தடுமாறி அலைச்சற்பட்டன அதை எமதிறைவன் திருவுளத்தடைத்து அவற்றின் இடரையொழித்தளிக்கத் திருவுளங்கொண்டு நெற்றிக்கண்ணைத்திறந்தார் அவ்வொளியினால் அண்டாண்டபுவனங்களில்மூடியிருந்த இருளும் சீவராசிகள்மயக்கமும் நீங்க முன்போலவே ஆதித்தனும் சோமனும் அக்கினியும்விளங்கினார்கள். இச்செய்கைகளைச் சர்வலோகநாயகிகண்டுபயந்து மூடிய கைகளைவாங்கும்போது விரல்களினிடத்துப் பெருகும் வியர்வையையுதறஅவை கங்கைகளாகிக் கடல்போலப் பெருகிஆயிரநூறுகோடி முகங்களாய்எங்கும் பரந்தொலித்து உலகங்களையழித்தோடின. அதைப்பிரமன்முதலானோர்கண்டு பயப்பிராந்திகொண்டு திருக்கயிலாயத்துக்கோடி நந்திதேவரனுமதியில் ஆலயத்திற் சென்று இறைவனைக்கண்டு துதித்துப் போற்றி தீனதயாபரனே! தேவாதிதேவனே! சுவாமி இதோ மிகுந்தவெள்ளமானது கடையுகசமுத்திரத்தினுமேலிட்டுக் கல்லென்னுமொலியுடன் பெருகி புவனசராசரங்களை யழிக்கத்தொடங்கியது; தேவரீர் சற்றுத்தாழ்க்கின் அனைத்தும் முடிவெய்தும், ஆதலாற் கருணையுற்று ஆதியில் அழலென்றெழுந்த விடத்தையுண்டு பாதுகாத்தாற்போலவேஇதையும்பரித்துயாவ

ளையும் காக்கவேண்டுமென்று வேண்ட; இறைவன் இரங்கி அவ்வெள்ளத்தைச் சடைகளில்விளங்கும் ஒருரோமத்திற் சுவறச்செய்தடக்கினர். இப்பெருமையைக்கண்டவிஷ்ணுபிரமன் இந்திரன்முதலாகிய தேவர்கள் இறைவன்மகிமைகளைக்கொண்டாடித்தொழுது சுவாமி! பார்ப்பதியார் திருக்கரத்திலுதித்துத் தேவரீர் முடியிலேதாங்கப்பெற்றமுயற்சியினல் அதுபவித்திரமாகும், ஆதலால் அக்கங்கையிற் சில எங்களுலகங்களிற்பெருகக் கடாட்சிக்கவேண்டுமென்றிரந்தார்கள். அப்போது பரமசிவன் அன்பாய் அத்தீர்த்தத்திற் சிலதிவலைகளை அம்மூவர் கரங்களிலேதெளிக்க அவர்கள்வணங்கியேந்தி விடைபெற்று தங்களுலகமேசேர்ந்து அத்தீர்த்தங்களைவிட்டார்கள். உடனே அவைகள் பரமபதத்தில் விரசாநதியென்றும் சத்தியலோகமாகிய மனேவதியில் மானததீர்த்தமென்றும் இந்திரலோகத்தில்தேவகங்கையென்றும் ஆறுகிப்பெருகின. இவைகளில் பிரமலோகத்திலிருந்த கங்கையைப்பகீரதன் அரியதவத்தைச்செய்து பெற்று பரமசிவத்தின் சடையின்மூலமாகப் பூமியிற்கொண்டுபோய் இறந்தசகரர்கள் அத்தியின்மேற் பெருக்கினன். கங்கையினதுபரிசம் பட்டமாத்திரத்தில் அறுபதினயிரம் அரசபுத்திரர்களும் நரகவாதனையொழிந்து மோட்சவீட்டில் நித்தியமாயிருக்கப்பெற்ருர்கள். மற்றஇரண்டும் பொன்னுலகத்தினும்வைகுந்தத்தினும் விளங்குகின்றன. உலகவுபாதியை நீக்கும்பொருட்டு இறைவன் கங்கையைமுடியிலே தரித்தசரித்திரம் இதுவாகும்; இனித்தமது கூறுகியபராசத்தியை வாமபாகத்தில்இருத்தியவரலாற்றைத் தக்கனேசொல்லக்கேட்பாயாக; முன்னெருசர்வசங்கார முடிந்தபின்பு சிவத்தினனுக்கிரகத்தினல் உதித்தபிரமன் சீவராசிகளைப்படைக்க நினைந்து சனகன் சனற்குமாரன் சனந்தரன் சனதனனென்னும் நான்குகுமாரர்களைப்படைத்தான். அவர்கள் பரமசிவனைக்காணும்பேரறிவைப்பெற்று யோகிகளாயினர். இதனைக்கண்டு தன்படைப்புமல்காத காரணத்தினற் பிதாமகன்வருந்திப் பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டுவைகுந்தத்திற்போய் விஷ்ணுவைக்கண்டு சேவித்துத் தன்மனக்குறையை விண்ணப்பஞ்செய்து இதற்கொருமார்க்கத்தைப்போதிக்கவேண்டுமென்றுபோற்ற விஷ்ணுவோஅம்ம இக்கருமம் நம்மால்முடிவதேயன்று, சிவகருணையினலாகவேண்டுமெனக்கருதி அவர்களுடன் திருக்கயிலாயத்திற்சென்று நந்திதேவரனுமதியிற் பரமனைத்தரிசித்து,வணங்கித்துதித்துத்தேவாதிதேவா! பிரமசிருஷ்டி ஓங்காமையால் அதைத்தேவரீர் கடாட்சிக்கவேண்டுமென்று துதித்தார்கள்; அப்போது சிவபிரான் அவர்களைமாய்த்து நீறுசெய்து ஏகனுபிருக்கின்ற தமது இடப்புயத்தைநோக்க உதித்த உமையவளைக்கலந்து விஷ்ணுபிரமன் சனகாதியர்களைப்படைத்தனன், அவர் இறைவனைப்பணிந்து துதிக்குங்காலையில் இறைவன் கண்ணன்மீது திருக்கண்சாத்தி நமதனுக்கிரகமாகிய சத்தியைக்கலந்த முறைமையினல் இனி பிரமசிருஷ்டி மல்குமென்றருளிச்செய்ய அவர்கள்களித்து ஈடேறினேமென்று ஆனந்தக்கூத்தாடி அம்மையப்பனை வலம்வந்து விடைபெற்று தங்கள்பதங்களிற் சேர்ந்தார்கள், பின்புசிவகடாட்சத்தினற்பிரமன் சராசரப் பிரவஞ்சங்களைப் படைத்தனன் சத்திசிவங்கலந்த முயற்சியினல் உலகத்தில் ஆண்பெண்ணினங்கள்சேர்ந்து இன்பமுற்றுப்பரவிய தோற்றமனைத்தும் சத்திமயமாகும், சிவமங்

கேபொருந்தி நடிப்பிக்கும் அகந்தையிற்சிறந்த தக்கனே! பிரமசிருஷ்டி நீட இறைவன்தமதருளாகிய சத்தியைக்கலந்தகாரணம் இதுவாகும் பேதாய் பின்பு கர்த்தன் பிள்ளைகளைப்பெற்ற காரணத்தைச் சொல்லக்கேட்பாயாக முன்னொருகாலத்திலே தேவராசன் விண்ணவரைக்கூட்டிக்கொண்டுபோய் இராக்கதர்களுடனெதிர்த்து அகோரயுத்தங்களைச்செய்து சின்னபின்னம்படக்கொன்று துரத்திவென்று விஞ்சையர்முதலானவர் வாழ்த்தெடுப்பச்சயசங்காகத்துடன்மீண்டு பொன்னுலகத்தைச்சேர்ந்து களித்திருந்தான். இப்பால் ஓடிப்போன இராக்கதராசன்வருந்தி இனியென்ன செய்வோமென் றெண்ணுதெல்லாமெண்ணியெண்ணி வாடிப்பின்பு சுக்கிராசாரியன் ஆசிரமத்திற்சென்றுஇந்திரனுக்குத்தான் தோற்றதையும் தன்மரபிலே தேவரை வெல்லவல்ல சவுரியவான்களொருவருமில்லாமையையும் தனக்குநேர்ந்தவசையையும்முறையிட்டு, சுவாமி!இனி இராக்கதமரபு நசித்துப்போகுமோ வீறுமோ தேவரீருக்குத்தெரியுமாதலால் திருவுளம்பற்றவேண்டும்; இதுவல்லாமல் எங்கள்குலத்துக்காசிரியனுயிருக்கின்ற நீர்இம்மரபுமேல்கத்தக்கதாகவுதவிசெய்வது உமதுகடமையாதலின் அடியேனுக்கொருதேறுதலைப் போதிக்கவேண்டுமென்றிரக்க,பார்க்கவன் சிலபோது ஆலோசித்து ஓயரசனே கிலேசிக்கவேண்டாம் இனி உங்களுக்குச் சுபகாமுண்டாகவிருக்கின்றது,அதற்கடுத்தசிலமுயற்சிகளைச்செய்யவேண்டும், அவைகள் என்னவென்றால் பிரமகுமாரனுகிய வசிட்டன் மரபிலுதித்து வேதவிதிப்படிக்கு அரியதவங்களைச்செய்துமுடித்து மோட்சவீட்டைவிரும்பி யோகத்திருக்கின்ற மாகதமுனிவரிடத்துக்கு உமது குலத்துதித்த பேரழகுள்ள கன்னிகையொருத்தியைத் தெருட்டியனுப்பி அவரைமயக்கிக் கலக்கச்செய்தால் அவளிடத்திற் கயமுகாசுரன் உதித்து சிவத்தைக்கருதித் தவங்களைமுடித்து வேண்டியவரங்களைப்பெற்றுத் தேவரைவென்று உங்கள்குலத்துக்குச் சக்கரவர்த்தியா யிருப்பானென்று சொல்லினர்; உடனே அவ்விராக்கதராசன் அவரைவணங்கி விடைபெற்று தன்னகரத்தைச்சேர்ந்து இலக்கணவடிவையும் விவேகத்தையும்வாய்ந்த விபுதையென்னுங் கன்னிகையைப்பார்த்து ஓபெண்ணே! எங்களுக்குற்ற இடர் உன்னாலே தீரவேண்டுமென்று வருந்திச்சொல்ல; அதைக்கேட்ட இராக்கதகன்னிகை அரசனைச்சேவித்து சுவாமி தேவரீர் எங்களுக்கு இறைவனுயிருக்க உம்முடைய வசனத்தை மறுப்பதுண்டோ, கட்டளைப்படியே நடந்துகொள்ளுவேன், நினைந்தகாரியத்தை திருவுளம்பற்றவேண்டுமென்று இசைந்தாள்,அவ்வரசன் மனக்கிலேசமொழிந்தானுய் நேற்றையதினந் தேவர்கள்மீறி நம்முடைய வருக்கத்தவரையெல்லாம் மடித்துத்துரத்தி வெற்றியுடன்மீண்டது உமக்குத்தெரிந்திருக்குமே, அவர்களைச்செயித்துப் பகையைத் தீர்த்துக்கொள்ளத் தக்கவர்கள் நம்மிலொருவனாயுங் காணேன், இக்கருமம் உன்னால்முடியவேண்டும், அதற்கேதுவேதெனின் மகாமேருவரைத்தென்புறத்திலே தவஞ்செய்திருக்கும் மாகதமுனிவரிடத்துக்கு நீ போய் அவரை மோகிக்கச்செய்து கூடுவையாயின் வலியையுடைய பிள்ளையுண்டாகித் தேவரனைவரையும்வென்று நமதுகுலத்தையும் விருத்தியடையச் செய்வானென்றுசொல்ல ; விபுதைசம்மதித்து தேவரீரிட்டப்படியே பிள்ளையைப்

பெறுவேன், கிலேசிக்கவேண்டாமென்று உறுதிபேசிவிடைபெற்றுச்சென்ருள். இராக்கதராசனும் அன்றே தேவர் அதப்பட்டுப்போனதாக மகிழ்ந்திருந்தான். இப்பால் விபுதையென்னுங் கன்னிகை மாகதமுனிவர் தவஞ்செய்யுமிடத்தை யடைந்து அவர் தவநிலையினுறுதிகண்டு இவரை மையல்பூட்டிக் கலத்தலெவ் வகை! சமுத்திரத்தைச் சுவறச்செய்யும் வடவைத்தீயைமேகங்கள் வருஷித்து அவிக்குமாயின் மன்மதபாணம் இவர் தவத்தையழித்து விரகமுண்டாக்கும்; இதுவல்லாமல் வனப்பிலுயர்ந்த மேனகையேவந்து மயக்குவாளாயினும் தவ நிலையிற் பிறழமாட்டார். இந்தமகிமையைச் சற்றும்யோசியாமல் நமது அரசன் வேண்டியதற்கிசைந்து அவ்வண்ணமேசெய்வேனெனத் துணிவுசொல்லி நாம் வந்தது நேத்தியென்று வெறுத்துக்கொண்டு இதைக்கருதி ஊருக்குத்திரும்பு வோமாயினும்மீளவும் அரசன் அனுப்புவான், ஆதலால் இவரைச்சேருங்காலம் நேருகின்றவரையும் தவத்தைச் செய்திருப்போமென்று நிச்சயித்து தம்மைச் சரணடைந்தவரைக்காக்கும் பெருமையினையுடைய பரமசிவத்தைத் தியா னித்து மாகதமுனிவருக்கெதிரில் தவஞ்செய்திருந்தாள் இப்படிக்கு அளவற்ற காலங்கழிந்த தருணத்தில் இக்கன்னிகைசெய்த தவமுயற்சியினாலும் தேவர் ஊழ்வினைச்சம்பந்தத்தினாலும் ஒருகுஞ்சரம்பிடியைக் கூடிக்களிப்பதை அந்த முனிவர்கண்களை விழிக்கப்பார்த்தவுடன் வேதவொழுக்கத்தையும் நீதியையுந் தவமுயற்சியையும்மறந்து இவ்வகைப்புணர்ச்சியைக்கூடப் பெறுவேனாயின் நமதுபிராணன்நிற்குமெனவருந்திச் சிற்றின்பத்தினாலேதவமகிமையழிந்துபழிக் குள்ளாகவேண்டுமென்றுயோசிப்போமாயின் காமநோய் பிராணனைவாட்டுகின் றது, ஆதலால் உயிரிருந்தால் மீளவும் யோகசாதனையைப்பெற்றுக்கொள்ளலா மென்றுநிச்சயித்துப் புணர்ச்சியைவிரும்பிவாடினர், அக்குறிப்பினைத்தவத்தில் நின்ற அக்கன்னிகை அறிந்து நமதெண்ணம் ஈடேறுங்காலம்நேர்ந்ததென்று அளவற்ற சந்தோஷமடைந்து இதுநல்ல தருணமென்றெழுந்துபோய், மாகதர் பாதங்களிற்சேவித்துக் கரங்களைக்கூப்பிநின்ருள். அம்முனிவர் அவள்வடிவை யும் பாலப்பருவத்தையும்பார்த்து மிகவும் மையல்கொணடு இவள் காந்தருவ விவாகத்திற்கூடுவாளாயின், நமதுபிராணன் நிலைபெற்றிருக்குமென்றெண்ணி அவளைப்பார்த்து, நீ கன்னிகையோவென்றுகேட்க, அவள் முல்லையரும்பினை யும் முத்துக்கோவையையும்போன்ற தந்தபந்திகள்விளங்கப் புன்முறுவல் பூத்து, சுவாமி! ஆமென்று கோகிலமும்நாணக் கொஞ்சிச்சொல்ல அதைக் கேட்டு, நல்லகாரியம், என்னிடத்தில் என்னகோரிக்கையைவிரும்பிவந்தீர் அதனை விரைவிற்கேட்டுக்கொள்ளக்கடவீரென்ருர். உடனே அவள் தவத் தரே! உம்மைக்கலந்து இன்புறவேண்டி வெகுகாலமாகத் தவஞ்செய்தேன், அப்பயன் இன்றைக்குக்கைகூடியது, இப்போது உம்மைஅணைந்தின்பமுற்றுக் களிக்கவந்தனனெனச்சொல்ல, அதை அம்முனிவர்கேட்டு அரிய வமுதம் பெற்றவரைப்போலமகிழ்ந்து என்தவமும் உன்விரதபலனும் இத்தருணத்தில் இருவரையுங்கூட்டின, ஆதலால் நீகாலதாமதஞ்செய்யாமற் பெண்யானையாக வரக்கடவாயென்று வேண்டினர். அதற்கு அவள் சம்மதித்து, அவ்வாறே உருக்கொண்டு, காமவிளைவைக்காட்ட, அவரும்களிறுருகவடிவெடுத்துத்; துதிக்

கையை வானத்தில்நீட்டி, வீறிட்டுவந்து, புணர்ந்தார், அவர்களின்பமுற்றிய கடையிற்பிறையைப்போன்ற நாற்கோடுகள்விளங்க நீண்டதுதிக்கையையும் பர்வதாகிருதியாகிய தேகத்துடன் கரங்களில்வாளுங் கேடயமுங்கொண்டு, கயமுகாசுரன் உதையமாய்த்திசைகளிற்பாய்ந்து, அஷ்டகுலாசலங்கள் துகள் படப பாதங்களைப்பெயர்த்து, அண்டங்குலுங்கக்கொக்கரித்தான். அத்தரு ணத்தில் அக்கன்னிகை உரோமங்கடோறும்பெருகிய வியர்வையில் அளவற்ற இராக்கதர் ஆயுதபாணிகளாய்ப்பிறந்தனர். அவர்களுடன் கயமுகன்கூடி வடவாமுகாக்கினி பிரசண்டவாயுவுடன் கலந்தெழுந்தாற்போலச் சஞ்சரிப் பதைத் தாய்தந்தையர்கண்டுபயந்து பழையவுருப்பெற்றோடினார்கள். அப் போது மாகதமுனிவர் தமது காமவிகாரந்தெளிந்ததனால், அப்பெண்ணைக் கோபித்துப்பார்த்து, நீ யார்? நீ வந்தகாரணமென்ன? ஒளியாமல் வெளியிடக் கடவாயென்று உருத்துவினவ அவள்தன்வரலாற்றை விவரித்துச்சொல்லினாள். உடனே அம்முனிவர் திகிற்பட்டு, ஐயையோ! தேவர்முதலானவர்களுக்கு மிகுந்த துன்பத்தைவிளைத்தேனெனக்கரைந்துவாடி, ஒருவகையாகத்தேறி இராக்கதராசனேக்கமும் உன்னெண்ணமும் ஏககாலத்தில்முடிந்தன, என்தவ மும் தேவர்வாழ்வும் வகையறமடிந்தன, ஆதலால் நீ இவ்விடத்தில் நிற்காமற் போய்விடென்றுசொல்ல, அவள் முனிவரைச்சேவித்துத், தன்பதிக்குவந்து, அரசனுக்கு இச்செய்திகளை விண்ணப்பஞ்செய்தாள். அந்தராசன் சூரிய வுதையங்கண்ட கமலத்தைப்போல முகமலர்ந்து, மனவெழுச்சிபெற்றவளைய் அவளைக்கொண்டாடி விடைகொடுத்தான்; இப்பால் மாகதமுனிவர் முன்போ ன்று அருந்தவநிலையை அனுட்டித்திருந்தார். இவர்களுக்குஉதித்த கயமுகன் முதலானபிள்ளைகள் பருவதங்கள்கால்முளைத்துநடப்பதைப்போலவும் அட்ட மாநாகங்களுக்கொப்பாகவும், பிராணிகளைவாட்டுங்கூற்றுவன்பலவுருக்கொண் டெழுந்ததை நிகர்க்கவும் ஊழித்தீயைப்போலவும், ஆலகாலவிஷத்துக்கிணை யாகவும்,எங்குமுலவிக்குலகிரிகளை உதைத்து, துகள்படச்செய்வார்கள், பூமி பிளக்கநடப்பார்கள், சீவராசிகளைக் கொல்லனுலைபோன்றவாய்களில் வாரி வாரியிட்டு, இருகடைவாயினும் உதிரம் ஊற்றெடுத்தோட மென்றுதின்பார் கள், சமுத்திரங்களைப் பானஞ்செய்வார்கள், சூரியசந்திரர்கதிகளைத்தடுப்பார் கள், ஆதிசேடன்நெளிந்துவருந்தத் தாண்டுவார்கள். இவ்வகையாகக் கயமுகா சுரன் துணைவருடன் எங்குமுலவிப், பிராணிகளை அலைத்துத்தின்று, உதிர பானஞ்செய்து, இருடிகளைவாட்டி, வேதவொழுக்கங்களைக்கொன்று உலாவு வதை இராக்கதராசன் அறிந்து, சுக்கிராசாரியனிடத்துக்குப்போய், இச்செய் திகளை விண்ணப்பஞ்செய்து, சுவாமி! இவர்களை யொருவழிப்படுத்திச் சத்து ருக்களை வெற்றிகொள்வதாகக் கடாட்சிக்கவேண்டுமென்று போற்றினான். அதற்குப் பார்க்கவன்சம்மதித்து, அவனுக்குச் செலவுகொடுத்தனுப்பிவிட்டு, கயமுகனிருக்கு மிடத்தைச்சேர்ந்து அவனைக்கண்டு ஆசிர்வதித்து, நான் உன்குலகுருவனாகும். என்பெயர் சுக்கிராசாரியனென்பார்கள், உன்பாட்ட னாகிய இராக்கதராசன் அனுப்ப நீஇனிநடந்துகொள்ளவேண்டிய உறுதிகளைப் போதிக்கவந்தேனென்றுசொல்ல; அதைக்கேட்டுக் கயமுகன்சேவித்து, ஆசிரி

யனே! எம்பாலமைந்திருக்கின்ற பேரன்பினல் நன்மார்க்கங்களைத்தெருட்ட வெழுந்தருளினீர், இதைவிட நான்பெறவேண்டியதென்னவிருக்கின்றதென்று உபசாரவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருக்குந் தருணத்தில் இராக்கத சேனைகள் நமது குலகுரு வந்தார்வந்தாரென்று இரைந்து திரண்டுவந்து கூடிச்சேவித்துக்கொண்டார்கள். அவர்களையும் சுக்கிராசாரியன் வாழ்த்திக் கயமுகனைப்பார்த்து, நீ மேலான தவங்களைச்செய்தாயில்லை, விச்சுவநாயகனுகிய பரமசிவத்தைப்பூசித்து வேண்டும்வரங்களைப் பெற்றுயில்லை, சத்துருக்கள் மாயங்களையும் வஞ்சனைகளையும் மேம்பாடுகளையும்செருக்குக்களையும்விசாரித் தறிந்தாயில்லை, இவ்வுடம்பு அநித்தியமென்பதையுந்நினைந்தாயில்லை, அநியாய மாக உயிர்களைக்கொன்றுதின்றுபலநாட்களை அவத்திற்கழித்தாய், பஞ்சேந்திரி யங்களை நிக்கிரகித்துத் தவஞ்செய்து திவ்விய பாணமுதலானவைகளைப்பெற் றுச் சத்துருக்களை வெல்லவெண்ணினுயில்லை, இம்மையில் இந்திரிருவனுக அனுபவித்து ராசராசனுய்வாழ்ந்திருந்து மறுமைக்கு உறுதிகளைப்பெற நினையாவிடின், நீ இருந்தென்னபலனுண்டு, செல்வமும்வலியும் சீரும் ஆயுளும் வீடும்தவத்தினுலுண்டாகுமென்பதை இதுவரையில்நினையாமலிருந்ததென்ன? இவையனைத்தும் வாணளின்காலமுடிவில் இயமன்வந்தழைக்கும்போது, கூடு மோ இத்தேகமெடுப்பது அரிது, இதுநீடித்திருக்கவகை தேடிக்கொள்ளாமல் நாளை பயனிலதாகக்கழிப்பதி லென்னபயன்பெறுவாய். மந்திரதந்திரங்கள் தேவாஸ்திரங்களொன்றும் பெற்றுயில்லை, இச்செய்திகளை இந்திரன் அறிவா னுயின், தேவர்களைக்கூட்டிக்கொண்டுவந்து, உன்னுடனெதிர்த்து, அகோர யுத்தங்களைச்செய்து சாடுவான்; அக்காலத்தில் மிருகங்கள் பட்சிகள் வலையில் அகப்பட்டுத்திகைப்பதைப்போல நீ வாடவேண்டிவரும், ஆதலால்தேவாதிதே வனுகிய இறைவனைநோக்கித் தவங்களைச் செய்வையாயின்வேண்டியவரங்களை யும் திவ்வியபாணங்களையும்பெறலாம், அவைகளினுல் சத்ராதிகளையும்வென்று சக்கரேசுவரனுக வாழ்ந்திருக்கப்பெறுவையெனச் சுக்கிராசாரியன் பலவாகப் போதித்தார். அதைக்கேட்ட கயமுகன் தன்குலக்குரவனை வணங்கி, சுவாமி! இதுவரையில் இக்கருமங்களை யாவரும் சொல்லவுமில்லை, எனக்கும் இவைகள் தோன்றுமற்போயின; ஆதலால் தேவரீர் கிருபைகூர்ந்து அடியேன்தவஞ்செய் யும் மார்க்கத்தை யனுக்கிரகஞ்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய; சுக்கிராசாரியன் மனமகிழ்ந்து தவத்திற்குரிய நடைநொடிபாவனைகளைத்தெரு ட்டி அதற்குரிய மந்திரங்களையும் உபதேசித்து மேருவரையிற்போயிருந்து தவஞ்செய்யென்றனுப்பினர், தந்திமுகன்சேவித்து, விடைபெற்றுச் சேனைக ளுடன் சிலகாதவழிநடந்தான். அதைச்சுக்கிரன்கண்டு இனி நினைத்தகாரிய த்தை முடித்துக்கொண்டு வருவானெனத் தயிரியமாகித்திரும்பி இராக்கத ராசனுக்கு இச்செய்திகளைவிளக்க, அவன் ஆனந்தபரவசனுகி, சுவாமி! இப் போதுதானெங்களைக் காத்தீரென்று துதித்துப் பலதரஞ்சேவிக்க, இனி உங் கள்குலம் அபிவிர்த்தியாகுங்காலம் நேர்ந்ததன்றியும் சகலசவுக்கியங்களையும் பெற்றுப் பகைவரைவென்று வாழக்கடவாயென்று ஆசீர்வதித்துத் தமதுஆசிர் மத்தைச்சேர்ந்தனன். இப்பால் கயமுகன் குரவன்சொற்படியே மகமேருவுக்

கொருபக்கத்திற்போய், பரிசுத்தனைப் பரமசிவத்தின் பாதாரவிந்தங்களைக் கருதி, ஆயிரவருடஞ் சருகுபுசித்தும் ஆயிரவருடஞ் சலமருந்தியும் ஆயிரவருடம் அனலை விழுங்கியும் வெய்யில் மழை குளிருக்குச் சலியாமலிருந்து, பின்பு பிராணவாயுவையெழுப்பி, மூலாக்கினியைமுடுக்கி, மேல்விளங்குந் தத்துவ அமுதினைப்பருகி, இவ்வகையாக அகோரமானதவத்தைச் செய்து வந்தான். அதைத்தேவர்கள்கண்டு, இத்தவமுடியுமாயின் நமக்குக்கெடுதிவருமென்று திகிற்பட்டோடி, இந்திரனைச்சேவித்து, அறிக்கையிட்டார்கள். அதைக்கேட்டவுடன் மகவான் மனநடுங்கி, நமது வெற்றியும் செல்வமும் அடங்குங்காலம் நேர்ந்ததாகக் காணுகின்றது. இதற்கென்செயக்கடவோமென்று வாடிவருந்தி, பெருமூச்செறிந்து திகைத்தான். சவுனகாதிமுனிவர்களே! அவன்பட்டபாட்டை யொருவகையாகச்சொல்லிமுடியாது. இப்பாற்கயமுகாசுரனே, அதுவரையிற் பரமசிவனெழுந்தருளாத காரணத்தினால், வேள்விக்குண்டத்தின் நாற்பாங்கினும்அனலையெழுப்பி, மத்தியில்நின்று, இறைவனை யெண்ணி, பதினாயிரவாண்டு அரியதவத்தைச்செய்கின்ற காலத்தில், அவ்வனலோங்கிப் பொன்னகர் அளகாபுரி முதலானபதிகளைத்தகிக்க, அவ்விடங்களில் வாசஞ்செய்பவருக் கடுத்த துன்பத்தைப் பேசிமுடியாது. அப்போது அந்த இராக்கதகுமாரன் மனவுறுதிக்கிரங்கி, அக்கினிதேவன் வருத்தாமற் குளிர்ந்துகாட்டி, அவன்தேகத்தையும் வச்சிரகாயமாக்கினான், அதைக்கண்ட இராக்கதசேனைகள்களித்துத் தேவரையிகழ்ந்தார்கள். பிரமனும் இத்தவத்தைமெச்சி, சிரக்கம்பஞ்செய்தான். அக்காலத்திற் பரமசிவன் இரங்கி, இடபவாகனரூடராய்க், கணங்கள்போற்றவானத்திலேதோன்றியதைக்கயமுகன்தரிசித்தெழுந்து, ஆனந்தக்கூத்தாடித் துதித்துப்பணிந்து, கரங்களைக்கூப்பிநின்றான். அப்போது அவன்மேல் பரமசிவம் கிருபாநோக்கம்பாலித்து, இதுவரையில் அளவற்றகாலமாகத் தவநிலையினின்றுவருந்தினாய், வேண்டியவரங்களைக் கேளென்றருளியவுடன் அவன்மீளவுஞ்சேவித்து, சுவாமி! விண்டு பிரமன் இந்திரன்போருக்கென்னுடனெதிர்த்தாலும்அவர்கள் அபசயப்படவும்தெய்வப்படைகளினால் அழிவில்லாமலும் விண்ணவர் மண்ணவர் பாதலவாசிகள் விலங்கு பறவைமுதலானவைகளினால் அழிவற்று எக்காலத்தும் இறுதியில்லாமலும் என்னைப்போலும்வொருவன் அவதரித்துப்பொருதாமலும் அவனுயுதத்திலே மாளாமலும் யாவரும் என்னுணை ஆக்கினையிலடங்கி வழிபடவும் என்னரசெங்குஞ்செல்லவும் திவ்வியபாணங்களையும் அனுக்கிரகஞ்செய்யவேண்டும், இதுவல்லாமல் எவ்வகைத்தந்திரவுபாயத்தினாலாவது யானிறக்குங்காலம் நேருமாயினும் பிறவியில்லாமல் உமதுபாதாரவிந்த நீழலிற்சேர்ந்திருக்கவும் தயைசெய்யவேண்டுமென்றுகேட்க, அந்தப்படியே அனுக்கிரகஞ்செய்துபரமசிவன் திருக்கயிலைக்கெழுந்தருளினார், பின்புகயமுகன்பிரபலவரங்களைப்பெற்றகளிப்பினாற்பரமசிவனைப்போற்றி, சேனைகள்சூழநடக்கும் வேகத்தையும் செயவுச்சாகத்தையும் இந்திரன் அறிந்து, கிலேசமுற்று வருந்தினான், இச்செய்திகளைத்தெரிந்த சுக்கிராசாரியனே தான் இராக்கதராசனைக் கூட்டிக்கொண்டெதிர்சென்று, சுகசீவியாய்ச் செயசாலியாயிருப்பாயென் றாசீர்வதித்துக் தங்

கள்பதிகளிற்சேர்ந்தார்கள். பின்பு கயமுகன் திக்குவிசயஞ்செய்யநினைந்து இந்திரன்முதலானவர்களைவென்று தன்வயப்படுத்திக்கொண்டு, பூமியின்கண் வந்து இராக்கதசிற்பியை அழைப்பித்து, இந்த நாவலந்தீவின் தென்புறத்தில் தானரசுசெய்ய ஒருநகரமுண்டாக்கக் கட்டளையிட, அச்சிற்பி சேவித்துப்போய், விசாலமான இடத்திற் சொர்னமயமான மதிலும் பாதலவளாயிலாழ்ந்து சலசமர்த்தியாயிருக்கும் அகழும் வானத்தையளாவிப் பலநிலைகளைப் பெற்ற கோபுரங்களும் நவரத்தினமயமான மாடமாளிகை மண்டபமுதலானவைகளும் சாத்திரப்படியே பொன்னுலகமும் நாணத்தக்கதாக நிருமித்து அதற்கு மதங்கநகரமென்று பெயரிட்டு அறிக்கையிட்டான். கயமுகன் சுபமுகூர்த்தத்திலே அதிற்பிரவேசித்து, சபாமண்டபத்திற்சென்று நவரத்தினமயமான சிங்காதனத்தில்வீற்றிருந்து, நாடோறும் வைகறைக்காலத்திற்பிரமன் பஞ்சாங்கஞ்சொல்லிப்போகவும் இந்திரன்முதலாகிய தேவரும் காமதேனுவும் கற்பகத்தருக்களும் சங்கநிதி பதுமநிதி சிந்தாமணியும் அரமகளிர்களும் ஏவல்களைச்செய்து வணங்கவும் கொடுங்கோல்செலுத்தி, சுக்கிராசாரியும் இராட்சதராசனும் மந்திரிகளாகச்சூழ அரசுநடாத்திவருகின்ற காலங்களில் ஒருநாள் தன்னைப்பணிந்த தேவேந்திரன் முதலானோரை நோக்கி இன்றுமுதல் நீங்கள்நம்முடைய சபைக்குவரும் போதெல்லாம் சிரத்தில்மூன்று தரம்குட்டிக்கொண்டு கரங்களைமாறி இருசெவிகளையும்பற்றி மூவிசை இறங்கியெழக்கடவீரெனக் கட்டளையிட்டான். அவ்வாறேஅவனாணைக்கஞ்சி நாடோறும்நடந்துகொண்டு பழியொடுந்துயர மென்னுஞ் சமுத்திரத்திலழுந்திவருந்திய தேவேந்திரன்முதலியோர்இதனைப்பிரம விஷ்ணுக்களுக்கு முறையிட அவர் இவரைத் தேற்றித் திருக்கயிலைக்குஅழைத்துப்போய், நந்திபெருமானனுமதிபெற்று, ஆலயத்திற்சென்று, பரமசிவத்தைவணங்கிப்போற்றினர். அப்போது பரமசிவன் விண்டுவைநோக்கி, விண்ணவர்வருந்திவந்த காரணமென்னவென்றுவினவ, அவர் சுவாமி! கயமுகனென்னும் அவுணராசன் தவமுயற்சியினால் இவர்களை மிகவும்வருத்தித்தகாதகருமங்களையுஞ்செய்யக்கட்டளையிட்டலைக்கின்றானும், அவனையழிக்க எங்களுக்குவலிமையில்லை, இறைவனே! தேவரீர்கிருபைசெய்து அப்பாதகனைக்கொன்று எங்கள் துன்பத்தைநீக்கி, காக்கவேண்டுமென்று போற்றினர். பரமசிவன்இரங்கி, நாம் ஒருபிள்ளையைப்படைத்தனுப்பி உங்களிட்டப்படியே செய்விப்போமென்று திருவுளம்பற்ற, அதைவிஷ்ணுமுதலானவர்கேட்டு அப்போதே சகல இன்னல்களையும் போக்கினவர்களையொத்து ஆடிப்பாடி, பணிந்துவிடைபெற்று, தங்கள் பதவிகளிற்சேர்ந்தார்கள், சிலகாலத்திற்குப்பின்பு இறைவன் தமது வாமபாகத்தமர்ந்த பராசத்தியின்மேல் திருக்கண்சாத்தி, நமது நந்தவனத்தின் சிறப்புகளைப்பார்த்துவருவோமென்றழைத்துச்சென்றனர். அச்சோலையானது தழைத்தோங்கி, நிழலைப்பரப்பிப் பரிமளமிகுந்த புட்பவருக்கங்களைச்சொரிந்து, கனிவகைகளையும் தாங்கிநிற்பது எப்படியிருந்ததென்றால், இறைவனிடத்து அன்புவிளங்கிய அடியார்கள் அருச்சனைசெய்வதுபோலவும் தேன்துளிப்பது ஆனந்தக்கண்ணீர் பெருகுவதுக்கிணையாகவும் இருந்தது. இச்சிறப்புகளையெல்லாம் பரமசிவன் பார்ப்பதியுடன்

பார்த்துக்கொண்டுபோய், அச்சோலைநடுவிற் சொர்னமயமாய்ச் சித்திரங்களமைந்திராகின்ற மண்டபத்திற்பிரவேசித்தனர். அக்காலத்தில் பார்ப்பதியார் அதனிடத்தடங்கிய வோவியங்களை நோக்குகையிற் பரமசிவனருளின்படிக்கு முதலெழுத்தாகிய ஓங்காரமானது குஞ்சரமும் பிடியுமாகவுருக்கொண்டு புணரக்கண்டு, பரமசிவத்தைத்தொழுது, இதென்னகாரணமென்று வினவ, பரமசிவம், பெண்ணே! உனதுநோக்கம்பட்ட முயற்சியினுல் பீசாக்கரம் இவ்வுருவைப்பெற்றுப்புல்லியது. உன்பெருமைகள் நம்மாலன்றி வேதாகமங்களினுலும் உணர்தற்கரியவாமென்றருளும்போது அவ்விரண்டும் இன்பமுற்றுமுன்போன்ற சிறந்தகுடிலையிலடங்கின. உடனே நாற்கோடுகளும் நீண்டதுதிக்கையும் பருத்தவயிறும் குறியதாள்களும்பெற்று ஒருமைப்படச் சிந்திப்பவருணர்வாய்ப் பரிபூரணமாய் எங்கும்நிறைந்து யாவருந்தொழுது போற்றுமுயற்சிபெற்றுப் பரமசிவமேயென்னவிளங்கி வேதப்பொருளாய்த் தம்மைத்தொழும் அடியார்கள் வினைகளைப்போக்கிக்காக்குங்குணதிசயங்களைப்பெற்ற பிள்ளையார் அவதரித்து, சிவசத்தியினது பாதகமலங்களிற்சேவித்து, கரங்களைக்கூப்பிநிற்க, அம்மையும் அப்பனும் ஆதரித்துத் தழுவி, முத்தமிட்டு, ஐயனே! யாவராயினும் முன்னே உன்னைநினைந்தொருகருமத்தைச்செய்வாராயின் அவர்கள் மனோபீட்டங்கள் முற்றும்பெறக் கடாட்சித்தும் பற்றையர்கள் முயற்சிகளை விக்கினஞ்செய்தும் பிரம விஷ்ணு முதலானவர்களும் உன்னைத்தொழுதுபோற்ற நாயகமாய்விளங்கக்கடவாயென்றுவாழ்த்தி, குமாரனே உலகங்களை அலைத்துக் கொடுங்கோல்செலுத்துங் கயமுகாசுரனைச்சங்கரித்து முகுந்தன்முதலானோர் இடுக்கண்களைத்தவிர்த்துவருவாயெனப் பலவெள்ளப் பூதப்படைகளை உண்டாக்கித்தந்து, விக்கினகர்த்தனை ஆலயத்தில்அழைத்துவந்து, முதற்கோபுரவாய்தலில்வீற்றிருந்து இறைமைசெலுத்துவாயென்றவ்விடத்திலிருத்தி, அந்தப்புரத்திற்சென்றனர். பின்பு விநாயகக்கடவுள் நந்திபெருமான் பிரமன்விஷ்ணுமுதலியதேவர்வந்து சேவிக்கவும், பூதப்பிரமுகாள் சூழ்ந்து ஏவல்கேட்கவும், அமர்ந்தருளினர்.

இவ்வகையாக நடந்துவருகின்றதருணத்தில் ஒருநாள் கேசவன் பரமசிவத்தைத்தொழுதுபோக விருப்புற்று, வெள்ளிகிரியையடைந்து, நந்திதேவரருள்பெற்று, உள்ளேபோய், இறைவனைச்சேவித்துத் துதித்துநிற்க அவனைப் பரமசிவம் அருகிலிருத்தி, க்ஷேமங்களைவினவியபின்பு ஒருதிருவிளையாடலைநினைந்து, பரமேசுவரியைநோக்கிபெண்ணே! நாமிருவரும் பகடைசாலையாடுவோம்,இதற்குப்பந்தயம் நீதோற்பையாயின் உனதுபணிகளையெல்லாம் எமக்குத்தருதி, நீ வென்றால் எமதணிகளாகிய சர்ப்பம்பிறையாதியானவைகளைப் பொற்றுக்கொள்க, வென்று சொல்லி, தோற்புக்கெலிப்புக்கு விஷ்ணுவைச்சாட்சியாகவைத்துக்கொண்டுஆடினர். அப்போது விஷ்ணுபிரமனுக்கரிய சிவம் ஏதுகாரணத்தினலோ பராசத்திக்குத்தோற்றும்உமையவளைநோக்கிநகைத்து நீஎமக்குத்தோல்வியுற்றபடியால்உனது ஆபரணங்களைத்தருகவென்றுகேட்க, அம்மன் இறைவனுடன்வாதுகொடுக்க அஞ்சி, கரியவனைப்பார்த்து, நீர் இதற்குக்கரியாக இருந்தபடியால், யார்வென்றதுசொல்லுமென்று கேட்கும்போது

கள்ளமாமாயன் மேலவருவதையுணராமற் பரமசிவனேவென்றானெனக்குறித் தார். உடனேபராசத்திகோபமடைந்து, நல்லநியாயஞ்சொன்னீர். இறைவன் தான் அப்படிக்குப் பேசியபோதிலும் நீர் திட்டாந்தமாகப் பார்த்திருந்தும் அஞ்சாமல் அபத்தமாடத்தகுமோ? உமதுதேகம் கறுத்ததாயினும் மனமும் கரியாகலாமோ? இக்காரணத்தினாற் பாம்பாகக்கடவையெனச்சபித்தாள். அவ் வுருமாறுமுன், விஷ்ணு அவ்வடிவம்நேரக்கண்டுபயந்து, பரமனைச்சேவித்து, சுவாமி! தேவரீர்பட்சமாகப் பேசப்போய் இச்சம்பவம்நேர்ந்தது. இதற்கு நிவாரணகாலம் அருளிச்செய்யவேண்டுமென்றுபோற்ற, பரமேசுவரன் அவரை நோக்கி, நம்மிடத்தன்பினால் மாறுகூறி இவ்வடிவுபெற்றனையாயினும் பயப்பட வேண்டாம் தென்னாட்டிற் பாலவனமென் றொன்றுண்டு. அவ்விடத்தி லொருவடவால விருக்ஷம் இருக்கின்றது; அதின் கண்தோற்றும் பொந்திற் சேர்ந்து தவஞ்செய்திருப்பையாயின் சிலதினத்தில் நமதுகுமாரனாகிய விநாய கன் கயமுகனைவென்று அம்மார்க்கத்தில்வரும்போது அவனைக்கண்டு தொழு வையாயின் இவ்வுருவமாறுமென்றருளிச்செய்தனர். உடனேவிஷ்ணுசேவித்து விடைபெற்று அவ்வனத்திற்சென்று ஆதியில்நால்வருக்கு யோகாப்பியாசத் தைப்போதித்த சிவபிரானெழுந்தருளிய வடவிருட்சத்தைப்போலத்தழை த்து நிழலைப்பரப்பி ஏழுகாதமளவும் நாற்புறத்தினுங்கிளைகள்நீண்டு விட்டுணு வைப்போல உயர்ந்து அளவற்றவிழுதுகள்தொங்கநிற்கும் ஒருவடவால விருட் சத்தில் விளங்கும்பொந்தில் தங்கித்தவஞ்செய்திருந்தார். இப்பாற்கயமுகா சுரனு விடைவிடாது துன்பமனுபவிக்கின்ற இந்திரன்முதலிய விண்ணவர்கள் விநாயகக்கடவுள் அவதரித்தசெய்தியையறிந்து களித்து திருக்கயிலாயத்தைச் சேர்ந்து முதல்வாய்தலின் மீதெழுந்தருளிய விக்கின கர்த்தாவைத்தரிசித்து வணங்கிப் பலவாகப்போற்ற அவரை விநாயகக்கடவுள் கிருபையாகப்பார்த் தருளி ஓதேவர்களே! உங்கள் முகங்கள்வாடியிருக்க வந்தகாரணமென்னை யென்றுவினவ அவர்கள் சுவாமி! கயமுகனென்னும் அவுணராசன் பரமசிவ த்தினிடத்தில் அளவில்லாவரங்களைப்பெற்று அடியோங்களை அலைத்துக் கொ டுங்கோல்செலுத்தி இட்டஏவல்களைச்செய்து வருகையில்மேலும் ஒவ்வொரு நாளுந்தன்னைக் காணவருகையிற் கன்னங்களிற்குட்டி இருசெவிகளையும் பற்றிமும்முறைவணங்கியெழும்படிக்குப் புதியகட்டளை யொன்றையிட்டான். இப்புல்லியதொழிலைச் செலுத்திவருந்துகின்ற நாங்களொருகாலம் இக்குறை களைப் பர்மசிவத்தின் சந்நிதானத்தில் முறையிட்டதற்குப் பரமசிவம் இரங் கித் தேவரீரைத்தந்து அடியோங்கள் துன்பைப்போக்குவதாகக்கருணைசெய் திருப்பதனால் எங்கள்வாட்டத்தையும் அவனோட்டத்தையு மொழித்துப் பாது காத்து இரட்சிக்கவேண்டுமென்று பன்முறைபணிந்தேத்தி மோதகம்சுண்டல் பழவருக்கங்களாதியான நிவேதனங்களைப்படைத்து வேண்டினார்கள். விநாய கர்பரிவாய் நீங்கள் பயப்படாதீர்களென்று ஆதரித்துஉடனே சிங்காதனத்தை விட்டிறங்கிவெளிவந்து அசலனென்னும் பூதன்மீதாரோகணித்துச்சிவகணங் கள் போற்றவும் பூதவெள்ளங்கள் நெருங்கிவரவும் பலபூதர் பற்பலவாத்தியங் களைமேகங்களைப்போல முழக்கிப்போகவும் சிலபூதர் வெண்சாமரைகளைவிசிப்

பக்கங்களிற் சூழ்ந்துவரவும் சிலர்குடைகளைத்தாங்கிச் செல்லவும் இந்திரன் முதலிய தேவர்கள் கற்பகமலரை இறைத்து இருமருங்கினும்புகழ்ந்துவரவும் கயமுகாசுரன் அரசுசெய்திருக்கும் மதங்கநகரத்திற் கருகில்வந்தார். அதைத் தூதரறிந்தோடி இராக்கதராசனுக்கு அறிக்கையிட்ட மாத்திரத்தில் அவன் வடவானலத்தைப்போற்கோபித்துச் சர்வாயுதபாணியாய் இரத்தினமயமான தேரிலேறி இராக்கதவெள்ளங்கள் செயவுச்சாகத்துடன் பலபடைகளைத்தாங்கிக் கடல்பெருகியதைப்போல வந்துசூழ ரணபேரி செயபேரிமுதலிய வாத்தியங்கள் அண்டமுமதிர முழங்கச்சென்று கணபதிக்கெதிரில் நெருங்கினன். அப்போது பூதப்படைகளும் அவுணவெள்ளங்களும் கோபதீபிதராய் வெய்யிலும் இருளும் சேர்ந்ததைப்போலச்சிறிபாணங்கள் ஆயுதவகைகள் பருவதங்கள் முதலானவைகளையொன்றனந்தமாகஒருவர்மேலொருவர்பிரயோகித்துச்சண்டைகொடுக்குந்தருணத்தில் அவுணர்களிற்பலர்மாளக் கண்டு மற்றவர் எதிர்த்துநிற்க நிருவாகமில்லாமற் பலதிசையினுமோடி ஒளித்தார்கள், அத்தருணத்தில் பூதப்படைகள் செயவுச்சாகத்துடன்பயமற்றுமேலிட்டுவருவதையும் தன்சேனைகள்முரிந்து இறந்ததையும் கயமுகன்கண்டுகோளத்தைப்போற்சீறித் தன்தேரைநடாத்தி மீறிவரும் பூதப்படைகளின்மீது சரமாரிபொழிந்து சல்லடைக்கண்களாகத்தொளைத்துஅதஞ்செய்யப்பூதப்படைகள்எதிரில்நிற்கச்சக்தியில்லாமற் பெருங்காற்றிற்பட்ட பூளைப் புட்பத்தைப்போலப் பறந்தார்கள். அதைக்கண்டதேவர் வாடி இறைவன் பாதங்களில்விழுந்து முறையிட விநாயகர்கையமைத்து அசலன்மீதாரோகணித்து முன்னணியில்வரும்போது அவரைக்கண்ட கயமுகன் தன்னருகிலிருந்த தூதரைப்பார்த்து நம்முடன் போருக்கெதிர்த்த இவனுரொன்றுவினவ அவர்கள்தொழுது இவன்சிவகுமாரன் கணபதியென்னும் நாமமுடையவனெனச்சொல்லி முடிவதன்முன்னம் கண்கள்சிவக்கக்கோபித்து கர்த்தனுக்கெதிரிற்போய் விழிகளிற்றீயெழநோக்கி பற்களைக்கடித்து உதட்டையதுக்கி உன்தந்தை என்தவத்துக்கு இரங்கிக்கொடுத்த வாமுயற்சிகளையு நினையாமல் வீணுய்மடியவந்தாய்! உன்னப்பனைப்பற்றி இப்போது தயையாகச்சொல்லுகிறேன் உயிரினிடத்திச்சையிருந்தா லோடிப் பிழைக்கலாம்,என்னுடனெதிர்க்க உனக்குவலிபோதாது,மேலும்நீசிறுபிள்ளையாயிருக்கின்றாய் என்னுடன்பொருதவர் இறந்தாரல்லது இன்னுர்பிழைத்தாரென்று சொல்லமாட்டுவையோ, விண்ணவர்மண்ணவர் வலியினலும் தேவர் படைகளினலும் அழிவில்லாத வரம்பெற்றிருக்கின்றேன்; இதுவல்லாமலும் பரமசிவம் அளித்தவை அளவற்றன உண்டு இவைகளையோசியாமற் பாலனதலால் தேவர்படுந்துன்பத்தை நீக்குதற்குவந்தாய் ஆதலால் உன்னைவென்று அவர்களையும்வென்றுபசிக்குணவாகத்தின்பேன்; இனிவல்லமையுடையவனுற் பாணங்களைத் தொடுப்பாயென்றுசொல்லினன். அதைக்கேட்டவிநாயகர் நகைத்து உனக்கு இச்செல்வங்களை அருளிய நமது பிதாவானவர் உன்னைச் சங்கரித்துப் பிராணிகளுக்கடுத்த இடரைநீக்கி இந்திரனுக்குத் திரிலோக வாழ்வை அளித்துவரக் கட்டளையிட்டார்.ஆதலால்இன்னஞ்சிலகாலம் பிழைக்கஉனக்கு மனமிருந்தால் பொன்னுலகைஇந்திரனுக்குக்கொடுத்துப்பூவுலகை

அரசுசெய்திருப்பாய், அல்லது உன்பிராணனை எமலோகங்குடியேற்றுவேன், இதனையோசித்து உன்னெண்ணத்தை விரைவிற்சொல்லென்று திருவுளம் பற்றினர்; உடனே கயமுகன் அக்கினியைப்போற்சீறி மேருவுக்கொப்பாய்த் தங்கக்கட்டுகள் பூண்டுமணிகளசையும் பெரியவில்லைவளைத்து அண்டங்களதி ரக்குணத்தொனிசெய்து அளவற்றகொடியபாணங்களைப் பிரயோகிக்க அவை களெரிந்து புகைந்துவருவதை விநாயகர்கண்டு தமதுகரத்தில்விளங்கும் எழு வாயுதத்தினுற் பொடிசெய்து மேலும் அவன்கரத்திற்பற்றிய வில்லையுங்கண் டித்தார், அதனுற்பாதகன்வெகுண்டு மற்றொருசிலையையெடுத்து வளைப்ப தற்கு முன்னம்கணபதி தேவர்கள் கரங்களைப்புடைத்து நகைக்க அதனையுந் துண்டிக்க, அவன் வலியதண்டமொன்றை எடுத்துச்சுழற்றிவீச, அதையும் முறித்து அவன்மார்புபிளக்கமோதினர். அதனுற்கயமுகன் சோபமுற்றுத் திகைத்து நிற்பதைக்கண்ட இராக்கதசேனைகளும் படைத்தலைவரும் திர ண்டு, திவ்வியபாணங்கள்தண்டம் பிண்டிபாலம் எழு மழுமுதலிய ஆயுதங் களைச் சோனைமாரியைப் போலச்செலுத்தி, சிங்கநாதங்கள்செய்தார்கள், அப்போதுகணபதி தமது திருக்கரத்திலிருந்தபாசத்தைவீசி, மேலிட்டுவரும் படைகளையும் இரதகசதுரகபதாதிகளையுங்கட்டி, உடனேகணிச்சியைச்செலு த்தி சின்னபின்னப் படக்கண்டித்தார் அதைக்கயமுகன்கண்டு நடுங்கிவருந்தி னன். அச்செயத்தைப் பார்த்ததேவர்கள்இறைவனைப்புகழ்ந்து கூத்தாடினர் கள், அப்போது அந்தஇராக்கதன்கோபமுற்று, பாசுபதமுதலிய தேவர்படை களை ஒன்றின்பின்னென்றுகப் பிரயோகிக்க, அவைநெருங்கி ஐயனது பாத கமலங்களிற்பணிந்திருப்பதையறிந்து கோபமும்மானமும் மனத்தைவாட்ட ஒன்றுந்தோன்றுதுகலங்கியிருந்தான். அத்தருணத்தில் ஐங்கரக்கடவுள், நாம் ஏவியபாணங்கள் அவனைக்கொல்லாதகாரணமென்னென்று சற்றுயோசித்து தமதுகோட்டினென்றை முறித்துச்செலுத்தினர். அதுவிரைந்துவந்து, கய முகனையிருகூருகப்பிளந்துதள்ளி, வானத்தெழுந்து, கங்கையின்மூழ்கிவந்து, சிவகுமாரன்கரத்தில்நின்றது. அப்போதுமேகங்கள் நழுவிவிழுந்ததைப்போல வும் சமுத்திரம் கரைகடந்து பெருகியதற்கிணையாகவும் உதிரவெள்ளமிரை ந்துபெருகக்கயமுகன் தேரில்விழுந்தான்.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே! அவனுதிரம்பரந்து தோய்ந்த இடம் அக்காலத்தினுஞ் செங்காடெனப்பெயர்பெற்று விளங்குகின்றது, பின்பு கயமுகன் சிவபிரானிடத்திற்பெற்ற வரமுயற்சியினுல் அங்கு மண்விண்மூடத் தக்கபருத்தவடிவினையும் அக்கினியைப்போலச் சிவந்தகண்களையும்பெற்ற பெருச்சாளியாகிச்சீறிப்பாய்ந்து வரும்போது அசலன்தோளிலிருந்த கண பதியோ, அதன்முதுகிலாரோகணித்து, நம்மைச்சுமந்து திரிவாயென்றுநடத் தினர். அக்காலத்தில் இந்திரன்முதலானதேவர், கயமுகப்பாதகன் இறந் தான், இன்றுடன் நமது இடர்நீங்கிப் பிழைத்தோமெனக்களித்து, ஐயன் புகழைப் பாடிக்குதித்து, பஞ்சதருக்கள் மலரைப்பொழிந்து, சிருட்டி திதி சங்காரந் திரோபவ மனுக்கிரகமென்னும் பஞ்சகிருத்தியங்களையுநடாத்தவல்ல இறைவனே! அடியோங்கள் துன்பங்களைநீக்கிக்காக்க இக்கோலங் கொண்

டெழுந்தருளினீர், உம்மால் விதிக்கப்பட்ட வேதங்கள் இன்னமுந் தேவரீர்பெருமைகளை அறிந்தனவல்லவாயின், எளியோங்களாற்புகழ்தற் கெளியனவோ? தாய்தந்தையாகிய இறைவனே! பிள்ளைகள் புகழ்தலைப் பரிவுடன் கேட்டருள்கவென்றேத்த, அதை விநாயகர் இன்புறக்கேட்டு, அவர்களிடத்துங் கிருபாநோக்கம்பாலித்து இராக்கதரால் இறந்த பூதப்படைகளை எழுப்பினர். அவர்களும் பகவானைச் சேவித்துச் சூழ்ந்தார்கள். இச்செய்திகளை மந்திரியாகவிருந்த இராக்கதராசன் அறிந்து, சுக்கிராசாரியனை வணங்கிப்புலம்பி, பறவையுருக்கொண்டுபோய்மகமேருச்சாரலினொளித்திருந்தான். சுக்கிரனும் அவ்வாறேசென்று தன்பதியைச்சேர்ந்தான். அத்தருணத்தில் பூதப்படைகள் கெலிப்புடன் மதங்கநகரத்திற்போய், படையெடுத்த இராக்கதனைக்கொன்று, பட்டணத்தையும் அழித்துத்திரும்பிவந்து சூழ்ந்தகாலத்திற் செயபேரிவெற்றிச்சங்கங்கள்முழங்க விநாயகப்பிரான் அவ்விடத்தைக் கடந்து, பிரமன் முதலானதேவர்கள் சூழ்ந்துபோற்றிவரச் செங்காட்டுக்கொரு பாரிசத்திலே தாண்டவேசுவரனாகிய தமதுதாதையை தாபித்துப்பூசித்தார், அத்தலம்கணபதீச்சுரமென் றிக்காலத்தினும் விளங்குகின்றது. பின்பு செந்தாமரைக்கண்ணன் பாம்பாய்த் தவஞ்செய்திருக்கின்ற பாலைவனத்தின் மார்க்கமாக விநாயகக்கடவுள்வந்தார். அதையறிந்து விஷ்ணுமூர்த்தி அவரைஎதிர்கொண்டு தொழுதவுடன் பாராசத்திசாபம் நீங்கித் தமதுவடிவைப்பெற்று, மீளவுஞ்சேவித்துப்போற்றி, ஓங்காரப்பொருளே! தேவரீரைத் தரிசித்தவுடன் பழியுடலைநீங்கி ஈடேறினேன், ஆதலால் அடியேன் தேவரீரைப்பூசித்து வழிபடவேண்டுமென்றிரப்ப, அவர் இரங்கி அவ்வாறேமுடிக்கக்கடவாயென்றருளினர். உடனேதிருமால் அருச்சனைக்கு வேண்டுந் திரவியங்களைச்சேகரித்து, கங்கையினால் அபிடேகஞ்செய்வித்து, கற்பகமலர்களினலருச்சித்து, மோதகம் பயறு திரட்டுப்பால் கனிவர்க்கங்களை நிவேதித்தபின்பு தூபதீபங்கள்முதலான சோடசவுபசாரங்களைச் செய்து, கரங்களைக்கூப்பிநின்று, சுவாமீ! இந்தப் பாத்ரபதசுத்தசவுத்தியில் யான்பூசித்தபடிக்குச்சகலரும் ஆராதிக்கவும் அவர்வினைகளைநீக்கிச் சகலசம்பத்துக்களையும் கடாட்சித்து மோட்சவீட்டையும் தருவதாக வரமருளவேண்டுமென்று போற்றினர். அவ்வாறேவிநாயகக்கடவுள் தந்தருளியபின்பு ஆகுவாகனத்தில் ஆரோகணித்து, பிரமன்முதலானதேவர் துதித்துவரப்பூதப்படைகள் களித்துச்சூழத் திருக்கயிலையையடைந்து, பிதாவைச்சேவித்து, பழையபடியே தமதிருக்கையிலெழுந்தருளினர். அக்காலத்தில் விஷ்ணுமுதலானவர் பரமசிவத்தை வணங்கிப் போற்றி, மீண்டும் விநாயகரைத்தொழுது, எங்களிடையூற்றைத்தீர்த்துப்பாதுகாத்தீர், இதற்குக்கைம்மாறுசெய்ய அடியேங்களாற் கூடாமையால் நேற்றையவரையிற் கயமுகாசுரனுக்குச் செய்தபணிவிடைகளைத் தேவரீருக்கு நடாத்த விரும்பினோம். அவைகளை அங்கீகரித்துக் காக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அவர் மகிழ்ந்தருளினர். அக்காலத்தில் தேவர்கள் மும்முறைகுட்டிக்கொண்டு, செவிகளைப்பற்றிப் பாதங்களைச்சேர்த்து தாழ்ந்தெழுந்து போற்றிசெய்து, இறைவனே! இவ்வாறு உலகத்தார்பூசித்து நடந்து

கொள்ளவும் அருளிச்செய்வாயென்று கேட்டுக்கொண்டபடியே தந்தருளி விடைதாப்பெற்று, தங்கள் பதவிகளிற்சேர்ந்து, சுகத்திலிருந்தார்கள். மதாங்காரச்சம்பத்தையுடையத்க்கனே! பரமசிவம் புத்திரனைத்தந்தகாரணம் இதுவாகும். இனி இறைவனுக்கடுத்த குணத்தைக்கேட்பாயாக. நற்குணங்களையுடைய யோகிகளாலும் அறிதற்கரியசிற்குணனாய் நிராமயமாய்ப் பராபரமாய் விளங்கும் பரமவசித்தின் காரணங்களைச் சொல்லமுடியுமோ? ஆயினும் சிலவற்றைத்தெரிவிப்போம். பரமேசுவரன் தாம் இவ்வுலகத்தைப் படைத்த காலத்திற் சிவராசிகளினது பாசபந்தங்களைநீக்கிக்காக்கக்கிருபையுற்று பிரமன் விஷ்ணுவுக்குச் சிருஷ்டி திதியென்னுந் தொழில்களைக்காட்டி, அவைகளுக்குரியகுணங்களையுங் கருணைபாலித்து, சங்காரகிருத்தியத்தைமுடிக்க உக்கிரமில்லாது கூடாதாகையால் தாமதகுணத்தைமேற்கொண்டு, அத்தொழிலினைத்தாம்நடத்திவருவார், இதன்பிரிவுகளைவிரிவாகவேதங்கள்விளக்குகின்றன. இறைவன் தமோகுணத்தனாயின், சனகாதியருக்குச் சரியை கிரியை யோகம் ஞானமென்னும் அருநெறிகளின் பயன்களைப்போதிக்கவல்ல சாந்தகுணசத்துவமெப்படிகைகூடும்; சுருதிகள் ஆதிமூலமெனத்துதிக்குமோ? அஞ்ஞானவான்களுக் கிந்தரகசியங்களைப்போதிக்கமுடியுமோ? பரமசிவம் முடிவில் இறுதிசெய்த பண்பினால் தமோகுணனென்று குறிக்கப்பட்டதல்லது வேறன்று இதைப்போலவேசிருட்டி திதி கிருத்தியங்களை நடத்துகின்றவர்களுக்குள்ள இராசதசாத்துவிதகுணங்களுஞ் செயற்கையல்லது இயற்கையாகச்சொல்லப்படுமோ? முக்குணங்களையும் உண்டாக்கியவன் பரமசிவனென்றுவேதங்கள் முறையிடுகின்றன. யோகிகளானும் அவன்செயல் அறியப்படாது. பிரமவிஷ்ணுமுதலானோரிடத் தமர்ந்து தமதுமகிமைகளொன்றும் அவர்களுக்குத் தோற்றாமல் அந்தரான்மாவாய் விளங்கிச் சகலகருமங்களையும் நடப்பிக்கும் இறைவன் ஒருகுணச்சார்பினிற்பவனோ? சிவன்கடையிற் பிராணிகள் இளைப்பாற லயப்படுத்துந்தன்மையைக்கருதி அஞ்ஞானவான்கள் தாமதனெனச் சொல்வதல்லது வேறல்லவென்று ததீசிமுனிவர் பலதிருட்டாந்தங்களைக் காட்டி, மேற்கூறியவிபரங்களைச்சொல்லவும் தக்கனனவன்மின்னலையொத்த வாழ்வின்மயங்கி, அவைகள் உண்மையென்றெண்ணாமல் ஆணவத்தழுந்தி, முனிவரே! கேளும் பலவாகச்சொல்வதிற் பயனில்லை, கயிலைவாசியாகிய உமது கடவுள் ஆதியேயாயினும், அவனுக்கு அவிகொடுக்கமாட்டேன், என் வீண்வார்த்தையாடுகின்றாய், நானெண்ணியவாறே முடிப்பேன், போமென்று சொல்ல, அவ்விருடிக்கு அதிககோபமுண்டாயது, அக்கொடுமையினால் வடவைகுளிர்ந்தும் மேருமுதலான குலகிரிகள் கம்பிதப்பட்டுஞ் சத்தசாகரங்கள் சுவறியும் அண்டங்கள்குலுங்கியுந் தேவர்நடுநடுங்கியும் உலகங்கள் தத்தளித்தலைந்துவருந்துவதைத் ததீசிமுனிவர்கண்டு, இப்பாதகன்பொருட்டு இப்படியே உலகங்கள் வருத்தப்படலாமோவென்று சீற்றத்தைத்தணித்தெழுந்து தக்கனைப்பார்த்து, உலகநாயகன் வேதநாயகன் போதநாயகன் நீதநாயகனாகிய பரமசிவத்தையிகழ்ந்துசெய்யும் உன்வேள்வியழிவதோடு அபவாதத்துக்குஞ் சாமலும் உண்மையைக்கண்டித்துப்பேசாமலும் மிரளவிழித்துக்கொண்டு இவ்

விடத்திலிருக்கின்ற தேவர் சின்னபின்னப்பட்டு மாளக்கடவரென்று சபித்து யாகத்தைவளர்க்கின்ற மாதவரைநோக்கி, உங்கள்குலவண்மையையும் வேதவொழுக்கத்தையும்மறந்து இக்கருமத்துக்குடன்பட்டதால் பூமியிலிருபிறப்பாளராகப்பிறந்து அலைந்து சுருதிகள்துதிக்கும் பரமசிவத்தையும் அவனடியாரையும் விபூதி ருத்திராக்க பஞ்சாக்கரத்தையும் நிந்தித்தும் பாசத்தழுந்தி வேதவிதிப்படியே யொழுந்தவராய்க் கதிபெறுதுழலக்கடவீரெனப் பலவசைகளைப்பேசி, அளவற்றதவத்தர் இருமருங்கினுஞ்சூழ்ந்துவரத் தமதாசிர்மத்தைச்சேர்ந்தார். அக்காலத்தில் அவருடன் தக்கன்மகிமைகளும் தவமுயற்சியும் இலக்குமிவிலாசமும் வன்மையும் மனச்செருக்கும்போய்விட்டன.

கேட்டீர்களோ நைமிசாரணியவாசிகளே! இவ்வகையாகக் கொடுமைபேசித் ததீசிமுனிவர்சென்றதருணத்தில் தக்கன்துவசமற்றது. வானத்திற்சஞ்சரிக்கின்ற கழுகு காக்கைகள் யாகத்தம்பத்தினிடத்தி லிறங்கிக்கூவின, அத்தலத்திலிருந்தார்மனந் திடுக்கிட்டன. அவன்தேவியாகிய வேதவல்லி மங்கிலியம் அற்றது, இவ்வாறு அளவற்ற துர்நிமித்தங்கள்விளைந்தன. இவைகளைத் தக்கன்கண்டுஞ் சற்றும்யோசியாமலும் மனஞ்சலியாமலும் எச்சனாகிய யாககுருவுந்தானுமாக வேள்வித்தொடக்கத்திற்செய்யுந் தானாதிகிரியைகளை நடாத்தி, விஷ்ணுமுதலாய தேவாங்கிசங்களை வேதவிதிப்படியே தத்தந்தானங்களில் ஆவாகனஞ்செய்து பூசித்து, சோடசவுபசாரங்களையுந் தானங்களையும் வரன்முறையாகநடத்தி, அமுதத்துக்கொப்பான அன்னமும் பதார்த்தவகைகளும், மதுரமிகுந்த பருப்பும் புத்துருக்குநெய்யும், பால் தயிர் சிற்றுண்டி, கனிவருக்கங்களும், பனிநீர் மான்மதச்சாந்தம், கற்பூரக்கலவை, திவ்வியபரிமளமிகுந்த புட்பமாலிகைகளும், வாசந்திமிர்ந்த அடைகாய்முதலியவைகளைக் காமதேனு பற்பலசுவைகளாக நிரப்பியிருப்பதை ஆகுதிகளுக்கு ஆராதனைசெய்யத்தொடங்கி,பிராமணரையொருபுறத்தினும் மற்றவரையொருபாரிசத்தினும் போசனச்சாலைகளில்விட்டு பரிமாறுகின்ற உண்டிகளின்சிறப்புக்கண்டு ஆராமைமேலிட்டுத் தன்னைப்புகழ்ந்து சமுத்திரம்போல ஆர்ப்பரித்துவந்தவர்களைமுகமலர்ந்து உபசரித்து, வரவழைத்துப்பந்திதிருத்தி, பொற்பள்ளயங்களைப்பரப்பி, போசனங்களைப்படைத்து, பந்துக்களைப்போலப் பரிவாய்வேண்டியதைப் பரிமாறச்செய்தான். அப்போது பசிதீரவுண்டும் மதுரமாயிருப்பதால் இன்னம்படையென்பார்சிலர், இந்தத்திவ்வியபோசனத்தை மிகுதியாகப்புசிக்கப் பிரமனைநோக்கித் தவஞ்செய்து பசியுண்டாக்கிக்கொள்ளாமற்போனோமென்பார்சிலர், இப்புசிப்பைக்கொள்வதற்கு ஆயிரம்பதினாயிரம்வாயும்வயிறு முள்ளவர்களுக்கும் அமையாதென்பார்சிலர், அதுவும்போதாதென் றுவாதாடுவார்சிலர், இவ்வன்னமுதலானவைகளைக் காமதேனுஅளித்ததென்பார்சிலர்,இனிஎக்காலத்தில் இக்கச்சாயவகைகள் அகப்படப்போகிறதென்றுதிருத்தியாகச்சாப்பிடுதுமென்பார்சிலர், தக்கன்யாகம் சிதையுமென்பார்கள், அப்படிக்கு நேருமாயினும் இதுசரீரத்துக்கு உறுதியாயிருக்கும், குறைவில்லாமல் உண்பீரென்பார்சிலர்,இந்தப்புசிப்பைவிடவும்போகவிலலை,வயிறுங்கொள்ளவில்லை, இப்படியெங்கும் பார்த்ததுமில்லை, இதன்பிரயோசனத்தினால் இனி

